# சர்வ உருபிகரம்

இ. தியாகலிங்கம்

Sarva Uruupiharam
(A new Novel from Norway)

**இந்த நாவல்...**
**ஈழத்து இலக்கியப் பிதாமகரும்...**
**அடியேனின் இலக்கியத் துரோணரும் ஆகிய அமரர் எஸ்.பொ அவர்களுக்குக் காணிக்கை.**

## அத்தியாயம் 1 குரன்லாண்ட்

'பரதேசி நாயே! சுருட்டுகிறது எல்லாம் சுருட்டி முடிய, நீ ஜீப்பிலை 'கித்தைக்கு (ஓய்வு காலத்தைக் கழிக்க மலைகளில், கடற்கரைகளில் அல்லது ஏரிக்கரைகளில் இருக்கும் சிறிய வீடு) போரா என்ன? என்னை ஏமாற்றின உனக்கும், உன்ர கூட்டத்துக்கும் ஒழுங்கான பாடம் படிப்பிக்காமல் நான் விடமாட்டன். இருந்துபார்... நான் ஆரெண்டு உங்களுக்குக் காட்டிறன்' பேசியவண்ணம் திடீரெனச் சங்கர் பாய்ந்து சிவகரனைத் தாக்கச் சென்றான். தமிழ்க் கடைக்குள் திடீர்க் கலவரம் உண்டாகிற்று. பொருட்களையும், படக்கொப்பிகளையும் பார்த்த வண்ணம் நின்ற பெண்களும், ஆண்களும் அதிர்ச்சியோடும், மிரட்சியோடும் மூலைகளுக்குள் ஊமைகளாக அவசரமாக ஒதுங்கினர். அவர்களின் பிள்ளைகள் அவர்கள் பின்னே பருந்திடம் தப்ப ஒளிக்கும் கோழிக்குஞ்சு போலப் பயத்தோடு மறைந்தனர். ஒரு கணம் இடியோசை கேட்ட நாகம் போல மனிதர்களை நிசப்தமும், பயமும் அசையவிடாது கெட்டியாகக் கட்டிப் போட்டது. ராமு விரைவாகச் சமாளித்த வண்ணம் பாய்ந்து சங்கரைப் பிடித்தான். ஹரியும் நிலைமையை உணர்ந்தவனாக ராமுவிற்குத் துணையாகத் தானும் சங்கரைப் பிடித்தான். சங்கர் அதையும் மீறி வெள்ளைக்காரனிடம் அகப்பட்ட கட்டைப்பொம்மன் போலத் திமிறினான். சங்கரைப் பிடித்திருக்கும் துணிவில் சிவகரன் வெள்ளைத் துரை போல நெஞ்சை நிமிர்த்திச் சங்கரை நளினமாகப் பார்த்தான். இதைப் பார்த்த ராமுவிற்கு இருவரையும் மோதவிட்டால் என்ன என்பதாகத் தோன்றியது. தமிழரின் மானத்தை மீண்டும் ஒருமுறை குரன்லாண்ட்டில் வைத்து ஏலம்போட மனமில்லாதவனாய் ராமு அவனை வெளியே இழுத்து வந்தான். சங்கர் தொடர்ந்தும் கட்டைப்பொம்மன் அவதாரத்தில் கால்கள் நிலத்தில் படாது துள்ளினான்.

குரன்லாண்ட் இன்றும் வழமை போலப் பரபரப்பில். ஹரிக்கு குரன்லாண்ட்டைப் பார்க்க ஒருவித அனுதாபமாய், வெறுப்பாய், கோபமாய், கவலையாய் மனது புகைந்தது. பல்கலாசாரமெனச் சொற்களால் பவள முலாம் பூசினாலும், இது சுதேசிகளால் வெறுக்கப்படுகின்ற பகுதியென்பது உள்ளங்கை நெல்லிக்கனி. இங்கு பாகிஸ்தானியரின் ஆதிக்கம் போய், இலங்கையரின் ஆதிக்கம் வந்து. அதுவும் இப்போது போய்ச் சோமாலியரின் ஆதிக்கம் வந்துவிட்டது. ஐரோப்பாவில் கறுப்பரோடும், ஆசியரோடும், முஸ்லீம்களோடும் இருக்க விரும்பாத சுதேசிகள் மெதுவாக அவ்விடங்களைவிட்டுக் கழன்று விடுவார்கள். தனித்து விடப்படுகின்ற வெளிநாட்டவரை மட்டும் கொண்ட பகுதியை, இரண்டாம் உலகமகா யுத்தத்தின் புதிய எச்சங்கள் என்பதான உண்மையை மறைக்க, பல்கலாசார சுவர்க்கமாகச் சித்தரிப்பதில் அவர்களது ஊதுகுழல்கள் வெற்றி காணும். இது தங்கள் குறைகளில் இருந்து தப்பிக்கும் நுட்பமான தந்திரம் என்பதைச் சிந்திப்பவர்கள் புரிந்துகொள்வார்கள். இந்தப் பகுதி சுவர்க்கம் இல்லை நரகம் என்பதே

உண்மை. வாழ்பவர்களின் அனுபவம் அதற்கு வலுவான ஆதாரம். ஊரிலே பள்ளதிக்கு, முக்கியதிக்கு எனப் பிரித்தது போல இங்கு கறுப்பர்கள், ஆசியர்கள், முஸ்லீம்கள், ஏழ்மையானவர்கள், பணக்காரர்கள் எனப் பிரிவு காட்டிச் செல்லும் சுதேசிகளுக்கும் குறைவில்லை. இனவாதம் கதைப்பதற்கு எங்களுக்கோ, சாதிபற்றிக் கதைப்பதற்கு இவர்களுக்கோ எவ்வித தார்மிக உரிமையும் கிடையாது. என்றாலும் படிப்பது தேவாரம் இடிப்பது சிவன்கோவில் என்பதான நடைமுறையே எங்கும் தொடர்கிறது.
குரன்லாண்ட் ஒஸ்லோவின் ஒரு பகுதியாக, பாவப்பட்டவர்களின் இருப்பிடமாக, குற்றவாளிகள் நிறைந்த வேற்று இனத்தைச் சார்ந்தவர் செறிந்து வாழும் குடியிருப்பாக, கட்டிடங்கள் பாழ்பட, கண்ட சித்திரங்களும் அதில் கேட்பாரற்றுக் குடியேற, கள்ளத்தனமாக இடம்பிடித்த ஓவியங்கள் கவனிப்பார் இன்றி நிரந்தர ஆட்சி செய்ய, போதைப் பொருள் பாவிப்போரின் சரணாலயமாக, சிற்றாடையோடு நோர்வேப் பெண்கள் போனால் காம வீறுகொண்டு அலைபவர்களாக அவளைப் பார்க்கும் அந்நியர் நிறைந்த இடமாக, சொந்த மதத்தைத் தவிர வேறு எந்த நிறுவனத்தையும் மதிக்காத சிலரின் ஆதிக்கம் ஓங்க, முன்பு வாழ்ந்தவர்களின் பிழையாலும், இப்போது வந்தவர்களின் பிழையாலும், நிரந்தரமாக இம்சிக்கப்பட்ட ஒரு பகுதியாக, ஒஸ்லோவில் தலைகுனிந்து நிற்கிறது.

‘சீ என்ன உலகமடா இது? பல்கலாசாரமா அல்லது பாழ்பட்ட கலாசாரமா?’ ஹரிக்கு ஒன்றும் விளங்கவில்லை. குரன்லாண்டுக்கு விரும்பியோ விரும்பாமலோ வரவேண்டிய கட்டாயங்கள் பல. மரக்கறி வாங்குதல்... வீடியோக்கொப்பி எடுத்துப் படம் பார்த்தல், சிலவேளைகளில் சமைத்த சாப்பாடு வாங்குதல் போன்றதாக முளைத்துக்கொண்டே இருக்கும் முடிவிலிகளான தேவைகள். இங்கு வந்து போவது தீ மிதிப்பதான அவஸ்தையைக் ஹரிக்குத் தருகிறது.

‘என்ன விடுங்க. அந்த நாய்க்கு நல்ல உழக்கு ஒண்டு உழக்கிப்போட்டு வாறன். என்னை ஒருக்கா விடுங்கோவன்.’ கூறியவண்ணம் சங்கர் ராமுவை உதறிவிட்டு ஓட முயற்சித்தான். ராமு அவனைக் கெட்டியாகக் கட்டிப் பிடித்தான். ஹரியும் தனது சிந்தனைக்கு முற்றுப்புள்ளி வைத்துச், சங்கரை இறுக்கிப் பிடித்துக் காரை நோக்கி அழைத்துச் சென்றான்.

‘என்ன விடுங்க. அவனை ஒரு கை பாத்திட்டு வாறன். பிளீஸ் என்ன ஒருக்கா விடுங்கோ. இவங்களுக்கு எல்லாம் அடியப் போல அண்ணன் தம்பி உதவமாட்டான்.’ என்றான் சங்கர். மிஞ்சினால் கெஞ்சுவார் கெஞ்சினால் மிஞ்சுவார் என்பது ஹரிக்கு ஞாபகம் வந்தது. அந்த எண்ணத்தைப் புறந்தள்ளிய ஹரி,

‘நீங்க அவனை அடிச்சா கைவிட்டுப் போனது வந்திடுமே? தேவையில்லாமல் உங்களைத்தான் ஜெயில்ல போடுவாங்கள். காசையும் குடுத்திட்டு ஜெயில்ல வேற போய் இருக்கப்போறியளே?’ என அவனை அமைதிப்படுத்த முயற்சித்தான்.

‘அண்ண தயவுசெய்து அமைதியா இருங்கோ. இவங்களுக்கு அடிச்சா உங்களுக்குத்தான் மரியாதைக்கேடு. எல்லாத்தையும் நீங்கள் முதல்ல யோசிச்சு இருக்கோணும். அப்ப உங்களுக்குக் கண்மூடித்தனமான உணர்ச்சியில ஒண்டும் தெரியேல்ல. இப்ப காலம் கடந்தாப்பிறகு குறிசூடுகிற கம்பி பட்ட நாம்பனாட்டம் துள்ளினா எப்பிடி? முள்ளிலபட்ட சீலைமாதிரித்தான் உங்கட பிரச்சனை. முள்ளி வாய்க்காலோட முடிஞ்சுபோச்செண்டு விட்டா உங்களக்கு வரவில்லை. விடாட்டி அவங்களுக்குத் தொல்லை.’

‘இவங்களையெல்லாம் கொலை செய்யோனும். அப்பதான் இனிமேலைக்கு இப்பிடிப் பேக்காட்டமாட்டாங்கள்.’ என்றான் சங்கர் கோபமாக.

‘அதுக்கு இங்க வேற வழிகள் இருக்குது. இப்பிடிக் கொத்துறன், வெட்டுறன் எண்டு மடத்தனமாக வெளிக்கிடக்கூடாது’ என்றான் ராமு.

‘ஓ… பொலிஸ் சட்டம் ஒழுங்காக இயங்குகிற நாட்டிலதானே நாங்கள் இப்ப இருக்கிறம்? அவங்கள் எப்பிடிச் சட்டத்தை மதிக்கிறாங்களோ அப்பிடி நாங்களும் அதை மதிக்கோணும். இல்லாட்டி எங்களைப் பார்த்து அவங்கள் காட்டுக்கூட்டம் எண்டு பதுங்க, அவங்கடை பொலிசைப் பார்த்து நாங்கள் ஓடுற மாதிரி இருக்கும்.’ என்றான் ஹரி.

இதைக் கேட்ட ராமு சிரித்தான்.

‘அதெல்லாம் சரிதான். இருந்ததைக் கொடுத்திட்டு, இப்ப பிச்சை கேட்டு அவங்களைத் தேடித் திரியவைச்சதை நினைக்கத்தான் வலிக்குது!’ என்றான் சங்கர்.

‘எனக்கும் உங்கட வேதனை, இழப்புப் பற்றித் தெரியும். அதுக்காக இன்னும் இழக்கிறமாதிரி நடந்தா எப்பிடி? ஏற்கனவேதான் ஒண்டையும் யோசிக்காமல் செய்திட்டியள். ஓம் போட்டுக்கொண்டு இருந்தியள். இனியாவது ஏன், எதுக்கு எண்டு கொஞ்சம் ஆறுதலாக இருந்து யோசிச்சு, அதன்படி நடப்பமே? என்னண்ண நான் சொல்லுறது சரியே?’ என்றான் ராமு.

‘நீர் சொல்லுறது எல்லாம் சரிதான். எண்டாலும் ஊரை முறிச்சு வாயிலை போட்டவன்ர நெஞ்சு நிமித்தலைப் பாத்தீங்களே?’ என்றான் சங்கர்.

‘எல்லாத்துக்கும் ஒரு முடிவுகாலம் வராமலே போயிடும் அண்ணை? உதைப்பற்றி நீங்கள் யோசிக்கிறதை விட்டிட்டு, ஏதாவது உருப்படியாகச் செய்யப்பாருங்கோ. இப்பிடியே யோசிச்சு யோசிச்சு மண்டைய விடுகிறதில என்ன பிரயோசனம் இருக்குது கொஞ்சம் சொல்லுங்கோ பார்ப்பம்?’ என ராமு தொடர்ந்தும் சமாதானம் சொன்னான்.

‘நீ சொல்லுறது சரி தம்பி. நாங்கள் இப்பிடி ஏமாறுவம் எண்டு கனவுகூடக் கண்டதில்லை. எல்லாம் ஒரு கனவுமாதிரியே நடந்து முடிஞ்சு போச்சுது. கடைசியில நான் மட்டும் ஓட்டாண்டியாகிட்டன். ஏமாத்தினவன் சொகுசாக, தினாவெட்டா ஜீப்பில திரியிறான்.’ கூறிய சங்கர் தன்னைக் கட்டுப்படுத்த முடியாதவனாய்ப் பொருமத் தொடங்கினான். ராமுவிற்கும், ஹரிக்கும் அது பெரும் சங்கடமாய்ப் போய்விட்டது. சிறிது நேரம் எதுவும் பேசாது இருவரும் இருந்தார்கள். பின்பு ஹரி தன்னைச் சுதாகரித்துக் கொண்டான்.

‘சரியண்ணை கண்ணைத் துடையுங்க. மனதை தேற்றித் துணிவா இருங்கோ. ராமு காரையெடு. சங்கர் அண்ணையைக் கொண்டுபோய் வீட்டில விடுவம்.’ என்றான். சங்கர் எந்த எதிர்ப்பும் கூறாதவகையில் நிம்மதி அடைந்த ராமு வாகனத்தை இயக்கினான்.

## அத்தியாயம் 2 குடில்

இலங்கைக்கு அல்லது இந்தியாவுக்குப் போக முடியவில்லை என்கின்ற ஏக்கம் அக்கினி உலையாக அவன் நெஞ்சை இடைவிடாது எரித்தது. அந்தத் தீய்ந்த மனதின் நினைவுகள் அவன் இதயத்தை வேதனையால் இறுக்கியது. விஸ்வரூபம் எடுத்த ஏக்கம் நெஞ்சுக்கூட்டிற்குள் சொருகி வைக்கப்பட்ட பிளேற்றாக உறுத்தியது. அந்த உறுத்தலால் மனம் மேலும் இரணமாக வலித்தது. இரத்தம் சொட்ட அறுத்ததாய் வேதனை ஒழுகியது. ஐரோப்பிய நாடுகளுக்கு மட்டும் எத்தனை முறை போய்வருவது என்கின்ற சலிப்பில் இம்முறை அவன் எங்கும் போகவில்லை. திடீரென மனைவியும், பிள்ளைகளும் இந்த நாட்டின் சுதந்திரத்தை வரித்து, அவன் விருப்பை மதியாது, மலேசியா போய்விட்டார்கள். அவனை அதிரடித் தனிமை தாக்கியது. பிள்ளைகள் ஓடிவிளையாடிய இந்தப் பெரிய வீட்டில் அவனுக்குத் தனித்து இருக்கப் பிடிக்கவில்லை. புதிதாக வாங்கிய கித்தைக்கு ஒரு முறை போகவேண்டும் என்று அவன் முடிவு செய்தான். ‘இந்த விடயத்தைத் தெரியாமல் தமிழ்க் கடையில் சொல்லி, அந்த எரிச்சல் பிடிச்ச சங்கர் பாய்ந்து விழுந்தான்’ என்பதான அந்தச் சம்பவம் பற்றிய நினைவு அவன் மனதில் இன்னும் நரகவேதனையாகக் கொழுந்துவிட்டு எரிந்தது. அது மீண்டும் மீண்டும் மனதைச் சுட்டு நீறாக்கியது. ‘பிச்சைக் காசைக் கொடுத்துவிட்டு என்ன துள்ளுத் துள்ளுகிறான்? ஒன்றும் செய்ய முடியாது. காற்றுத் திசைமாறிப் போய்விட்டது. என் கை விட்டு நழுவியதை அவர்கள் திருப்பித் தரப் போவதில்லை. என்கையில் இருப்பதை நான் காவு கொடுக்க முடியாது. இனிமேல் அடக்கி வாசிக்க வேண்டும்’ என்பதாக எண்ணிய போது அவனுக்கு வெறுப்பாய், அந்தரமாய்ப் போயிற்று. கையில் இருந்த பத்திரிகையைக் கோபத்தில் சுழற்றி எறிந்தான். அது ஒரு மூலையை நோக்கி விழுந்து, இழுபட்டுத், தலைவிரி கோலமாச் சிதம்பி, அனாதரவாய்க் கிடந்தது. அவன்

சோபாவில் தொப்பென்று விழுந்தான். நாரியைப் பின்தள்ளி இருந்தான். இருப்பினும் அவனுக்கு வாழ்க்கை வெறுத்தது.

சிறிது நேரத்தில் மனம் கேட்காது எழுந்து வெளியே எட்டிப் பார்த்தான். கோடை காலத்துச் சூரியனுக்குக் குடைபிடித்து வானம் இன்று சிணுசிணுத்து அழுதது. அது புதிய ஜீப்வண்டியை மீண்டும் மீண்டும் காசு கொடுக்காது கழுவும் பணியாற்றியது. சிறிது நேரம் அதையே பார்த்த வண்ணம் நின்றவன் திரும்பி உள்ளே சென்றான். தனக்குத் தேவையான உணவுப் பொருட்களைச் சிறிய காவிச்செல்லக் கூடிய குளிர்காப்புப் பெட்டிக்குள் எடுத்து வைத்தான். பின்பு தேவையான உடுப்புகளையும் எடுத்து ஒரு பையில் வைத்தான். திடீரென முக்கியமான விடயம் ஒன்று ஞாபகத்திற்கு வந்தது. அவன் தனது வீட்டில் இருக்கும் சிறிய மதுக் களஞ்சியத்தைத் திறந்து பார்த்தான். அதில் இருந்த விஸ்கிப் போத்தல் ஒன்றை தூக்கிக் குளிர்காப்புப் பெட்டிக்குள் வைத்தான்.

மீண்டும் வெளியே பார்த்தான். வானம் தொடர்ந்தும் சூரியனைத் தொலைத்து விட்டதாகத் துக்கத்தோடு ஏங்கி ஏங்கி அழுதது. 'ம்... இதையெல்லாம் பார்க்க முடியாது' என எண்ணியவன் பொருட்களை முதலில் வீட்டு வாசலில் கொண்டு வந்து வைத்தான். பின்பு றெயின்கோட்டை எடுத்து அணிந்தான். குளிர்காப்புப் பெட்டியையும், உடுப்புப் பையையும் எடுத்துக்கொண்டவன் வெளியே இறங்கினான். கையில் கொண்டு வந்த பொருட்களை ஜீப்பில் வைத்துவிட்டு அதை இயக்கினான். ஜீப்வண்டி உயிர் பெற்று ஒளியைப் பாச்சியது. சிவகரன் வாகனத்தைப் பிரதான வீதிக்கு இறக்கி யோவீக் என்னும் இடம் போகும் பாதையில் திருப்பினான். பின்பு வேகத்தை அதிகரித்து றம்மன் செல்லும் பாதையில் செலுத்தினான். சிறிது நேரத்தில் அப்பாதையை விட்டு விலகி வர்கன் செல்லும் பாதையில் பயணித்தான். அப்பாதையில் வேகத்தைச் சிறிது தணித்த போது யாரோ தன்னைப் பின் தொடர்வதான ஒரு உணர்வு அவனுக்கு ஏற்பட்டது. கண்ணாடியில் யாரும் தெரிந்தவர்கள் அல்லது தமிழர்கள் வருகிறார்களா என்று பார்த்தான். அப்படி யாரும் வருவதாக அவனுக்குத் தெரியவில்லை. பின்னால் வாடகைக்குக் கொடுக்கப்படும் வொல்வோ வண்டி ஒன்று வந்தது. அது தூரத்தில் வந்ததாலும், மழை பெய்ததாலும் அதில் யார் வருகிறார்கள் என்பது அவனுக்குத் தெளிவாகத் தெரியவில்லை. பின்னுக்கு வருபவர்களைப் பார்க்கும் ஆர்வத்தில் அவன் வேகத்தைக் குறைத்தான். பின்னே வந்த வேறு ஒரு வண்டிக்காரன் கோணடித்துவிட்டு, அவனை விலத்திச் சென்றான்.

'இது எல்லாம் என்னுடைய மனப்பிரமை.' என எண்ணியவன் பின்னுக்குப் பார்ப்பதை நிறுத்திவிட்டு வண்டியின் வேகத்தைக் கூட்டினான். 'இது எல்லாம் தேவையில்லாத பறநொயிட் (paranoid) எண்ணம்' என மீண்டும் எண்ணினான். நீரை

இருகரையும் சிதறடித்த வண்ணம் வண்டி யெயிலோ செல்லும் பாதையில் வேகமாகச் சென்றது. சிவகரனுக்கு இப்போது வயிற்றில் அமிலம் ஊற்றெடுக்கத் தொடங்கிற்று. மனித பிண்டத்தின் என்றும் ஓயாத பிணியான பசி. ஒரு எரிபொருள் நிலையத்தில் நிறுத்திப் 'பொல்சர் (Hot dog) வாங்கிச் சாப்பிட்ட பின்பு செல்லலாமென எண்ணினான். அடுத்து வந்த எரிபொருள் நிலையத்தை அண்டி அவன் காரின் வேகத்தைக் குறைத்தான். அப்பொழுது அந்த வொல்வோ வேகமாக அவனைக் கடந்து சென்றதைக் கண்டான். அதில் யார் சென்றார்கள் என்பதைப் பார்க்கப் பிந்தியதில் சிவகரனுக்கு மீண்டும் தன்மீதே கோபமாகவும், எரிச்சலாகவும் இருந்தது. 'சரி. தேவையில்லாத விடயங்களில் மனதைக் குழப்பாமல் எனது அலுவலைப் பார்ப்போம்.' எனத் தனக்குத் தானே சமாதானம் சொல்லியவன், எரிபொருள் நிலையத்திற்குள் புகுந்தான். சிறிது நேரத்தில் ஒரு ஐஸ்கட்டிப் பொதியை எடுத்துச் சென்று குளிர்காப்புப் பெட்டியில் வைத்தான். ஐஸ் இல்லாது விஸ்கி குடிப்பது அவனுக்கு அறவே பிடிப்பதில்லை.

*

வானம் பூமியிடம் விவாகரத்துப் பெற்றதாகத் தொடர்ந்தும் கண்ணீர் வடித்தது. ஒருவாறு பயணத்தின் இலக்கான தனது ஓய்வு இல்லத்தை வந்தடைந்தான். அவனது கித்தை சராசரி நோர்வே மக்களின் கித்தையைவிடப் பெரிதாக வீடு போன்று இருந்தது. கூலிவேலை செய்து இப்படியான கித்தைகள் வாங்க முடியாது. அதற்காக மற்றவனின் வசதியைக் கண்டு அந்தரப்படும் சனத்தைக் காணும் போதெல்லாம் சிவகரனுக்குப் புண்ணில் மிளகாய்ப் பொடி பட்டதான எரிச்சல் உண்டாகும். முப்பது லட்சம் கொடுத்து வாங்கிய அழகான, ஆடம்பரமான, வசதியான கித்தை அது. அந்தக் கித்தைக்குப் பின்புறமாக ஒரு சிறிய தகரக் கொட்டில் இருந்தது. அங்குதான் எரிப்பதற்குத் தேவையான விறகுகள் அடுக்கி வைக்கப்படும்.

ஒருபுறம் அழகான ஏரி பரந்து விரிந்து கித்தையின் கால்களைத் தொட்டுத் தடவித் தாலாட்டியது. மறுபுறம் அடர்ந்த மரங்கள் தனிமையை உறுதிப்படுத்தி கொள்ளிக் கண்களைத் தூரத்தில் நிறுத்தி வைத்தன. சிறிது தூரம் நடந்தால் மலைக்கு ஏறிச்செல்லும் பாதை வருகிறது. மலையின் உச்சியில் இருந்து வெண்புகைத் தூவானமாக, வெள்ளிக்கம்பிகளை உள்ளே புதைத்து கீழிறங்கும் அருவி. அதன் அடிவாரத்தில் அழகிய கன்னியின் இடையென நெளிந்து, நீல நீர் சிந்திக் கைவீசிச் செல்கின்ற அருவி. பிரதான வீதியிலிருந்து கித்தைக்கு இறங்குமிடத்தே ஒரு மறைவான இடம் இருந்தது. வாகனங்கள் தரித்து நிற்பதற்கான இடம் அது. சிவகரன் தனது காரை அங்கே நிறுத்தினான். அதிலிருந்து கித்தை வரைக்கும் மண் படாமல் நடந்து வருவதற்குத் தார்ப்பாதை போடப்பட்டிருந்தது. அவன் அதில் நடக்கலானான்.

மழை பெய்துகொண்டு இருந்தாலும் அவனுக்குக் குளிரவில்லை. மழையின் குளிர்மை அவனுக்கு மிகவும் பிடித்துக்கொண்டது. கைகளை நீட்டி மழைத்துளிகளைப் பிடிக்க வேண்டும் என்கின்ற எண்ணம் அவனுள் எழுந்தது. கையில் இருந்த குளிர்காப்பு பெட்டியும், உடுப்புப் பையும் அதற்கு இடம் கொடுக்க மறுத்தன. அவன் அந்த ஏமாற்றத்தை புறந்தள்ளிக் கித்தையை நோக்கி நடக்கலானான். நாளைக்காவது சூரியனைக் கண்டுவிட வேண்டும் என்கின்ற அடங்காத ஆவலோடு சிவகரன் அலார்மை நிறுத்திவிட்டுக் கித்தைக்குள் புகுந்தான்.

உள்ளே சென்ற சிவகரன் தொலைக்காட்சிப் பெட்டியை இயக்கினான். கொண்டு வந்த பீசாவை எடுத்துச் சமையல் அறை மேசையில் உருகப் போட்டான். அது சிறிது நேரத்தில் குளிர் துறந்து வேகவைக்கத் தயாராகிவிடும் என்பது அவன் கணிப்பு. வீட்டிற்குள் சுத்தமான காற்று வரவேண்டும் என்பதற்காகப் பல்கணிக் கதவைத் திறந்தான். மழை தற்காலிகமாக நின்றிருந்தது. பல்கணியால் தொடர்ந்து செல்லும் படிக்கட்டு ஏரி நீரை வாஞ்சையோடு முத்தமிட்டுப் பின் வக்கிரமாய் அதனுள் சங்கமித்தது. ஏரியோ தனிமையின் ஏக்கத்தைப் போக்கச் சிவகரனை வா வா என்றது. சிவகரன் படியில் இறங்கிச் சென்று நீரைக் கைகளால் அள்ளி முகத்தில் அடித்தான். பின்பு பாதணியைக் கழற்றிவிட்டு அதில் கால் திணித்து அலம்பினான். வெளியில் நிற்பது இதமாய் இருந்தாலும் உடல் அலுப்பின் உச்சம் அவனை முறித்து எடுத்தது. சற்று நேரம் அதில் இருக்க வேண்டும் என்ற எண்ணத்தை மழையின் ஈரலிப்பு மறுதலிக்க அவன் மனம் சலித்தான்.

மனம் சலித்த சிவகரன் மீண்டும் வீட்டிற்குள் திரும்பிச் சென்றான். பிளாக்லேபலைக் குளிர்காக்கும் பெட்டியில் இருந்து வெளியே எடுத்தான். அதன் குளிரில் வியர்த்த பொன்னிற மேனியின் அழகைத் தடவித் தடவி இரசித்தான். அதைப் பலமுறை மோகத்தோடு இதழில் வைத்து ஸ்பரிசித்துப் பார்த்தான். பின்பு அதன் கன்னித் தன்மையை அழித்து ஐஸ்கட்டி நிறைந்த கண்ணாடிக் குவளையில் ஊற்றினான். மீதமிருந்த ஐஸ்கட்டிகளை டீபிறிசருக்குள் போட்டுவிட்டுக் குளிரான அந்தக் கண்ணாடிக் குவளையோடு வந்து சோபாவில் அமர்ந்தான். அதில் ஒரு மிடறு உறிஞ்சியவனுக்கு ஏதோ அந்தரமாய் இருந்தது. நினைவுகள் அவன் இன்றைய இருப்புப் பற்றிச் சுழன்றது.

இன்று அவனிடம் பணம் இருக்கிறது. கணக்கு இல்லாது வைத்திருக்கும் கறுப்புப் பணம் நிறைய இருக்கிறது. வசதி இருக்கிறது. குடும்பம், போகம், உறவுகள் இருக்கின்றன. இருந்தும் நிம்மதி மாத்திரம் எங்கோ தொலைந்து போய்விட்டது. அதன் ஏக்கம் எப்போதும் அவனை இடைவிடாது விட்டுக் கலைக்கிறது. அது ஒரு போதும் தனது இரும்புப் பிடியை தளர்த்துவதாக அவன் உணருவதில்லை. சிவகரன் தொடர்ந்தும் சிந்தனையில் ஆழ்ந்தான்.

‘இப்போது வைத்திருக்கும் பணம் என்னும் செல்வம், கூலிக்காரனாய் அன்றாடம் வேலைக்குச் சென்று உழைத்துப் பெறமுடியாத வளம். உழைத்து மிச்சம் பிடித்து இவ்வளவு பணத்தையும் இந்தக் குறுகிய காலத்தில் சேர்க்க முடியாது. அதற்காக நாங்கள் சிறுகூலிகூட இல்லாது உழைக்க வேண்டும் என்று எவனும் எங்களைக் கேட்க முடியாது. அது நியாயமாகாது. ஒப்பாரி வைக்கும் தமிழ்நாட்டு அரசியல்வாதிகளுக்கு எவ்வளவு பணம் போயிருக்கும்? இது என் பங்கு. எனக்கு வந்து சேரவேண்டிய உழைப்பின் பங்கு. தெருவில் நின்று அந்தரப்படுபவனுக்காய் நான் எதையும் தானம் செய்ய முடியாது. போதிதர்மானகப் போகும் எண்ணமும் எனக்கில்லை. தொழிற்சாலை வேலை முடிந்து வந்து முன்பு அப்பாடா என்று தொலைக்காட்சி பார்த்த நிம்மதி அலாதிதான். அது எங்கோ தொலைந்து போய்விட்டது. அந்த ஏக்கத்தின் அழுங்குப்பிடி தொடர்கிறது. அதில் இருந்து கணம்கூட தப்ப முடியவில்லை. அந்த மூச்சடைப்பு நித்திய அவதியாய் தொடர்கிறது. இந்தப் பணம் வசதியானவர்களிடம் வாங்கிய பணம்தானே? அதற்காக எனது நிம்மதிக்கு ஏன் பங்கம் வரவேண்டும்?’ என்பது சிவகரனுக்குப் விளங்கவில்லை. அவன் தொடர்ந்தும் சிந்தித்தான்.

‘எனது முயற்சிக்கும், பிரயத்தனத்திற்கும் கிடைத்த பலன்தானே இது? எவ்வளவு கஸ்ரப்பட்டிருப்பேன்? எத்தனை வீடுகள் ஏறியிறங்கியிருப்பேன்? எத்தனைபேர் எத்தனை திருகுதாளம் போட்டிருப்பார்கள்? புறங்கையால் காகம் துரத்தும் தமிழர்களிடம் வாங்குவதற்கு எத்தனை வல்லமை வேண்டும்? எத்தனைபேர் வீட்டிற்குள் இருந்த வண்ணம் கதவைத்திறக்காது மௌனம் சாதித்திருப்பார்கள்? தெருவில் வள்ளலாக நடிப்பவன் வீட்டிற்குள் நப்பியாக ஒளிப்பதை நான் பார்த்தவன். பிள்ளைகளைவிட்டு தாங்கள் வீட்டில் இல்லையென்று பொய் சொல்லுவார்கள் என்னிடம் பிடிபட்டார்கள். பிள்ளைகள் கள்ளமில்லாது உண்மை சொன்னபோது அவமானத்தில் அவர்கள் நெளிந்தார்கள்.

இந்த மனிதர்களைப் புற்றுக்குள் இருந்து வெளியே இழுத்துவர எத்தனை பாடுபட்டிருப்போம்? நரியைப் போல நாற்றம் விடுவதற்குத் தெரிந்திருந்தால் இன்னும் எத்தனை பேரை வெளியே இழுத்து வந்திருக்கலாம். இந்த இழுப்பில் கோபமுற்ற எத்தனைபேர் எனக்கு அடிக்க வந்திருப்பார்கள்? எத்தனைபேர் பிற்காலத்தில் இது தங்களுக்கு உதவும் எனவும், தங்களுக்கு ஈழத்தில் அமையப்போகும் அரசின் சலுகைகள் கிடைக்கும் என்பதற்காகவும், மனதில் அழுது, உதட்டில் சிரித்து, எண்ணி எண்ணிக் குரோணரைத் தந்து, பற்றுச்சீட்டுக்களை பத்திரமாகச் சேர்த்து வைத்த வண்ணம் பல்லை இளித்திருப்பார்கள்.

இந்தப் பணப்புரட்சியானது விருப்பத்தைவிட, விடுதலை வேட்கையைவிட, எங்களின் உழைப்பிற்கும், ஆக்கினைக்கும் கிடைத்த பரிசல்லவா? எங்கோ இருந்த தலைவரை இங்கு பிரசன்னமாக்கியவர்கள் நாங்கள் அல்லவா? இதில் பெரும்பகுதி பணம் சனங்களால் அவர்களின் எதிர்கால சுயநலத்திற்காகத் தூவப்பட்ட பிச்சையல்லவா? அதில் எங்களுக்கு ஒரு சிறு துளி கசிந்தால் ஏன் இந்தச் சனத்திற்கு வைத்தெரிச்சல் வரவேண்டும்? எங்களின் இந்த உழைப்பு இல்லாது போனால் எத்தனை சக்கரங்கள் தளத்தில் அசையாது நின்றிருக்கும்? அப்படி ஸ்தம்பித்திருந்தால், தலைவரின் படை ஈழத்தில் பட்டினி அல்லவா கிடந்திருக்கும்?

நன்றி கெட்ட சனங்கள். எல்லாம் நல்லாய் முடிந்திருந்தால் என் காலையும் நக்கி இருப்பார்கள். பிழைத்துப் போய்விட்டது. அடியோடு சறுக்கிவிட்டது. மலையாக நின்றது மண்ணாகப் போய்விட்டது. பணத்திற்காய் வீரவசனம் பேசியவர்கள், வல்லரசுப் பிசாசுகளைத் தப்பாக இடைபோட்டு, தளத்தில் காகிதத்தில் வீடு கட்டிவிட்டார்கள். முள்ளிவாய்க்காலில் முற்றுமாய் கர்ணனுக்குக் கிடைத்த சாபத்தில் புதைந்த தேர்போலப் புதைந்து போய்விட்டது. அதற்கு நான் என்ன செய்ய முடியும்? யார் இப்படியெல்லாம் நடக்குமென்று எதிர்பார்த்தார்கள்? நடந்துவிட்டது. மாற்றமுடியாது அது நிலைத்து விட்டது. பகைவனுக்குப் பகைவன் நண்பன் என்பதாய் இந்தியாவின் பகை எம்மைப் பழிவாங்கிவிட்டது. இரும்பு மனுசியும், இத்தாலியப் பெண்ணும் வேறு என்பது வரலாற்றுப் பதிவாகிற்று. இரும்பு மனிசியின் மைந்தனைப் பறித்து, அவதியாய் ஒரு இனத்தின் முகவரியை மாற்றியாயிற்று. எல்லாம் முடிந்தபின் எனக்கு எதற்கு இந்த அரசியல்?

என் சொத்தின் மேல் இப்போது ஆயிரமாயிரம் கொள்ளிக் கண்கள் படுகின்றன. அவற்றை விற்றுவிட்டு வேறு நாட்டிற்குத் தொலைந்து விட்டால் நிம்மதி. யோசிக்க வேண்டும். இதற்கு என்ன செய்வதென ஆழமாக யோசித்து முடிவு எடுக்க வேண்டும்.' எனப் பலவாறு சிந்தித்த வண்ணம் மீண்டும் கண்ணாடிக் குவளையை எடுத்து வாயருகே கொண்டு சென்றான். அப்போதுதான் விஸ்கி இல்லாத வெறுங்குவளையை வைத்திருப்பது அவனுக்குப் புரிந்தது. அவன் மீண்டும் எழுந்து சென்று குவளைக்குள் விஸ்கி ஊற்றி, அதற்குள் ஐஸ்சும் போட்டுக் கொண்டு சோபாவிற்கு வந்தான். திடீரென ஏதோ ஒரு வாகனம் தெருவில் பிறேக் அடித்தது போலச் சத்தம் கேட்டது. தொடர்ந்து எந்தச் சத்தத்தையும் அவனாற் கேட்க முடியவில்லை. அது பிரமையாக இருக்க வேண்டும் அல்லது தொலைக்காட்சியில் போயிருக்க வேண்டுமென எண்ணிய சிவகரன் விஸ்கியில் ஒரு மிடரை மீண்டும் இழுத்தான். தொலைக்காட்சிப் பெட்டியின் சத்தத்தைக் கூட்டினான்.

‘ரீவி3 இல் கரிசன்போட்டின் ‘வித்னஸ் என்னும் படம் போனது. ‘ம் சாட்சி… அது இல்லாமலே இருந்திருக்க வேண்டும். ம்… இலங்கை அரசுக்கு மாத்திரம்தான் அது முழுமையாக விளங்கி இருக்கிறது. அப்படித்தான் அவர்கள் நினைத்திருந்தார்கள். ஆனைக்கும் அடி சறுக்கும். அவர்களும் கூண்டில் ஏறும் காலம் வரலாம்.’ என எண்ணியவன் கதையோடு மெதுவாக ஒன்றத் தொடங்கினான். விஸ்கி இறங்க, இறங்க உடம்பு சூடாகியது. பார்வை கூர்மையாகியது. தொலைக்காட்சியில் போகும் படம் மேலும் வைரத்தில் ஓவியம் போல்த் தெளிவாகத் தெரிந்தது. பறக்கும் உணர்வில், மதுவின் கிறக்கத்தில், அடியெடுத்து வைத்தவனுக்கு மேலும் விஸ்கி வேண்டும் என்பதான தவுனம் உண்டாகியது. சிவகரன் எழுந்து சென்று மேலும் விஸ்கி ஊற்றி வந்தான்.

மீண்டும் சோபாவில் வந்து இருந்தவனுக்கு ஓவனின் வெக்கையும் உள்ளே போன மதுவும் சேர்ந்து உடலை அனலாய்ச் சூடேற்றியது. அவனுக்கு ஏதோ கோபம் வந்தது. அதன் பயனாக சில வியர்வை முத்துக்களை அவன் உடல் கண்ணாடிக் குண்டுமணி போல ஈன்றது. அவை அவனின் தோலில் பரந்து பின்பு கசகசத்தது. அவன் எழுந்து சென்று பல்கணிக் கதவை மீண்டும் சிறிது அகலமாகத் திறந்துவிட்டான். இருளில் ஏரி தழுவிக் குளிரோடு நளினமாக வந்த காற்று அவனை இதமாக உரசிச் சென்றது. அந்தக் கணங்கள் மனைவி இல்லாத குறையைக்கூட அவனுக்கு மறக்கடித்தன.

## அத்தியாயம் 3 அறிமுகம்

இனி இந்தக்கதை இரண்டு தளத்தில்…

வார்டோவில் சில காலங்களுக்கு முன்பு…

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்து ஏழாம் ஆண்டு ஆவணிமாத முடிவில் இந்திய இராணுவம் இலங்கையில் காலடி எடுத்து வைத்தது. ஈழத்தமிழர் தனிநாடு கிடைத்ததான சந்தோசத்தில் பூரித்துப் போயினர். இரும்புப் பெண் ஈழத்தமிழர்களின் இதயத்தின் உயர் பீடத்தில் உறைந்த தெய்வம். தெய்வத்தின் புத்திரன் அருளிய வரமாக அதைச் சாமானியர் நினைத்தனர். அவர்கள் சுதந்திர தாகம் தீர்ந்து போன பின்பு வந்த, வசந்தகாலக் கிரக்கத்தில் யதார்த்தம் மறந்தனர். அப்போதுதான் ஹரியும் வடதுருவ நகரான வார்டோவில் காலடி வைத்து ஒரு மாத காலம் ஆகியிருந்தது. இலங்கையில் பிரச்சனை தீரப்போகின்றது என்கின்ற எண்ணமே அங்கு வாழ்ந்த தமிழர்கள் பலருக்கும் அடிவயிற்றைப் பிரட்டும் செய்தியாக அமைந்தது. முதல் மாதச் சம்பளத்தை வாங்கியவுடன் அதை இலங்கை ரூபாய்க்குப் பெருக்கிப் பார்த்து, மலைத்துப் போனவர்கள் அதிகம். அதன் மயக்கத்திலும், கனவிலும், கடந்து வந்த வாழ்வை மறந்து

போனவர்கள் பலர். இந்திய இராணுவம் இலங்கையில் இறங்கிப் பிரச்சனையைத் தீர்த்து வைக்கப் போகின்றது என்கின்ற செய்தி அவர்களைக் கதி கலங்க வைத்தது. அது கையில் இருந்த தேனைப் பறித்துவிட்டு வேப்பெண்ணெய்யை அதற்குப் பதிலாகத் தந்த செயலாகக் கசந்தது.

'இன்னும் ஒரு வருடம் கழித்து இந்தப் பிரச்சனையைத் தீர்த்து இருக்கலாமே? அப்படி என்றால் இலட்சாதிபதிகளாக நாம் நாடு திரும்பி நிறைவான வாழ்க்கையை ஆரம்பிக்கலாமே? எல்லாவற்றையும் நாசம் செய்வது போல ஏன் இந்திய இராணுவம் இலங்கையில் இப்போது இறங்கியது? ஏன் அவர்கள் எங்கள் வயிற்றில் மண்ணை அள்ளிப் போட்டார்கள்?' என்பதான சுயநல வேதனையைக் ஹரியிடம் சிலர் வாய்விட்டுச் சொன்ன போது, அவனுக்குக் கோபமும், பரிதாபமும் ஏற்பட்டது. நாட்டுப் பிரச்சனை தீருவதைத் தங்கள் சுயநலத்திற்காய்த் தீர்க்கக் கூடாதென்று எண்ணுவதை நினைக்கும் போது அவனுடம்பில் அனல் பற்றி எரிந்தது. அதேவேளை இன்னும் சிலகாலம் உழைத்துக் கொண்டு போகலாமே என்கின்ற அவர்களது ஆசையில் மண் விழுந்ததை எண்ணப் பரிதாபமாகியது. யார் எப்படிப் போனாலும் நான் மட்டும் நன்றாக வாழவேண்டும் என்பது யாழ் மைந்தரின் புத்தியென அவன் எண்ணினான்.

அப்பொழுது வார்டோத் தமிழர்கள் அமைதியை நன்கு சுகித்தனர். வேலை என்பதே முக்கியமான கருமமாகிவிட்டதால் அதற்கே வாழ்வின் முழு அர்ப்பணிப்பையும் கொடுத்தனர். அவர்கள் வாழ்வு வேலைக்கு மட்டும் என்று ஆகியது.

அது ஒரு கோடைக்காலம். தமிழர்களின் இலட்சியமான வேலைக்குப் பஞ்சமில்லை. தமிழர்கள் நிறைய வியர்வைச் சிந்தினர். சிலவேளைகளில் இரவு பத்து மணி வரையும் மேலதிக வேலை செய்தார்கள். வேலை செய்து முடிய மிஞ்சிய நேரத்தில் ஏதாவது சமைத்துச் சாப்பிட்டுவிட்டுத் தூக்கத்திற்குச் செல்லுதல் வழமையாகியது. இந்த வேகமான வாழ்வு வில்லங்கமான கேள்விகளையும், ஆராய்ச்சிகளையும் உறைபனியில் போட்டு வைத்தது. அவை உறைந்து போன நுண் கிருமிகள் போல அவரவர் அடி மனதில் காலம் பார்த்துச் சந்தர்ப்பம் என்னும் சூட்டிற்காக ஏக்கத்தோடு காத்திருந்தன.

மத்திய கோடு எங்கே? துருவம் எங்கே? இவ்வளவு தூரத்தைத் தாண்டித் தாங்கள் வந்திருப்பது ஹரிக்குச் சிலவேளை வியப்பை உண்டுபண்ணும். ஒஸ்லோவில் இருந்து இரண்டாயிரம் கிலோமீற்றர்கள் பயணம் செய்துதான் வார்டோவிற்கு வரமுடிந்தது. இந்த இடப்பெயர்ச்சியும் அதன் வேகமும் ஹரிக்கு அதிர்ச்சியோடு புதுமை தந்தன. சிலர் உயிரைப் பாதுகாக்க வேண்டிய தேவை வந்ததால் இலங்கையில் இருந்து நோர்வேக்கு வந்தார்கள். சிலர் பணம் சம்பாதிப்பதற்கு நாட்டுப் பிரச்சனையை ஒரு காரணமாக்கி வந்தார்கள். பின்பு எல்லோரும் குரோணரை இலங்கை ரூபாய்க்குப் பெருக்கிப்

பார்த்துவிட்டு, வேலைக்காக வாழ்க்கை என்பதாக தங்களை மாற்றினர். மூசி... மூசி... வேலை செய்வதில் சுவர்க்கம் கண்டனர். ஏதோ ஒன்றில் ஐக்கியமாகும் போது சுவர்க்கம்தானே?

வார்டோவில் வாழ்ந்த நோர்வே மக்களுக்கு இவர்களின் வரவு அதிசயமாகிற்று. பத்திரிக்கையில் பிரசுரிக்குமளவிற்கு அதற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. கறுத்தத் தோலைக் காணாத வெள்ளைப் பெண்களின் கண்களில் ஆசை மின்னியது. அதுவே சந்தேகமாய் வெள்ளைத் தோல் இளைஞரின் மனதில் தீயாய்ப் பற்றியது.

உள்ளூர்ப் பத்திரிக்கை ஒன்று பேட்டி எடுக்க வந்தது. ஹரியும் ஒரு மீனைத் தூக்கிப் பிடித்த வண்ணம் பல்லிளித்து, விளம்பரம் கொடுத்தான். ஆயுதம் தூக்க வேண்டிய கைகள் அப்போது மீன் தூக்க வேண்டி வந்ததில் அவனை ஒருவித இயலாமை தாக்கியது. பருவாய் இல்லை. மீன் வெட்டும் கத்தியை ஆயுதமாகத் தூக்கி, மீனை வெட்டத் தன்னைப் போராளியாக்கினான்.

தளத்தில் ஆயுதம் தூக்கும் உரிமை மறுக்கப்பட்டது, அவன் அடி மனதில் புதைந்து கிடக்கும் நெருஞ்சி முள்ளாய் நெருடும். இருந்தும் யார் குத்தி என்றாலும் அரிசியாகட்டும் என்று அவன் தன்னைச் சமாதானம் செய்துகொள்வான்.

ஈழப்போராட்டத்தில் இயக்கம் என்கின்ற சகதிக்குள் இறங்கிக் கற்ற நல்ல பாடங்களில் ஒன்றாக எந்தத் தொழிலையும் யாரும் செய்யலாம் என்கின்ற உன்னதமான எண்ணம் அவனிடம். இயக்கம் தந்த பாடத்தோடு முற்போக்கு எண்ணமும், சில பொறுக்கிய மார்க்சியக் கருத்துக்களும் அதற்கு உதவி செய்தன. அதற்கு மேல் இடம், காலம், தேவை என்பன பிடரி பிடித்துத் தள்ளின. தொழிலை வைத்து மனிதனை மதிப்பிடுதல் தப்பு என்பது இங்கு தவிர்க்க முடியாத யதார்த்தமாகியது. அதைப் பரீட்சித்துப் பார்க்கும் சந்தர்ப்பம் அவனுக்குக் கிடைத்தது. ஹரி மிகவும் மகிழ்ச்சியோடு அதை ஏற்றான். ஹரி மாத்திரம் அல்லாது இயக்கத்தை விட்டு வெளியேறி வந்த பல இளைஞர்களும் கற்றதொன்று நடைமுறையொன்று என்கின்ற பிளவு இல்லாது, இதுவும் ஒரு தொழிலெனத் தயிரியத்தோடு செய்தனர். அது பாகுபாடற்ற சமுதாயப் பரிணமிப்பாய் வார்டோவில் உருவெடுத்தது. மிஞ்சியவர்களைப் பணம் வாயைப் பிளக்க வைத்தது. கத்தி தூக்குவதும் ஒரு கலை என்பது பின்பு பலருக்கும் தெரிய வந்தது.

ஹரி இங்கு வருவதற்கு முதலே இரண்டாயிரம் கிலோ மீற்றர்களைக் கடந்து படிப்பதற்காகத் தமிழ் பேசுபவர்கள் இங்கு வந்துவிட்டார்கள். ஹரிக்கு அது சற்று வியப்பைத் தந்தாலும், மலைப்பைத் தரவில்லை. யாழ்ப்பாணத்துத் தமிழர்கள் எங்கே வாய்ப்புக்கள் கிடைக்கிறதோ அங்கே அதைப் பயன்படுத்தத் தவறுவதில்லை. அது இங்கும் நிரூபணமாகிற்று.

*

ஈழப் போராட்டத்தில் நண்பர்கள் அவர்களுக்கு நான்கு நாளைக்குத்தான் என்கின்ற கொள்கை இந்திய இராணுவத்திற்கும் பொருந்திற்று. சிங்கள இராணுவத்தை அடக்குவதென்னும் போர்வையில் வந்தவர்களை சீண்டிப் பார்த்து வீரவசனம் பேசப்பட்டது. அரசியல் வங்குரோத்திற்கு அதிசய விளக்கம் சொல்லப்பட்டது. நிரந்தர எதிரியை நம்பி நரித்தன நட்பைப் பகைத்த அரசியல் அரிவரிகளுக்குப் பூமாலைகளும், வரவேற்புகளுமாக ஈழம் களைகட்டியது. இவர்களின் வழிகாட்டல் கடைசியில் இருக்கும் கோவணத்திற்கே சேதமாகும் என்பதைச் சிந்திக்கும் திறனற்றவர்களாய், துணிவற்றவர்களாய் யாழ்ப்பாணத்து மேதையர் உயிர்ப்பிச்சை வேண்டி, மௌனிகள் ஆகினர் அல்லது மகிடி வாசித்தனர். வாழத் தெரியாதவர்கள் வாயைக் கொடுத்து முகவரியை இழந்தனர் அல்லது மூச்சை இழந்தனர். ஈழத்து மக்களின் வாழ்க்கை இன்னும் பல அழிவான சோக அத்தியாயங்களை நோக்கி விரைவாக நகரத் தொடங்கியது. அந்தச் சோக அத்தியாயங்களில் இரத்தமும், உயிர்களும் யுத்தக்காட்டேரிக்குப் பலி கொடுக்கப்பட்டன. அந்த மனிதப் பலியெடுப்பில் உழைப்புத் தேடி ஓடிவரும் கூட்டம் மேலும் பெருகலாயிற்று. அங்கே பிணம் விழுந்தால் இங்கே பணம் விளையும் என்கின்ற ஈனத்தத்துவம் எல்லோருக்கும் நியாயமாகப்பட்டது. அங்கே பிணம் விழட்டும் என்பதாகவே இங்கே மனச்சாட்சியைத் தகனம் செய்து பணம் பணமாய் அவர்களுக்கு அள்ளி வழங்கப்பட்டது. அதை நாட்டுக்குச் செய்யும் சேவையாக, நாட்டுப் பற்றாளர்களாக, தேச அபிமானிகளாக, மெழுகாக உருகும் தியாகச் சுடர்களாக வருணித்தனர். இனவெறியில் கண்ணிழந்து இருந்த தமிழர்கள் இப்படியான உணர்ச்சியெழு வசனங்களைக் கேட்டுப் பந்தயத்தில் ஓடவிட்ட குதிரையில் கொண்ட வெறியுடன் கேள்விகள் அற்று ஆரவாரித்தனர். அள்ளிக் கொடுத்தனர். அங்கு இரணங்களும், பிணங்களும், பிற்காலத்து முடங்களும், விதவைகளும் இவர்கள் பணத்தில் தாராளமாக உற்பத்தி செய்யப்பட்டனர். எதிர்த்துக் கருத்துச் சொன்னவன் துரோகியாக்கப்பட்டான். தூக்கிலிடப்பட்டான். மாற்றுக் கருத்தாளருக்கு மன்னிப்போ, மாற்றமோ இல்லாது மரணதண்டனைப் பட்டியல் தயாரிக்கப்பட்டது. அது சுற்றறிக்கையாக உலகம் எங்கும் சுற்றி வந்தது.

நண்பன், நண்பனின் நண்பன், நண்பனின் நண்பனின் நண்பன், என்பதாக வார்டோவில் ஐந்தாய் இருந்த தமிழர்கள் பத்தாகி, இருபதாகி, விரைவில் மொத்தச் சனத்தொகையின் பத்து வீதமாக உயர்ந்து நின்றது. ஒவ்வொரு அகதியை எடுக்கும் போதும் ஐக்கியநாடுகள்சபை வழங்கும் பணத்தைப் பெற்று, அதைச் செலவழிக்காது சேமிப்பதில் வார்டோ மாநகரசபை ருசி கண்டது. அது என்றும் மலர்ந்த முகத்தோடு தமிழரை வரவேற்றது. செலவு இல்லாத வரவுக் கணக்கு அவர்களுக்குச் செம்மையான இலாபத்தைத் தந்தது.

சமூகத்தின் அடிமட்டத்தில் வாழும் அதிகாரமற்ற மனிதனுக்குக் கிடைக்கும் தகவல்களை ஏகப்பட்ட திரைகள் மறைத்துவிடும். அடிமட்ட மக்களுக்குப் பொதுவாகக் கல்வியறிவும் குறைவாக இருக்கும். அது இங்கும் பொருந்துகிறது. அவர்களில் பலரின் கருத்து சாதாரண மனித ஆசா பாசங்களுக்கு உள்பட்டதாய் இருந்தது. அவர்களுக்கு இப்படி ஏன் இந்தக் கறுப்பர்கள் இங்கு வந்து குவிகின்றனர் என்கின்ற வெறுப்பும், சந்தேகமும் மேலிட்டன. தங்கள் வெறுப்பை எப்படிக் காட்டலாம் என்கின்ற அவஸ்தையில் அவர்கள் துடித்தார்கள். அதற்காகத் தமிழர்களை அவமானப் படுத்தும் விதமாக, காணும் இடங்களில் சிவாட்டிங் (கறுப்பன்) என்று முணுமுணுத்துச் சென்றனர். சில இளைஞர்கள் காரைத் தமிழர்கள் முன்பு நிறுத்தி அவர்களுக்கு மோதிரவிரலைக் குத்தி மேலே காட்டித் தூசனம் சொல்லித் தமது வெப்பியாரத்தைப் போக்கினர். வார்டோ மாநகரசபை எதையும் கண்டுகொள்ளவில்லை. அப்படிக் கண்டு கொள்ளாமல் இருப்பது அவர்களுக்கு வசதியாகிற்று. அவர்கள் அகதிகளால் சேமித்த பணத்தில் புதிய முதியோர் இல்லம் கட்டத் திட்டம் தீட்டினர்.

முதலில் வந்த சில தமிழர்களால் இங்கு தமிழ் வானொலி ஒன்று தொடங்கப்பட்டது. பின்பு தமிழ்ச்சங்கம் இல்லாத ஊரில்த் தமிழர்களா என்று எண்ணி அதையும் தொடங்கினார்கள். சனம் பெருகப் பெருக பிறந்த நாள், கலியாணவீடுகள் போன்ற கொண்டாட்டங்கள் விமர்சையாக நடந்தன. எல்லா வித்தியாசங்களும் எங்கோ ஒளிந்து கொள்ளச், சகோதரங்களாக... எங்கள் உலகம் வேறு என்பதான ஒற்றுமை நிலவிற்று. அரசியல் என்னும் நச்சுக்காற்று அந்தப்பக்கம் கசிந்துவிடாமல் இருந்த இன்பமான காலமாக அது மலர்ந்து மணம் கமிழ்ந்திற்று. அந்த வசந்தம் அதிக காலம் நீடிக்கவில்லை. பணம் எங்கு விளைந்தாலும் அதில் பங்குபோட அவர்கள் வந்து விடுவார்கள். மற்றவர்கள் மேல் தங்கள் கருத்தை வலோற்காரமாகத் திணிக்க அவர்கள் கங்கணம் கட்டுவார்கள். அதற்குக் கண்மூடித்தனமான தேசிய விசுவாசம் வெறிகொண்ட அசுரனாய் வந்து நிற்பான். நின்றான்.

வார்டோவில் இருக்கும் மூளைகளுக்கு வலுப் போதாது என்று ஒஸ்லோவில் இருந்தும், வேறு இடங்களில் இருந்தும் அவர்களின் ஆட்களால் ஆலோசனை வழங்கப்பட்டன. வேறு இடங்களில் இருந்து ஆட்கள் மெதுமெதுவாக அனுப்பப்பட்டுத் தமிழ்ச் சங்கத்திற்குள்ளும், மாநகரசபைக்குள்ளும் இரகசியமாகப் புகுத்தப்பட்டனர். எல்லோரும் எல்லாவற்றையும் மறந்து இருந்த போது முதலில் சிலர் ஊர் தடிப்பைக் காட்டினர். அது தங்களுக்குப் பெருமையென தவளைகளாய் அவர்கள் எண்ணினர். அந்தத் திமிர் அசிங்கமாக சிலரிடம் முன்னுக்குத் துருத்தியது. அதனால் மற்றைய பிளவுகளும் மெல்ல மெல்லத் தலை தூக்கிற்று.

அவர்களின் திட்டங்கள் பெரிதல்ல. எங்கு பணம் புரளுகிறதோ அங்கெல்லாம் தங்களின் அதிகாரத்தைப் பரப்பி, பணத்தை மொத்தமாகச் சுருட்டி அனுப்பவேண்டும். அத்தோடு நேர்வே அதிகாரவர்க்கத்தோடான தொடர்புகளைத் தங்களுக்குள் வைத்துக் கொள்ளவேண்டும். இவை இரண்டிலும் அவர்கள் முனைப்போடு செயற்பட்டனர். தங்களை மீறி மற்றவர்கள் அதிகாரவர்க்கத்தோடு தொடர்பு கொள்ளாது தடுப்பதோடு, அவர்களைப் பற்றி உண்மைக்குப் புறம்பாக அள்ளி வைக்கும் தொண்டினையும் செய்தனர். இதைச் செய்வதற்கு உழைப்புத்தேடி ஓடிவந்த தியாக வீரர்கள் நெஞ்சை நிமிர்த்திய வண்ணம் தயாராகினர்.

போராடும் உரிமைகூட மறுக்கப்பட்டுச், சொந்தச் சகோதரங்களுக்கு எதிராக ஆயுதம் தூக்கக்கூடாது என்கின்ற காரணத்திற்காக, நாட்டைவிட்டு நாடுவந்து, தாமும் தம்பாடுமென இருந்தவரின் மனதில் இதனால் ஆத்திரமும், வெறுப்பும் பொங்கியது. அது குமுறும் எரிமலையாக வெடிக்கும் நாள்பார்த்துக் காத்திருந்தது.

## அத்தியாயம் 4 தேடிய வினை

சடுதியாகப் பிறேக் அடித்துத் தனது காரை நிறுத்தியது அந்த மனிதனுக்குப் பிடிக்கவில்லை. அது அவன்மீதே அவனுக்கு ஆறாக் கோபத்தை உண்டு பண்ணியது. தனது திட்டத்தில் சிறிய கரும்புள்ளி விழுந்ததான உணர்வில் அவன் பதைபதைத்தான். காரைப் பின்னுக்கு எடுத்து அதன் வெளிச்சத்தில் ஏதாவது அடையாளம் தெருவில் பதிந்து உள்ளதா என்று உற்று நோக்கினான். இருட்டில் எதுவும் இருப்பதாய் அவனுக்குத் தென்படவில்லை. பின்பு மெதுவாகக் காரைத் திருப்பி மரங்கள் அடர்ந்த அந்தப் பகுதிக்குள் ஓட்டிச் சென்றான். அங்கு மிகவும் மறைவிடமாகப் பார்த்துத் தனது காரை நிறுத்தினான். இயந்திரத்தை நிறுத்திவிட்டுச் சிறிது நேரம் அப்படியே இருந்து ஏதாவது அசுமாட்டம் தெரிகிறதா என்று உற்று நோக்கினான். எதுவும் அவனுக்குத் தெரியவில்லை. திருப்தியாகக் காருக்கு உள்ளே இருக்கும் மின்விளக்கைப் போட்டான். மீண்டும் ஒரு முறை எவருமே இல்லாத மாயமான அமைதியை அவதானமாக அவன் உறுதி செய்தான். மூன்று மாதத்திற்கு முன்பு டென்மார்க் போன போது ஒரு உறையில் வாங்கி வந்த பொருட்களை இப்போது திறந்து பார்த்தான். அதற்கு வேலை வந்ததையிட்டு அவனுக்கு ஒருவித திருப்தி உண்டாகியது. அவை இதற்கு முதல் எப்போதுமே தீண்டப்படாத, தீட்டுப்படாத பொருட்கள். இன்றுவரைக்கும் அப்பொருட்கள் காத்து வந்த கன்னி கழியாத் தவத்தை இன்றோடு முடிப்பது போல அதைத் தொட்டு ஆசையோடு தன்னை நோக்கி இழுத்தான். பின்பு அந்த உறையை அகலத் திறந்து உள்ளே நோக்கினான். உள்ளே வேட்டைக் கத்தி, கதவைத் தெண்டித் திறக்கும் கூரிய ஆயுதம் ஆகிய இரண்டும் பாதுகாப்பான தோலால் செய்யப்பட்ட உறையில் பொதிந்து வைக்கப்பட்டிருந்தன. அவற்றிற்குக் கீழே பல பொருட்கள் பதுங்கிக் கிடந்தன. உடம்பை முழுமையாக மறைத்துக் கொள்ளும் பிளாஸ்ரிக்கில் செய்யப்பட்ட உடுப்பும்

அதில் அடக்கம். எதுவுமே இலகுவில் ஒட்டிக் கொள்ளாத வழுவழுப்பு அதன் விசேடமாகும். அதன் கமர்பிளாஸ் நிறம் இராணுவத்தை நினைவுபடுத்தியது. மேலும் அந்தப் பையில் கையுறை, கண்ணை மூடிப்போடும் பாதுகாப்புக் கண்ணாடி, முகத்தை மறைத்துப் போடும் தொப்பி, நீரில் நனையாத பாதணிகள், ஒரு சிறிய ரோச்லைட், ஒரு கைவிலங்கு என்பனவும் இருந்தன.

அவன் முதலில் தனது கைகளுக்குக் கையுறை அணிந்தான். மற்றையவற்றை ஒவ்வொன்றாக எடுத்தான். மிகவும் அவதானமாக எந்தத் தவறும் நேராதவாறு ஆறுதலாக அந்த அங்கியை மாட்டினான். அவன் செய்து எடுத்து வரவேண்டும் என்று நினைத்திருந்த ஒரு பொருளை மட்டும் மறந்து போனது அவனது மனதை வருத்தியது. அதற்குப் பதிலாக வேட்டைக் கத்தியை எடுத்தான். காரின் உள்ளே இருந்த வெளிச்சத்தை அணைத்துவிட்டு மெதுவாக வாகனத்தைவிட்டு அந்த மனிதன் வெளியே இறங்கினான். ஓசையெழாது அதன் கதவைச் சாத்திப் பூட்டினான். அப்படியே நின்று சிவகரனின் கித்தையை வெறித்துப் பார்த்தான். அங்கிருந்து சிறு வெளிச்சம் கசிந்தது. அது அவனுக்குத் திருப்தியைத் தந்தது. வானம் மறு திசைக்குப் போய்விட்ட சூரியனை எண்ணி முடிவில்லாது சிணு சிணுத்தது. அவன் மெதுவாக ஏரிக்கரையை நோக்கி நடந்தான். பூனையடி எடுத்து வைத்துப் பதுங்கிப் பதுங்கி அவன் அவதானமாக நடக்கலானான். ஏரியில் இறங்கிக் கால் அலம்பும் படிக்கட்டுகளைப் பார்த்தான். அவன் மெதுவாக அதை எட்டிப் பிடித்து அதில் ஏறித் தன்னை மறைத்தான். பின்பு உள்ளே என்ன நடக்கிறது என்பதை யன்னல் ஊடாக நோட்டம் விட்டான்.

*

சிவகரன் மீண்டும் விஸ்கி எடுத்து வரும் போது பீசாவைச் சுற்றி இருந்த பொலித்தீன் உறையை நீக்கி ஒவினின் உள்ளே வைத்து விட்டுச் சோபாவில் வந்து அமர்ந்தான். மேலும் ஒரு மிடறு விஸ்கியை இழுக்க அவனுக்குத் தலை கிறுகிறுத்தது. உலகம் அவனைச் சோபாவிற்குள் புதைத்துவிட்டு பிரபஞ்சத்தின் மேற்பகுதியை நோக்கிச் சென்றது. சிவகரன் அது ஏற்படுத்திய குளிக்குள் புதைந்தான். அவன் தன்னை மறந்து போதையில் மிதந்தான். திடீரென இயலுமானவரை சத்தமாகப் பேய் போலச் சிரித்தான். இனிச் சிரிக்கத் தேவையில்லை என்பது போல இருந்தது அது. அவனுக்கு அதனால் கண்களில் நீர் கட்டிக் கொண்டது. போதை கவலை தின்னும் அற்புதம் அவனுக்குப் புரிந்தது.

படியில் ஏறி இருந்த அந்த மனிதன் மெதுவாக முன்னேறினான். சிவகரன் உசாராகி விடக்கூடாது என்பதில் அவன் மிகவும் அக்கறை கொண்டான். பல்கணிக் கதவு திறந்து கிடப்பது அவனது வேலையை அரைவாசி ஆக்கிற்று. அது அவனுக்குப் பெரும் நிம்மதியைத் தந்தது. கையில் எடுத்து வந்த கூரிய ஆயுதத்தை அடிப்பதற்குத்

தயாராக இரு கையாலும் இறுக்கிப் பிடித்தான். புலி வேட்டையாடும் மிருகத்தைக் கண்ட பின்பு நடப்பது போல, அடிமேல் அடிவைத்து, அவதானமாக நடந்தான். அவன் கவனம் தனது இரையான சிவகரனில் மூர்க்கமாகக் குவிந்திருந்தது.

திடீரெனச் சிவகரனுக்குத் தலையில் என்னவோ தாக்கியது போன்ற உணர்வு. எல்லாமே இருண்டு போயிற்று. பிரபஞ்சம் ஒரு மின்னல் வெடிப்பாய் அழிந்து போயிற்று. அவன் மயங்குவதை அவனால் ஒரு கணம் உணர முடிந்தது. எவ்வளவு நேரம் மயங்கிக் கிடந்தான் என்பது அவனுக்குப் விளங்கவில்லை. மயக்கம் தெளிந்த போது அவன் அதிர்ந்தான். அவனிடம் இருந்த வெறி பயத்தில் காலால் பயந்து ஓடும் பாம்பாக இறங்க, நிதானம் வலியோடு தலையில் வந்து குந்தியது. உடலில் அவதியாக ஒருவித நடுக்கம் மெல்லப் பரவியது.

முன்னுக்கு முகத்தை மறைத்துத் தொப்பி போட்டிருந்த அந்த மனிதனின் கண்களைப் பார்க்கச் சிவகரனுக்கு முதல் முறை குலைப்பான் எடுத்தது. அவன் சோபாவில் இருந்தான். அவனுக்கும் சிவகரனுக்கும் இடையில் சோபா மேசை இருந்தது. அவனைப் பார்க்க குற்றம் செய்த இடத்தில் ஆதாரம் தேட வந்தவன் போன்று காட்சி தந்தான். இப்படியான உடைகளை கிறிப்போஸ் எனப்படும் குற்றவியல் ஆதாரம் தேடும் நோர்வேப் காவலர்களே அணிவார்கள். இவன் ஏன் இங்கு இப்படி உடையணிந்து வந்து வெருட்டுகிறான் என்பது சிவகரனுக்குப் விளங்கவில்லை. தன்னை ஒரு கதிரையோடு கட்டி வைத்திருப்பதோடு கைவிலங்கும் போட்டிருந்ததை அவன் உணர்ந்தான். அந்த அசைய முடியாத இரும்புப்பிடி சிவகரனின் மூச்சை நிறுத்துவதாக ஆக்கினை தந்தது. அந்த மனிதன் சிவகரனை உற்றுப் பார்த்தான். பின்பு மேசையில் இருந்த பிளாக்லேபிலை உற்றுப் பார்த்தான். பின்புறமாக ரீவி3 இல் வித்னஸ் கடைசிக் கட்டத்தை நெருங்கியது.

அந்த மனிதன் பிளாக்லேபிலைக் கையில் எடுத்து ஆழமாக மோர்ந்து பார்த்தான். விஸ்கியின் மணத்தால் அதன் குணத்தை அறிந்தவன் போல் நிமிர்ந்தான்.
'சனத்தை ஏமாத்தி... அந்தக் காசில பிளாக்லேபல் வாங்கிக் குடிச்சா நல்ல ரேஸ்ரா இருக்குமெல்லே? ம்... ரேஸ்ரா இருந்திச்சா? இன்னும் கொஞ்சம் குடிக்கப் போறியா?' கேட்டவண்ணம் வேகமாகச் சோபாவில் இருந்து எழுந்து சோபா மேசையைச் சுற்றிச் சிவகரனின் கதிரையின் பின்பாக வந்து நின்றான். சிவகரன் அவன் வந்த வீச்சைக் கண்டு நடுங்கினான். 'கொஞ்சம் குடிக்கிறியா?' மீண்டும் கேட்ட வண்ணம் திடீரென சிவகரனின் தலை முடியைப் பிடித்துப் பின்னே இழுத்து வாய்க்குள் போத்தலை வைத்து அழுத்தி, மாட்டுக் கண்டிற்கு மூக்குப் பேணியால் தண்ணி பருக்குவது போலப் பருக்க முயன்றான். சிவகரனுக்கு அவன் இழுத்த இழுப்பில் கழுத்து வலித்தது. அது முறிந்து விடுவதாய் மரண இரணம் பிறந்தது. அவன் வேதனையால் 'ஆ'

என்று வீரிட்டுக் கத்தினான். அடுத்த கணமே வாயை இறுக மூடினான். சிவகரனுக்குப் பருக்கிய மதுவில் பெரும் பகுதி கடைவாயால் வெளியே சிந்துவதால் அந்த மனிதன் கோபம் அடைந்தான். கோபத்தோடு சிவகரனின் தலையில் மீதமிருந்த மதுவை ஊற்றினான். வேகமாகப் போத்தலை ஒரு மூலையை நோக்கி விட்டெறிந்தான். பின்பு சிவகரனைப் பார்த்து,

'நான் இப்பவே லையிற்றரைத் தட்டி உனக்கு நெருப்பு வைக்க முடியும். நீயும் இப்பிடியே எரிஞ்சு சாம்பலாப் போயிடுவா. அது சாவுக்கான கிட்டின பாதையைா இருக்கும். உனக்கு அது மெத்தச் சுலபமான சாவாப் போயிடும். உன்ர சாவுக்கான நீண்ட பாதையக் காட்டுகிறதா இல்லையா எண்டு நீ எனக்குச் சொல்லப்போற பதில்கள்தான் வழிகாட்டும். ரேப்பால சுத்தியிருக்கிறது உன்ன இறுக்குதா? நிமிர்ந்து தயிரியமா இரு. எத்தனையோ அப்பாவியள வெருட்டி இருப்பியள். எவ்வளவோ பணத்தை அபேஸ் பண்ணி இருப்பியள்? அப்பவெல்லாம் நெஞ்ச நிமிர்த்தித் தயிரியமாகத்தானே உலாவி வந்தியள். தயவு செய்து எல்லாத்தையும் பட்டெண்டு என்னிட்டச் சொல்லிப் போடோணும். அப்பதான் நான் நல்லவனா இருப்பன். அதோட சாவுக்கான சுகமான பாதைதான் உனக்குப் பிடிக்குமெண்டு நினைக்கிறன். என்ன நான் சொல்லுறது சரியே?' என்றான் அவன். இப்போது அவன் மிகவும் காரமான குரலில் பேசினான். சிவகரன் துணிவை வரவழைத்துக் கொண்டு பயப்படாதவன் போல் பேசினான்.

'சும்மா வெருட்டாத. நான் ஒண்டும் உனக்குப் பயப்பிடேல்ல. நீ ஒண்டும் என்னைக் கொலை செய்யமாட்டாய். அப்பிடிக் கொலை செய்தா இங்க தண்டனையில இருந்து தப்பிக்க முடியாது. கொலை செய்திட்டுத் தண்டனை இல்லாமல் சுதந்திரமாகத் திரிய இது ஒண்டும் இலங்கை இல்லை.'

'ம்... உண்மைதான். இலங்கை அரசு மட்டுமில்லை உங்கடை, எங்கடை ஆட்களும் கேட்டுக் கேள்வி இல்லாமல் கொலை செய்தார்கள். செய்தவர்கள் எந்தத் தண்டனையும் இல்லாமல் அங்க உலா வந்தார்கள். அதில சிலர் உலகமெல்லாம் பரந்து வாழ்கிறார்கள். அதற்கு மேலும் உங்கட ஆட்கள் வன்னியில குளறக்குளற குழந்தைப் பிள்ளைகளை இழுத்துப் போனார்கள். தேடிப் போய்க் கேட்ட தாய் தேப்பனை எட்டி உதைத்தார்கள். தப்பி ஓடியவர்களைப் பிடித்து வந்து அடித்தார்கள். சிலரைச் சுட்டுக் கொன்றார்கள். பெண்களின் தலைமுடியை மொட்டை அடித்து அவர்களை இலங்கை இராணுவத்தின் வேட்டைக்குப் பலிக்கடாக்களாகத் துரத்தி விட்டார்கள். எதிர்த்தவன் நியாயம் கேட்டவனையெல்லாம் எட்டப்பர்கள் என்றார்கள். மண்டையில் போட்டு மகிழ்ச்சி கண்டார்கள். எங்கடை ஆட்களும் ஏட்டிக்குப் போட்டியாக நடந்தார்கள். நீங்கள் உண்மை பேசின எல்லாரையும் துரோகிப் பட்டம் கட்டினியள். அங்க ஆப்பிட்டவைய லைற்போஸ்ற்றில தொங்க விட்டிச்சினம். ம்... போதாக் குறைக்கு உங்கடை ஆட்கள்

சித்திரவதை முகாம்கள் வைத்து இலங்கை அரசவியந்திரம் செய்யாத கொடுமைகளைக்கூட சொந்த இனத்திற்குச் செய்து, அதிலும் புலமை பெற்றார்கள். சிங்களவன் செய்வதை நாங்கள் செய்தால் என்ன என்கின்ற சமாதானத்தோடு கிழக்கிலங்கையில் எங்கள் பெண்களுக்கே செய்தது பொய்யா? ஆயுதம் கையில் வந்த போது இலட்சியங்களும், ஒட்டுமொத்த மனிதமும் ஒழிந்து கொள்ள சொந்த மொழி பேசும் மிருகங்கள் மாத்திரம் எங்கள் மக்களோடு உலாவின. சுயநலத்தோடு எரியிற வீட்டில் பிடுங்க விரும்பிய அறிவுஜீவிகளும், அரசியல்வாதிகளும் உங்களுக்கு எப்போதும் வக்காலத்து வாங்கினார்கள். மற்றையவர்கள் உயிருக்குப் பயந்து மௌனிகள் ஆகினர். அரச இயந்திரம் பற்றி எனக்குக் கவலை இல்லை. அது வேட்டையாடும் என்பது தெரிந்து கொண்டுதான் போராட்டத்திற்குத் தமிழர்கள் புறப்பட்டார்கள். நாங்கள் எங்கள் சகோதரங்களுக்கு என்ன செய்தோம் என்பது பற்றி முதலிற் கதைக்க வேண்டும். தேசியத்திலும், இனவெறியிலும் கொலை வெறிக்குப் பதில் கொலை வெறி என்பது குற்றம் அற்றதாய் பயிலப்பட்டது. அரசன் அன்றறுப்பான் ஆண்டவன் நின்றறுப்பான் என்பது சரியாயிற்று. இதை நன்றாகப் படித்த பிறகும் உனக்கு இந்தத் திமிர் கூடாது. அணையப் போகும் தீபம் மாதிரி உன் கதை இருப்பது உனக்குப் விளங்கவேண்டும்.' என்றான் அந்த மனிதன்.

'இப்ப என்னை என்ன செய்யப் போகிறா? கொல்லப் போறியா?' சிவகரன் கேட்டான்.

'ம்....ம்... ம்...' அந்த மனிதன் வீடு அதிரச் சிரித்தான்.

'ம்... கொலை என்ன எங்களுக்குப் புதிசா? அவர்கள் சந்தேகப்பட்டாலே கொலை செய்தார்கள். சொந்தச் சகோதரனையே அவனின் சொந்தச் சகோதரனை ஏவிக் கொலை செய்தார்கள். சகபோராளிகளைத் தெருத் தெருவாய்த் துடிக்கத் துடிக்க குற்றுயிரும் குறையுயிருமாய் இழுத்துக்கொண்டு ஊர்வலம் போனார்கள். கொலை அது எங்கள் சமுதாயத்தில் குற்றமற்ற செயல். குளிர்பானம் கொடுத்து வரவேற்ற யாழ்ப்பாணத்தாரை யார் மன்னிப்பார்கள்? கொல்லல் எங்கள் சமுதாயத்தின் புண்ணியச் செயல்களில் ஒன்று. இவ்வுலகத் துன்பத்தில் உழலும் நான் என்கின்ற கூட்டிற்குள் அகப்பட்ட ஆத்மாக்களுக்கு விடுதலை கொடுக்கும் இந்துத்துவ ரட்சனை. யாரால்... யார்... எப்போது... எங்கு... கொல்லப்பட்டாலும் அதற்கு நியாயம் கற்பிக்கப்படும். அதைக் கேள்வியின்றி ஒருகூட்டம் நம்பும். அதைவிட மகா தத்துவம் ஒன்றைக் அவர்கள் கண்டுபிடித்து வைத்திருந்தார்கள்? அது என்ன தெரியுமா உனக்கு? கொலை செய்யப்படுபவன் எப்போதும் எமது இனத்தின் துரோகி. கொலை செய்பவர்கள் எமது இனத்தின் மாவீரர்கள். அவன் கோழி களவெடுத்தவனாய் இருந்தாற்கூடத் தேசத்துரோகியாவான். மருண்டவர்கள் ஆட்சி செய்யும் போது இருண்டதெல்லாம் பேய் என்பதாக அப்பாவிகளும் தேசத் துரோகிகளாய் முத்திரை குத்தப்பட்டார்கள்.'

‘ஐயோ… ஐயோ… பிளீஸ் என்ன விட்டிடு. நான் எதுவுமே செய்யேல்ல. நான் ஒரு அப்பாவி.’

‘ம் அப்பாவி. அப்பாவிகளைக் கொலை செய்யும் போதும் அவர்கள் இப்படித்தான் கதறினார்கள். மன்றாடினார்கள். அவர்களும் இதே சொல்லைத்தான் மீண்டும் மீண்டும் புலம்பினார்கள். ஆனால் நீங்கள் அவர்களை நம்பவில்லை. உங்களுக்கு இரண்டு சொற்கள் ஞாபகம் இருந்தன. ஒண்டு துரோகி. இரண்டாவது மண்மீட்பு. இரண்டிற்குமாக மனிதம் அழித்தீர்கள். அதைவிடு… உன்னை நான் ஏன் நம்ப வேண்டும்? எனக்கு ஒரு நல்ல காரணம் சொல்லு பார்ப்போம்? அப்பிடி நீ சொன்னால் உன்னை நான் உயிருடன் விட்டாலும் விடலாம்.’ என்று கூறி அந்த மனிதன் தன் தாடையைத் தடவிச் சிந்தித்தான். என்ன சிந்திக்கிறான் என்பதைச் சிவகரனால் ஊகிக்க முடியவில்லை.

‘ஐயோ எனக்குப் பிள்ளை குட்டி இருக்குது. என்ன ஒண்டும் செய்து போடாத.’ என்றான் சிவகரன்.

‘அப்பிடிச் சொல்லு. இதையே ஆயிரமாயிரம்பேர் சொல்லிக் கையெடுத்துக் கும்பிட்டார்கள். ம்… உங்களின் காதுகளில் மட்டும் அந்தச் சொற்கள் விழவே இல்லை? எத்தனை மனைவியர் தங்கள் கணவனுக்காய் கதறினார்கள்? எத்தனை இளம் பெண்கள் தாலிகட்டிய கையோடு விதவையாகித் தவித்தார்கள்? எத்தனை பெண்கள் நாலைந்து பிள்ளைகளோடு நடுத்தெருவிற்கு வந்தார்கள்? மணம் முடித்த இரண்டாம் நாள் கணவன் கொலையாகிப்போன பெண்ணின் சோகம் உங்களுக்குப் புரியுமா? இன்று தமிழ்க் கலாசாரத்திற்காய்க் கவலைப்படும் உங்களுக்கு அன்று என்ன செய்தீர்கள் என்று புரியுமா? அர்ச்சுனனுக்குப் புரிந்ததுகூட அறிவிலிகளுக்கு எப்படிப் புரியும்? எத்தனை கனவுகளோடு வாழ நினைத்த பல இளம் பெண்களின் வாழ்வை எந்தக் கேள்வியும் இல்லாது சில கணத்தில் எப்படி மாற்றி இருப்பீர்கள்… புரியுமா? எவருக்காவது அந்த ஆறா இரணம் பற்றி இன்றாவது புரிந்ததா? தங்களின் புருசனை கொல்லாது விடுமாறு காலில் விழுந்து மன்றாடிய பெண்களின் கண்ணீருக்கு ஏதாவது மதிப்பு இருந்ததா? அந்தக் கதறல் யாருடைய காதிலாவது விழுந்ததா? அவர்களை இழுத்துச் சென்று, அடித்து, சித்திரவதை செய்து, பின்பு கொலையும் செய்து முடித்தீர்கள். கொல்லப்பட்டவனின் சட்டையைக் கழற்றி வந்து ஆதாரமாகக் கொடுத்தீர்கள். விடுதலை என்ற பெயரில் தளத்திலும் புலத்திலும் உங்கள் அராஜகம் தொடர்ந்தது இல்லையா?”

‘ஐயோ நான் ஒரு தப்பும் செய்யேல்ல. அவங்களுக்காகக் காசு மட்டும் சேர்த்துக் குடுத்திருக்கிறன். அதைவிட நான் எதுவுமே செய்யேல்ல. என்னை ஒண்டும் செய்து போடாத. உன்னக் கையெடுத்துக் கும்பிடுகிறன்.’

‘கையைக்கட்டி வைத்திருக்கும் போதே கையெடுத்து கும்பிடுகிறன் எண்டு எனக்கே கதைவிடுகிறாய். ம் சரி… விசயத்துக்கு வருவம். நீ காசு சேர்த்துக் குடுத்தாய். அது

அங்க ஆயுதமாய் போய்ச் சேர்ந்தது. அதைப் பயன்படுத்த… எந்தப் பயமும் அறியாத… வாழ்க்கை புரியாத விடலைக் குஞ்சுகள் தேவையாயிருந்தது. ஆயிரம் மாயிரம் அப்பாவிக் குழந்தைகளின் உயிரைக் குடிக்க நீ ஒரு காரணமாய் இருந்திருக்கிறாய். புரிகிறதா? இது சேவையா? எங்கள் இனத்தின் இருப்பிற்கு இது வழியா? சரி அதுவும் போகட்டும். காசு தாவென்று சனத்தைப் பயமுறுத்தி வாங்கினீர்கள். பின்பு அதையே அபேஸ் பண்ணினீர்கள். அது துரோகம் தானே? நீ துரோகியா? அல்லது தியாகியா? உங்களுடைய பாஷைதானே இது?'

'நான் ஒருத்தருக்கும் துரோகம் செய்யேல்ல.'

'ம்… காசு அபேஸ் பண்ணுறது துரோகம் இல்லையா?'

'நான் காசு அபேஸ் பண்ணேல்லை. தயவு செய்து என்னைவிடு.'

'ஓ அப்பிடியா?'

என்று கூறிய அந்த மனிதன் கோபமாக எழுந்து படுக்கை அறையை நோக்கிச் சென்றான். அவன் படுக்கை அறைக்குள் புகுந்து கட்டிலில் இருந்த இரு தலையணைகளின் உறைகளைக் கழற்றினான். பின்பு சமையல் அறைக்குச் சென்று எல்லா அலுமாரிகளையும் திறந்து மூடினான். கடைசியாக டிபிறிசரைத் திறந்து பார்த்தான். சிவகரன் வாங்கி வந்த ஐஸ்கட்டிகள் அவன் கண்ணில் பட்டன. அவற்றை முதலில் ஒரு தலையணை உறையில் கொட்டிக் கட்டினான். பின்பு அதற்குமேல் மறுவுறையைப் போட்டுக் கட்டினான். ஐஸ்கட்டி பெரிய தேங்காய் அளவிலான உருண்டையாகிற்று. மீதித் தலையணையுறைக் கைப்பிடியாக்கினான். அந்தக் கோளத்தை அவன் ஒருமுறை சமையலறைச் சுவரில் வேகமாக ஓங்கி அடித்தான். சிவகரன் அந்தச் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டு நடுங்கினான். அடித்த சுவரில் ஆழமான அடையாளம் சாட்சி சொல்வது போலச் சிரிக்கின்றதா? அல்லது நிகழப்போகும் அவலத்தை எண்ணி அழுகின்றதா? அவனுக்கும் அது விளங்கவில்லை. 'சாட்சிகள் அராஜகத்தைக் கண்டு அஞ்சும். பலவேளை மௌனமாகும்.' என்பது மட்டும் அவனுக்குப் புரிந்தது. அந்த மனிதன் சிவகரனை நோக்கி மூர்க்கமாக நடந்து சென்றான். திரும்பி வந்த அந்த மனிதனைச் சிவகரன் பார்த்தான். அவன் கையில் வைத்திருந்த கோளத்தைக் கண்ட சிவகரனுக்கு நடுக்கம் பிடித்தது. இவன் வெற்று வேட்டு இல்லை என்பது அவனுக்குப் புரிந்தது. 'நல்லூர்க் கந்தனே! இவன் என்னை உயிரோடு விட்டால் நான் உன்னடிக்கு வந்து தூக்குக் காவடி தூக்கிறன்.' என அச்சத்தோடு முருகனிடம் கையூட்டு ஒப்பந்தம் செய்தான். பாவம் ஆயிரம் அயிரம் அப்பாவிப் பக்தர்களை அருகில் இருந்தே கொலையாகாமற் காக்க முடியாது கல்லாய் சமைந்திருந்த கந்தன் ஐரோப்பாவில் இருந்து கொடுக்கும் அவலக்குரலைக் கேட்பானா? அலைபேசி வேலை செய்வதால் அவனும் கேட்பானோ?

‘சரி… இப்ப சொல்லு… நான் ஏன் உன்னை நம்போணும் எண்டதைத் தெளிவாகச் சொல்லு.’ என்றான் அந்த மனிதன்.
பயத்தில் நடுங்கிய சிவகரன் துணிவை வரவழைத்தவனாய்,
‘நான் எந்தத் தப்பும் செய்யேல்ல. தப்பு செய்யாதவனை இப்பிடிச் சித்திரவதை செய்யக் கூடாது. தப்பு செய்ததாய் ஆதாரம் இருந்தாக் காட்டு பாப்பம்? அதை நான் ஒத்துக் கொள்ளுறன். அதுக்குப் பிறகு நீ என்ன வேணும் எண்டாலும் செய்.’ என்றான்.
‘நீங்கள் மலையவே விழுங்குகிற ஆட்கள். என்ன மாதிரி ஆட்களிட்ட எல்லாம் ஆதாரம் தந்திட்டே இதையெல்லாம் செய்வியள்? சரி அதைவிடுவம். நான் கேட்கிற ஒரு கேள்விக்கு மட்டும் நேரடியா எதையும் யோசிக்காமல் சட்டெண்டு பதில் சொல்லு.’ என்றான் அந்த மனிதன்.

‘என்னது? தயவு செய்து என்னச் சித்திரவதைப் பண்ணாமல் விட்டிடு.’
‘கோழைக்கு ஒவ்வொரு நாளும் சாவு. வீரனுக்கு ஒரு நாளைக்குத்தான் சாவு. இதுவும் நான் சொல்லேல்லை… உங்கட வசனம்தான். உண்மையைச் சொல்லு. வீரனா இரு. இப்ப நான் கேட்கிற கேள்விக்குச் சுத்தி வளைக்காமல் பதில் சொல்லு. நீயும் வேலைக்குப் போறேல்ல… ம்… உன்ர மனுசியும் வேலைக்குப் போறேல்ல… நீ இரவு பகலாகச் சனத்தை வெருட்டித் தண்டத் திரிஞ்சா… உன்ர மனுசி அரச குடும்பத்துப் பிள்ளையள வென்ஸ்சில கூட்டிக்கொண்டு திரிஞ்சவா… அவையின்ர கால் மண்ணில படக்கூடாதெண்ட பதைபதைப்பு அவவுக்கு… யாரும் ஏழைகள் பெத்த பிள்ளையள் வன்னி இல்லாட்டி மட்டக்களப்பில இருந்து வந்து காட்டுக்க வெறும்காலோட… முள்ளுக்குத்த… பீங்கான் வெட்ட… நடக்கலாம். வேணும் எண்டா நாய் போலச் சூடு வாங்கிச் சாகலாம். இங்க இருக்கிற அரச புத்திரர்களின் காலில் மண்கூடப் படக்கூடாது. சரி விசயத்துக்கு வருவம். நீங்கள் இரண்டு பேரும் வேலை செய்யிறேல்ல? நான் சொல்லுறது சரியே?’
‘நான் சிலவேளை கடையில நிக்கிறனான். எனக்கு ஊபோரத் திறிக் வருகுது.’
‘ம், வீமனாட்டம் கைகாலை வைச்சிருக்கிறாய். உனக்கு ஊபோரத் திறிக் வருகுது? சரி அதைவிடு. அது நோர்வே அரசாங்கத்தின்ர பிரச்சனை. கடை வேலை எனக்குத் தெரியும். களவாய்ச் செய்தாய். சிவாட்ட பெங்கர். (கறுப்புப் பணம்) அதைச் சொல்ல மறந்திட்டா. அதால உனக்கு எவ்வளவு வந்திருக்கும்? ஒரு ஐயாயிரம் குரோணர்? ஊபொரத் திறிக் எவ்வளவு வரும்?’
‘ம்’
‘நீ ஒரு பெரிய வீடு ஒஸ்லோவில வைச்சிருக்கிறாய். அதுவும் வெஸ்கந்தில (பணக்காரச் சுதேசிகள் அதிகமாகக் குடியிருக்கும் பகுதி) நாலு அறையோட வைச்சிருக்கிறாய். ம் அப்பிடி எல்லாம் நாங்கள் கனவுகூடக் காணேலாது. உங்களிட்ட

புது வென்ஸ் நிக்குது. ம்… இவ்வளவு பெரிய கித்தை… நீ கடையில வேண்டுற ஐயாயிரம் பென்ஸ்சுக்குப் பெற்றோல் அடிக்கக் காணுமே? அப்ப ஊபொரத் திறிக் உனக்கு விசேசமாத் தாறாங்களோ? சாப்பாடுச் செலவு? அரசகுமாரர்களின் ஆடம்பரங்கள்? மகாராணியின் பௌவுசுச் செலவுகள்? எப்பிடி? எனக்குப் புரியேல்ல. கொஞ்சம் சொல்லு ராசா? நோர்வே அரசகுடும்பம் உன்னுடைய குடும்பத்திற்குச் சொந்தமா என்ன? அல்லது செல் இங்க றொக்க (நோர்வேயின் பெரிய பணக்காரர்களில் ஒருவர்) சொந்தமா... சொல்லு. அடி வேண்டாமல் சொல்லு கண்ணா.'

அவன் தனது கையில் இருந்த ஐஸ் கோளத்தைச் சாதுவாக முன்னும் பின்னும் அசைக்கத் தொடங்கினான். அந்தக் கோளத்தையே பார்த்த வண்ணம் இருந்த சிவகரனின் தலை அதற்கு ஏற்ப ஈர்ப்பு விசைக்கு உட்பட்டதாய் முன்னும் பின்னும் அவனையும் மீறிப் போய் வரத் தொடங்கியது. அந்தக் கோளத்தின் ஆட்டத்தில் நிலைகுத்திய கண்களில் இப்போது சாப்பயம் குடியேறிற்று.

'இதால ஒரு அடி வேண்டினா எப்பிடி இருக்கும் தெரியுமோ?' அவன் சிவகரனைப் பார்த்துத் திடீரெனக் கேட்டான்.

'விலங்கு போட்டுக் கட்டிவைச்சு வீரம் பேசக்கூடாது. வேணும் எண்டா அவுட்டு விட்டிட்டு… ஆம்பிளையா ஒற்றைக்கு ஒற்றையா நிண்டு கதை பார்ப்பம்.' என்றான் சிவகரன் திடீர்த் துணிவோடு.

'ஓ அவுட்டு விட்டிட்டுத்தான் வன்னி ஜெயில்ல அடிச்சவையாக்கும்? ஒற்றைக்கு ஒற்றை நேர நிண்டு அடிபடுகிறவனை விடலாம். கண்ணுக்க மண்ணைத் தூவுறவனை எப்பிடி விடமுடியும்? சரி அதைவிடுவம். உங்கட போராட்டத்தில ஆயிரமாயிரம் கொலை நடந்திருக்கும். எல்லாரிட்டையும் ஐயா நான் உங்களைக் கொலை செய்யப் போறன் எண்டு சொல்லி… ஒரு ஆயுதமும் அவையின்ர கையில குடுத்திட்டு… முறைப்படி பாரதப் போர் போலச் சங்கூதி… நேருக்கு நேர நிண்டுதான் சுட்டினமா? ஆரியன்ர இன்று போய் நாளைவா என்கிற மனிதாபிமானம்கூட எங்களிட்ட இருக்கேல்லையே? ம்…. எனக்குக் குடும்பி முடியவேண்டாம். கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லு. இல்லாட்டிப் பிடரி நெளிஞ்சு போகும்.'

அவன் சிவகரனை நோக்கி ஐஸ் கோளத்தை வீசினான். சிவகரன் பயத்தில் தலையைப் பின்னே இழுத்தான்.

'எனக்கு இனியும் பொறுமை இல்லை. கெதியாச் சொல்லு. எங்க இருந்து இந்தக் காசு எல்லாம் வந்ததெண்டு சொல்லு.'

'நான் சொன்னாப் பிறகு என்ன ஒண்டும் செய்யமாட்டியே?'

'இல்ல… சொல்லு.'

‘நாங்கள் சொந்தக்காரரிட்டை இரவல் வாங்குவம். சில நேரம் கிரடிற்காட்டில எடுத்துச் செலவழிப்பம்.’ அப்பாவியாக அழுவாரைப் போல அவன் பதில் சொன்னான்.
அந்த மனிதன் பாய்ந்து சிவகரனின் பிரடியில் அறைந்தான்.
‘என்னடா, எனக்கு இப்பவும் குடுமி முடியலாம் எண்டு பாக்கிறியா? இன்னும் ஒரு பொய் சொன்னால் கொலை செய்வன். ஒரு இனத்தின்ர இருப்பைக் கேள்வியாக்கினது எங்கட போராட்டம். அதில முக்கிய பங்கு உன்னை மாதிரியான ஆட்களுக்கு இருக்குது. சின்னத்தனமான திருகுதாளம் விட்டியெண்டா கழுத்தை முறிச்சுப் போடுவன். இப்ப பிடரி நாசம். இதுக்குமேல உயிர் நாசம்.’ என்றான் கோபமாக.
சிவகரனுக்குப் பயத்தில் நடுக்கமெடுத்தது. அந்த மனிதனின் கோபம் யார்மீது என்பது அவனுக்குப் புரியவில்லை. அவன் தனக்கு ஏற்பட்ட நிலையை நம்ப முடியாமற் திரு திருவென விழித்தான்.

‘சொல்லு. இப்ப உண்மையைச் சொல்லு. இது உனக்கு உண்மை சொல்லுறதுக்கான கடைசிச் சந்தர்ப்பம்.’ என்றான் அந்த மனிதன். சிவகரன் உயிர்ப் பிச்சைக்காக உண்மையைச் சொல்லத் தொடங்கினான். அவனை மரண பயம் மெல்ல மெல்ல விழுங்கத் தொடங்கியது. அதில் அவன் உறுதி ஆட்டம் கண்டது.
‘நாங்கள் இரவு பகலாகக் கஸ்ரப்பட்டம்? அதுக்குப் பயனா சும்மா கிள்ளின மாதிரிக் கொஞ்சம் எடுத்தம். கடைசியில எங்களிட்டச் சேர்ந்ததை வைச்சிருக்கிறம். கஸ்ரப்பட்டுச் சேர்த்தது எல்லாத்தையும் கண்டவைக்குத் தானமாகக் குடுக்கோணும் எண்டு எங்களுக்கு என்ன விதியே? கடைசியில காசு குடுத்து ஏமாந்தவைய ஏமாளிகள் எண்டுதான் சொல்லோணும். அதுக்காக எவ்வளவு பேருக்கு எண்டு நாங்கள் காசு திருப்பிக் குடுக்க முடியும்? சேர்த்த முழுக்காசும் எங்களிட்ட இல்லை. அதில பெரும் பகுதி வேற இடத்துக்கு மாறீட்டுது. காசைக் குடுத்தா மாத்திரம் சனங்கள் எங்களைச் சும்மா இருக்க விடப்போறாங்களே? கொண்டா, கொண்டா எண்டு எல்லாரும் வந்து ஆக்கினை செய்வாங்கள் எல்லே? அதால இருந்ததை நாங்களே எடுத்திட்டம். அப்பிடி எடுத்ததால வேற எங்களுக்கு நிறையப் பிரச்சனை. தலையள் எல்லாம் பெரிய மனிசராய்த் திரிய ஒண்டுமில்லாத என்னை வந்து ஏன் வதைக்கிறாய்? சனங்களும் என்ன மாதிரி வால்களைத்தான் கலைச்சுக்கொண்டு திரியினம். பெரிய அசையும், அசையாச் சொத்தை அபகரிச்சவங்களை நீயோ, சனங்களோ கனவிலும் நெருங்கமாட்டியள்.’
‘எனக்கும் அது தெரியும். அது இருக்கட்டும்... உனக்குச் சனங்களை ஏமாத்தின மாதிரி ஒரு குற்ற உணர்வு இல்லையா? நீங்கள் சொன்ன பொய்யைப், புழுகை நம்பித்தானே அவனவன் வீட்டை அடகு வைச்சுக் காசு தந்தவன்?’
‘அது அவையின்ர விதி. அவை இளிச்சவாயாக இருந்ததுக்கு நாங்கள் என்ன செய்யிறது? இளிச்சவாயள ஏமாத்துறதுதானே பிழைப்பு. இதுவும் ஒரு பிழைப்புதான். அப்பிடிதான் நாங்கள் பாடுபட்டுச் செய்தம். அதுக்கான பயனும் இருக்கோணும் எண்டு

நினைக்கிறதில ஏதும் பிழை இருக்கே? அதுக்கான கொடுப்பனவை எடுத்துக்கொண்டம். அவ்வளவுதான்.'

'உங்கட பிழைப்பாலை எத்தனை அப்பாவிக் குழந்தையளின்ர உயிர் போனாலும் உங்களுக்குக் கவலை இல்ல. எத்தனபேரற்ற தாலி அறுந்தாலும் அதைப்பற்றி அக்கறை இல்லை. எத்தனைபேர் முடமா அலைஞ்சாலும் பரவாய் இல்லை. அப்பிடித்தானே?'

'இல்ல. அது வேற... இது வேற.'

'எதடா அது வேற இது வேற? இதையே எத்தின தரம் சொல்லுவியள்?'

கேட்ட வண்ணம் கோபமாகத் திடீரென ஐஸ் கோளத்தால் சிவகரனின் கழுத்தில் அந்த மனிதன் மூர்க்கமாக அடித்தான். ஒரு கணம் சிவகரனுக்கு உலகமே இருண்டது. புரைக்கேறியது. மூச்சுத்திணறல் ஏற்பட்டது. உயிர் இத்தோடு போய்விடும் என்பதாய் அலமலக்கம் ஏற்பட்டது. பயத்தில் உடல் குளிராய் வியர்த்துப் போயிற்று. அது மாறி திடீரென உடல் எங்கும் அனலாய் எரிந்தது. நெஞ்சை இயமன் அழுத்தியதாய் திணறல் உண்டானது. உயிர் பிரியப் போகிறதா என்கின்ற பயம் எழுந்தது.

சிவகரன் சிறிது நேரத்தில் ஒருவாறு அமைதி அடைந்தான். மூச்சை இழுத்து விட்டுக்கொண்டான். அவனுக்கு இப்போது என்ன செய்வது என்று புரியவில்லை. எச்சில் விழுங்க முடியாது தொண்டை நோக்கண்டது. வாயில் இரத்தம் கரித்தது. வெளியே துப்பவும் மனம் வரவில்லை. எதற்கும் சண்டைக்காரனின் காலில் விழுதல் என்பதே தற்போது சாதுரியமான உபாயமாகத் தெரிந்தது.

'என்ன ஒண்டும் செய்யாதை. நான் உனக்கு என்ன வேணும் எண்டாலும் தாறன். பிளீஸ் என்ர உயிரை மாத்திரம் எடுத்திடாத. என்னை நம்பிப் பிள்ளையள், மனிசி எண்டு ஒரு குடும்பம் இருக்குது. பிளீஸ்...'

சிவகரனுக்குக் குரல் மாறியிருந்தது. ஒவ்வொரு சொல்லைச் சொல்லும் போதும் உயிர் போவது போன்று தொண்டைக்குள் வலித்தது. முன்னுக்கு நிற்கும் வெறிகொண்ட மிருகத்திடமிருந்து எப்படித் தப்புவது என்பது அவனுக்குப் விளங்கவில்லை.

'கொல்வது என்றால் துவக்கால் தலையில் வைத்து ஒரு கணத்தில் சாவைத் தந்து விடலாம்தானே? அதைச் செய்யாது என்னை ஏன் இப்படி வதைக்கிறான்?' என்பது புரியாதவனாய் சிவகரன் குழம்பினான். அந்த மனிதனுக்குத் தேவையானது பணமா அல்லது தன் உயிரா அல்லது இரண்டுமா என்பது புரியாது திகைத்தான்.

'ம்... என்ன தருவாய்?'

'காசு தாறன். கனக்கக் காசு தாறன்.'

'எவ்வளவு தருவாய்?'

‘இரண்டு லட்சம்.’

‘பிச்சைக்காசு அது.’

‘சரி மூண்டு லட்சம் தாறன்.’

‘இல்ல குறைஞ்சது ஐஞ்சுதா.’

‘ஐஞ்சு என்னிட்ட இருக்குதா எண்டு தெரியாது.’

‘அப்ப உயிரை விடப்போறியா?’

‘உண்மையிலேயே அவ்வளவு என்னிட்ட இங்க இல்ல.’

‘அப்ப எவ்வளவு இருக்குது?’

‘கிட்டத்தட்ட நாலரை. சரியா ஞாபகம் இல்ல. ஆயிரம் குறோணர்த் தாளா...’

‘இவ்வளவுதான் உன்னிட்ட மொத்தமாக இருக்கா?’

‘இங்க இருக்கிறது இவ்வளவுதான்.’

‘மிச்சம் எங்க?’

‘வாங் லொக்கரில.’

‘எவ்வளவு?’

‘சரியா ஞாபகம் இல்லை. ஒரு ஐஞ்சு இருக்கும்.’

அந்த மனிதனுக்கு எதிர்பாராத இன்ப அதிர்ச்சி மின்னலாக உடலில் பாய்ந்ததான உணர்வு. இப்பிடி வேட்டைக்குப் போன இடத்தில் புதையல் கிளம்பும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. அதுவும் இவ்வளவு பெரிய புதையல் கிடைக்கும் என்று அவன் துளியும் கற்பனைகூடச் செய்யவில்லை. அந்த மனிதன் அதை நம்ப முடியாது சில கணங்கள் மந்தமாக மயக்கத்தில் நின்றான். ஐந்து இலட்சம் குரோணர்கள் என்றாலும் பத்து வருசம் வயிற்றைக்கட்டி மிச்சம் பிடித்தால் மட்டுமே சாதாரண ஒரு தொழிலாளியால் இங்கு சேமிக்க முடியும். ‘பணமா? அல்லது ஆயிரமாயிரம் ஆத்மாக்களின் சாந்தியா? ஆயிரமாயிரம் ஆத்மாக்களின் சாந்தி முதன்மையானது அல்லவா? இல்லை இரண்டும் கிட்டினால்? பாவப்பட்டவர்களுக்கு அதை அனுப்ப முடிந்தால். நலிந்த நம்மினத்திற்கு உதவ முடிந்தால்?’ அந்த மனிதன் தனக்குள் தர்க்கம் நடத்தினான்.

‘சரி அந்தப் பணம் எங்க இருக்குது?’ அந்த மனிதன் சிவகரனைப் பார்த்துக் கேட்டான்.

‘நீ பணத்தை வாங்கின பிறகு என்னை உயிரோட விடுவாய் எண்டுறதுக்கு என்ன உத்தரவாதம்?’

‘நீ இப்ப எதுவுமே செய்ய முடியாத கைதி. உனக்கு இப்ப பேரம் பேசுற தகுதியெல்லாம் கிடையாது. நான் முதல்ல உன்ர பணத்தை ஏற்கோணும். இரண்டாவது உன்னை மன்னிக்கோணும். அதுக்குப் பிறகுதான் நீ உயிரோட போக முடியும். எனக்கு

எப்ப, எப்பிடி மனநிலை மாறுமெண்டு தெரியாது. உனக்கு உண்மையாய் ஆயுள் கெட்டியாக இருக்கோணும். அதுதான் உன்னோட தொடர்ந்தும் கதைச்சுக் கொண்டு நிக்கிறன். சொல்லு எங்க பணம் இருக்குது?"
சிவகரன் பேசாது இருந்தான். அந்தமனிதன் ஐஸ் கோளத்தை வேகமாகச் சுழற்றினான். ஐஸ் கரைந்ததால் நீர் சொட்டுச் சொட்டாய் சிந்தியது.

## அத்தியாயம் 5 திணிப்பு

வார்டோவில் சில காலங்களுக்கு முன்பு...

ஒரு கிழமையில் இரண்டு நாட்கள் வார்டோவில் தமிழ் ஒலிபரப்புச் செய்வதற்கு அங்கிருந்த வானொலி நிலையம் தமிழர்களுக்கு நேரம் ஒதுக்கிக் கொடுத்திருந்தது. அவ்வொலிபரப்புகள் மாலை நேரங்களில் நடைபெற்று வந்தன. அன்று ஹரியும் வானொலி நிலையத்திற்குச் சென்றான். அங்கு தமிழ் நாடகம் ஒன்று தயாரிப்பதற்குச் சிலர் கூடினர். முதலில் தொடங்கப்பட்ட தமிழர்களின் அபிவிருத்தியான பொழுதுபோக்கு அது. அது சிலருக்குத் தமிழை இங்கு வந்த பின்பும் நேசிக்கும் இடையறாக் காதலாயும், தேடலாயும் அமைந்தது. வார்டோவுக்கு முதலில் வந்தவர்கள் படிப்பதற்காய் நோர்வேக்கு வந்த தமிழர்களாகும். அவர்களுக்கு ஏதாவது ஒரு இடத்தில் பாடசாலை கிடைத்தால் மட்டுமே விசாப் பெறமுடியும் என்கின்ற நிலை நீடித்தது. அந்த யதார்த்தம் புரிந்தவர்கள் இரண்டாயிரம் கிலோமீற்ரர்கள் கடந்து இங்கு வந்து படிப்பைத் தொடர்ந்தார்கள் அல்லது விசாவைப் பெற்றார்கள். அவர்களோடு பின்பு அகதிகளாக வந்த சிலரும் இந்த வானொலியில் இணைந்தனர்.

ஹரிக்குப் பாடசாலையில் நடித்த அனுபவம் உண்டு. இதை அறிந்த கலையகத்தார் அவனை அங்கு வரவழைத்தனர். வேலைகள் அதிகம் இல்லாததால் ஹரிக்குத் தனியே வீட்டில் இருப்பதென்றால் மகா அலுப்பு. இப்படி ஒரு கலைத் தேடலாய், மொழியாடலாய்ப், பொழுது போவதை அவன் மிகவும் விரும்பினான். அந்த ஆசையில் எந்த மறுப்பும் இன்றி இன்று கலையகத்திற்கு நேரத்தோடு பிரசன்னமாகி இருந்தான். வார்டோவில் அப்பொழுது ஒரு சிலர் மட்டுமே குடும்பமாக வசித்து வந்தனர். மற்றவர்கள் எல்லோரும் பிரமசாரிகளாக வரப்போகும் தேவதைகளைப் பற்றிய கற்பனையில் வாழ்ந்தார்கள். மதுவின் வெறியில் மனைவி பற்றிக் கவிதை வடித்தனர். கலையகத்தில் நாடக ஒத்திகை பார்த்துக்கொண்டு இருக்கும் போது குகன் தலையில் தொப்பியும், உடம்பில் பனிக்கரடித் தோலின் மொத்தத்தில் மேலங்கியுமாய் அங்கு வந்து நின்றான். அவனுக்கு மழையில் அழிந்த வயல் போன்ற மீசை. எப்போதும் அடைத்ததான மூக்கை இடைவிடாது இழுப்பது அவன் இயல்பு. கண்களில் என்றும் ஒளிந்திருக்கும் நரியின் பார்வை.

கண்ணாடி அறைக்குள் நாடகத் தயாரிப்பில் ஈடுபட்டவர்கள் அதை நிறுத்திவிட்டு வெளியே வந்தார்கள். எதற்காக இவன் இப்பொழுது வந்துள்ளான் என்பது அவர்களுக்குக் குழப்பத்தை ஏற்படுத்தியது.

குகன் இலங்கையில் வட்டுக்கோட்டை என்னும் இடத்தைச் சார்ந்தவன். ஈழப்போராட்டம் திசை தெரியாது பயணிக்க முதலே சிலர் வெளிநாட்டிற்கு வந்துவிட்டார்கள். பின்பு குகனைப் போன்றோரும், மாற்று இயக்கத்தினரும் இங்கு வந்தார்கள். குகனைப் போன்றவர்கள் ஈழத்தில் இயக்கத்திற்குள் போகாது தூரே நின்று இதமாகச் சூடு காய்ந்தனர். பின்பு நாட்டுப் பிரச்சனையைச் சாட்டி பொருள் தேடி இங்கு வந்தார்கள். இங்கு வந்தவுடன் நாமும் நாட்டுப் பற்றாளர் என்கின்ற மார்பு தட்டல் பாதுகாப்புக் கவசமாகிற்று. இவன் இப்போது ஆதரிப்பது வன்முறையை மட்டும். அது காட்டும் வழியை மட்டும். இங்கிருந்துகொண்டு ஈழப்போராட்டத்தில் இழப்புக்கள் இல்லாது உரிமைகள் இல்லை என்கின்ற இரணமான சமாதானத்தை மட்டும். இழப்பது நானாக இல்லாதபோது, இரணங்கள் என்னைத் தாக்காதபோது, வீரவசனம் பேசுவதில் எமக்கேன் தயக்கம்? என்கின்ற சுயநலம் துருத்தும் துணிவு அவனிடத்தில்.

ஹரிக்கு இவனைக் கண்டாலே பிடிப்பதில்லை. இவன் ஒரு பொய்யின் உருவம் என்கின்ற வயிற்றுப் புரட்டல் அவனிடம். முதல் நாள் கதைக்கும்போதே அவன் சொன்ன முதல் வசனம் ‘நாட்டுப் பிரச்சனை தீருதோ இல்லையோ நான் ஆறுமாதத்தில நாட்டுக்குத் திரும்பிப் போயிடுவன்.’ என்பதுதான். ஹரி அப்போதே இவன் பிணம்கூட இங்குதான் அடம்பிடித்து இடம்பிடிக்கும் என்பதாக எண்ணினான். இன்று ஆறுமாதம் இல்லை ஒருவருடத்திற்கு மேல் சென்று விட்டது. மனைவியையும், பிள்ளைகளையும் இங்கே எடுப்பதற்கு அலைந்து திரிகிறான். எதற்காக ஆறுமாதத்தில் நாட்டுக்குத் திரும்பிவிடுவேன் என்பதாகச் சொன்னான் என்பது ஹரிக்குப் விளங்கவில்லை.

‘எங்களை ஏமாற்றுவதற்கா? அல்லது தன்னைத்தானே ஏமாற்றுவதற்கா? தான் பொருள் தேடி ஓடி வந்த கூட்டம் இல்லை என்பதை உறுதிப்படுத்துவதற்கா? எது நோக்கம்? யாரை ஏமாற்றுவதற்கு அந்த வசனம்?’ ஹரியின் குழப்பம் தொடர்ந்தது.

குகன் கையில் ஒரு ஒலிப் பேழை இருந்தது. அவன் அதை ஆட்டிய வண்ணம் நின்றான். திரு அவனைப் பார்த்து,

‘என்ன கசெற்? என்ன விஷயம்?’ என்றான்.

‘ஒண்டும் இல்ல. இதில சில தேசிய கீதங்கள் இருக்குது. றேடியோத் தொடங்க முதல் இதைப் போட்டியளெண்டா நல்லா இருக்கும். இது பலருடைய வேண்டுகோள். எப்பிடி எண்டாலும் எங்கட தமிழ் உணர்வை விட்டுக்கொடுக்கக் கூடாதுதானே?

எங்களுக்காகப் போராடுறவங்களையும் அவங்கட கீதங்களையும் றேடியோவில முதல்ல ஒலிபரப்பினா ஒரு எழுச்சியா, மரியாதையாக, ஊக்கமா இருக்கும்?' என்றான்.

ஹரி கௌதம புத்தரைப் போலப் பொறுமையும், அமைதியும் காப்பவன். புலியின் கீதத்தோடு வந்து நின்ற குகனைப் பார்த்த அன்று பௌத்த தர்மத்தையே கொன்றவர்களைக் கண்டது போன்று அவனால் பொறுமைகாக்க முடியவில்லை.

'தேசிய கீதங்கள்? ம்... யாற்ற தேசிய கீதங்கள்? எந்த நாட்டை வாழ்த்துகிற தேசிய கீதங்கள்? ஒரு காலத்தில எங்களுக்காக நிறைய இயக்கங்கள் போராடிச்சினம். இண்டைக்கும் சிலர் போராடுகினம். எந்த இயக்கத்தின் கீதத்தை எங்கடை தேசியகீதம் எண்டுறது? எங்கட நாட்டின்ரை தேசியகீதத்தை யார் முடிவு செய்தது? அது எப்ப, எங்க முடிவு செய்யப்பட்டது? சொந்த சகோதரங்களென்றே பார்க்காமல் உயிரோடை கொழுத்தினவைய எங்களைக் காப்பாற்றும் விடுதலைப் போராளிகள் எண்டு மனிதாபிமானத்தை நேசிக்கிற எந்த மனிதனாலும் சொல்ல முடியுமா? நாங்கள் முகமூடி போட்டுக்கொண்டு மாயையில விழுந்து கிடக்கேல்ல. யதார்த்த வாழ்வின்ரை இரணங்களைப் புரிஞ்சு, அதிலை இருந்து மீள்றத்துக்கு விடைகேட்டு நிக்கிறம். ஒண்டு இரண்டுபேர் செய்த பிழைக்கு ஒரு சகோதர இனத்தையே கூண்டோட குடியெழுப்பினதை மறக்க முடியுமா? எந்தத் தார்மீக முகத்தோடு அதைச் செய்யமுடியும்? செய்ததை அங்கீகரிக்க முடியும்? பிறகு நாங்கள் உரிமைக்காகப் போராடுறம் எண்டு உலகத்திட்ட எப்பிடிச் சொல்ல முடியும்? சரி... இங்க யாற்றையும் பிழைகளையோ அல்லது சரிகளையோ சுட்டிக்காட்ட இந்த வானொலி நடக்கேல்லை. இந்த வானொலி அரசியலுக்கு அப்பாற்பட்டதாய் இயங்கவே உருவாக்கப்பட்டது. இதில் எந்த இயக்க அரசியலையும் நாங்கள் ஏற்க முடியாது.' என்றான் ஹரி. தான் அதீத உரிமை எடுத்துவிட்டதான சந்தேகம் அவனுக்குள் எழுந்தது.

'நீங்க என்ன கதைக்கிறியள்? எது செய்தாலும் தலைவர் விசயத்தோடதான் செய்வார். சும்மா சோத்துப் பார்சல் தூக்கினவங்களின்ர கீதங்களை எல்லாம் தேசியகீதமெண்டு போடோணுமே? தமிழருக்கு இருக்கிறது ஒரு தலைவர்தான். ஒரு இயக்கம்தான். ஒரு தேசியகீதம்தான். எல்லாமே ஒண்டா ஒரு குடைக்குக் கீழதான் இருக்கோணும். இல்லாட்டி யாராலும் அவையக் காப்பாத்தேலாது.' என்றான் குகன்.

'என்ன வெருட்டுறியா? இதை மக்கள் சொல்லோணும். அல்லது நீங்கள் அங்கேயே இருந்து போராடி நிரூபிச்சுக் காட்டியிருக்க வேணும். அதை விட்டிட்டு நீங்கள் இங்க எதுக்கு ஓடி வந்தீங்கள்? நாட்டுப் பிரச்சனையைச் சாட்டி உழைக்க ஓடியாறது எல்லாருக்கும் தெரியும். ஓடியந்த பிறகு இங்க கொடி பிடிக்கிறியள். பருவாய் இல்லை... நல்லாப் பிடியுங்க. நாங்கள் உங்களைமாதிரி இங்க வந்து பிறகு கொடிபிடிக்கேல்லை. நாட்டுக்காகப் போராட இயக்கத்துக்கு அங்கயே போனோம். அங்க எங்களுக்குப் போராடுற உரிமைகூட இல்லையெண்டு ஒரு சர்வாதிகார இயக்கம் எங்களைத் தடை செய்திச்சு. பலரைக் கொலை செய்திச்சு. வன்முறையால் போராட்டத்தைத் திசை திருப்பிச்சுது. வேறுவழி இல்லாமல், அழிவுகளைத் தவிர்க்க இங்கு வந்து அமைதியாக

இருக்கிறம். எங்களோடு தேவையில்லாமல் நீங்கள் ஏன் உரஞ்சிறியள்? வேண்டாம் எண்டு விட்டிட்டு வந்திருக்கிற எங்களை வில்லங்கத்துக்கு ஏன் இழுக்கிறீங்கள்?' என்றான் ஹரி.

'ஹரியண்ண நீங்கள் ஏன் இவரோட இப்பிடிக் கதைச்சு மினக்கெடுறியள்? போங்கண்ண... நான் கதைக்கிறன்.' என்றான் திரு.

'ஓ... ஒரு வகையில நீ பதில் சொல்லுறதுதான் சரியாய் இருக்கும்.' என்று கூறிய ஹரி கண்ணாடி அறைக்கு வெளியே இருந்த கதிரையில் அமர்ந்தான்.

திரு இந்த வானொலியை ஆரம்பித்தவர்களில் ஒருவன். பொழுது போக்கிற்காய் ஆரம்பித்த இந்த வானொலியை இப்பொழுது பிரச்சாரத்திற்குக் கைப்பற்றும் அலுவல்கள் நடைபெறுகின்றன. அது அவனுக்கு நன்கு தெரியும். தான் இருக்கும் வரைக்கும் இதற்குள் இயக்கம் சார்ந்த எந்தக் கருத்துக்களையும் திணிக்கக் கூடாது என்பதில் அவன் மிகவும் கவனம் செலுத்தினான். திணிப்பவர்கள் ஓய்வதாக இல்லை. ஏதாவது ஒரு உருவத்தில் தங்கள் திணிப்பை ஏற்றி விடுவதில் அவர்கள் குறியாகச் செயற்பட்டார்கள். உதிரிகளாகப், போராடும் உரிமைகூட மறுக்கப்பட்டு இங்கு அடைக்கலமானவர்களைவிட, நாட்டுப் பிரச்சனை என்கின்ற போர்வையில், பொருள் தேட வந்த கூட்டத்தின் தொகை மெல்ல மெல்ல அதிகரித்துச் செல்ல, அதற்கு அமைய ஒஸ்லோவில் இருந்து வியூகங்கள் வகுக்கப்பட்டுக் காரியங்கள் நடைபெறுவது அரசல் புரசலாக அம்பலமாகிறது. ஒருவன் தனது ஆதரவைத் தான் விரும்பியவர்களுக்குத் தெரிவிப்பதோ, உதவி செய்வதோ அவனுடைய ஜனநாயக உரிமை. அதில் இங்கு யாரும் குறுக்கிடப் போவதில்லை. அதே விதமாகப் புலிகளை ஆதரிப்பவர்களுக்குச் சற்றும் சிந்திக்கத் தெரிவதில்லை. தங்கள் கருத்தை வலுக்கட்டாயமாகத் திணிப்பதிலும், தங்களுக்கு எதிரான ஹரி போன்றோரும் தங்களுக்கு ஆதரவு தரவேண்டும் என்று எதிர்பார்ப்பதிலும், அதற்கான காய் நகர்த்தல் அல்லது காய் வெட்டல் செய்வதிலும் பெரிய அரசியல் சாணக்கியம் வார்டோவில் நடப்பது ஹரிக்கும் தெரியும்.
ஆறுவிதமான மனவோட்டத்தோடு இங்கு வாழ்கின்ற தமிழர்களைக் ஹரிக்குத் தெரியும். ஊர்க்காரன் போராடுகிறான். அவர் தலைவராக இருக்கிறார் என்பதற்காக எந்தக் கேள்வியோ அல்லது அரசியல் ஞானமோ இல்லாமற் கண்மூடித்தனமாக ஆதரிக்கும் ஒருகூட்டம். அவர்களின் மனதில் தங்கள் ஊர்க்காரன்... தங்கள் சாதிக்காரன்... என்பதே அடி மனதில் ஆர்ப்பரித்து, அளவில்லாப் பெருமையாகக் கூத்தாடுகிறது. தங்கள் சாதியைச் சொல்வதே தற்போது தகமை தருவதாக அவர்கள் நினைக்கிறார்கள். இது ஹரிக்கு அதிர்ச்சியையும், மனவேதனையையும் உண்டு பண்ணியது.

இரண்டாவதாகத் தாழ்த்தப்பட்டவர்களாகத் தம்மை இனம்கண்டு கொண்டவர்கள்... தாங்கள் தலித்துக்கள் என்பதில் இருந்து விடுதலை பெற... அறியாமையோடு... பரிதாபமாக, இவர்கள்தான் தங்கள் விடுதலைக்கு வித்திடுவார்கள் என்கின்ற அதீத

நம்பிக்கையில், ஜெ ஜெ போடுவதோடு, வியர்வை சிந்திய பணத்தையும் தானமாகக் கொடுப்பதில் முன்னுக்கு நின்றார்கள். கொடுக்காதவனைப் பார்த்துப் புகைந்தும் திரிந்தார்கள்.

இவர்களைவிட ஆபத்தானவர்கள் மூன்றாம் வகையினர். இது ஹரிக்கு நன்கு புரியும். அவர்களுக்கு எதுவும் முக்கியம் இல்லை. தங்கள் நலன்களைக் காத்துக் கொள்ள யாரையும் விற்கவோ வாங்கவோ பின்னிற்க மாட்டார்கள். அவர்கள் யாருடனும் சேரவோ… எதற்கும் ஜெ ஜெ போட்டுத் தங்கள் காரியத்தைச் சாதித்துக் கொள்ளவோ தயங்காதவர்கள். இதில் ஒருபகுதி கடுந்தேசியவாத மேட்டுக் குடியினரும், வேற்று இயக்கத்தில் இருந்த சுயநலவாதிகளும் அடங்குவர். ஒட்டுமொத்தமாய் இவர்களுக்குப் போராட்டம் பற்றி அல்லது அதன் நன்மை தீமை பற்றி, வருங்காலத்தில் எங்கள் இனத்தை எங்கே இழுத்துச்சென்று விடப்போகின்றார்கள் என்பதைப்பற்றி, எந்த ஆழ்ந்த அக்கறையும் கிடையாது. தங்களுக்கு இந்தப் போராட்டத்தால் இப்போது என்ன கிடைக்கும் என்கின்ற ஓநாய்ப் பார்வை மட்டுமே அவர்களிடம் இருந்தது. அதையும் மீறித் தமிழீழம் கிடைத்தால் தாங்கள் கொலரை இழுத்துவிட்டுக்கொண்டு செல்லலாம் என்பது அவர்கள் கனவாகிற்று. அதற்கு என்ன செய்ய வேண்டும் என்றாலும் அவர்கள் செய்யத் தயாரானார்கள்.

நாலாவதாக ஒரு கூட்டம் போராடும் உரிமை மறுக்கப்பட்ட போது, உயிரைக் காப்பாற்றிக் கொள்ள, எங்கு போகிறோம் என்பது தெரியாது, கொலையாவதில் இருந்து தப்பித்தால் போதும் என்கின்ற ஒரு நம்பிக்கையோடு, விமானமேறி அன்னிய நாடொன்றில் அடைக்கலம் புகுந்தவர்கள். அவர்கள் அடைக்கலம் புகுந்த நாடுகளில் அமைதியான ஒரு வாழ்க்கையை ஆரம்பிக்க முனைபவர்கள். தங்களுக்கு ஊரிலே போராடும் உரிமையைக்கூட மறுத்த அதே இயக்கத்திற்கு ஆதரவு தரவேண்டும் என்கின்ற அழுத்தங்கள் வரும்போது, அவர்களுக்கு இவர்களை முழு மூச்சாய் எதிர்க்க வேண்டும் என்பதைத் தவிர வேறு தேர்வுகள் இருப்பதாய்த் தோன்றவில்லை. அவர்களோடு அந்த இயக்கத்தால் பாதிக்கப்பட்டவர்கள், உடல்ரீதியாகச் சித்திரவதைப் பட்டவர்கள், பிழை செய்து கோரமாக அடிவாங்கியவர்கள், அல்லது உண்மையாகவே தனது நலனையும் பார்க்காது தூர நோக்கோடு நியாயம் கதைத்துத் தேடப்பட்டவர்கள், ஒரு பகுதியாய் நின்றார்கள். இவர்கள்தான் தங்களின் திட்டங்களுக்குப் பலமான தடையாகவும், தமது காரியங்களைச் செய்யவிடாது அச்சுறுத்தலாய் இருப்பதாயும் விசுவாசிகள் புகைந்தார்கள்.

ஐந்தாவதாக தமது உறவுகள் இணைந்ததிற்காய், சொந்த மூளைகளைச் சலவை செய்த பரிதாபமான ஒரு கூட்டம். யாருடைய இழப்புக்களும் மதிக்கப்பட வேண்டியவையே. தமது அந்த இழப்பிற்காக இன்னும் ஆயிரம் இழப்புக்களை நியாயப்படுத்துவது தங்கள் பலிக்காக ஆயிரம் பலிகள் கேட்பது போன்ற பலி கேட்கும் கோரம். இதில் என்ன

நீதியிருக்கிறது என்பது ஹரிக்குப் புரிவதில்லை. உங்கள் சொந்தங்கள் மாவீரர் ஆனதிற்கு இன்னும் ஆயிரம் ஆயிரம் அப்பாவிகள் தமது விருப்பத்திற்கு எதிராக மாவீரர் ஆகவேண்டும் என்பது என்ன மனோவிகாரம் என்பது ஹரியின் எண்ணம். ஆறாவதாக எந்தவிலை கொடுத்தும் புலிகளை எதிர்ப்பது என்கின்ற போர்வையில் வன்முறையை வரித்த மாற்று இயக்கத்தினரும், புலியால் ஒருகாலத்தில் தண்டிக்கப்பட்டவர்களும். இவர்கள் பயங்கரத்திற்குப் பயங்கரம் என்பதில் பண்பிழந்து போனவர்கள்.

யார் எப்படி இருக்கிறார்கள் என்பது ஹரிக்குப் பிரச்சனையில்லை. மற்றவர்களும் தங்களைப் போல் இருக்க வேண்டுமெனத் திணிப்பதுதான் இங்குள்ள பாரிய பிரச்சனை என்பது ஹரியின் எண்ணம். விரும்பிக் கொடுப்பதைப் பற்றி யாரும் எதுவும் அலட்டப் போவதில்லை. திணித்தல், வெருட்டிப் பறித்தல், என்பதை அவனால் ஏற்றுக்கொள்ள முடியாது.

குகன் பொறுமை இழந்தான். ஒலிப்பேழையைத் திடீரென மேலே தூக்கிக் காட்டிய வண்ணம்,

'என்ன திரு... பாட்டுப் போடுறியளோ இல்லையோ? எல்லாரும் நாட்ட விட்டிட்டுத்தான் ஓடி வந்தம். எதுக்கு இங்க வந்தம் எண்டதைவிட இப்ப என்ன செய்யப் போறம் எண்டதுதான் முக்கியம். இவ்வளவு காலமும் கன இயக்கங்கள் இருந்திருக்கலாம். அதெல்லாம் பழைய கதை. இனி ஒண்டாச் சேர்ந்து உதவி செய்யிறதுதான் எல்லாருக்கும் பயனா இருக்கும். நீங்கள் இந்தப் பாட்டைப் போடுங்க. அதுதான் தமிழனா இருக்கிறதுக்கு அழகு.' என்றான்.

'அடி சக்கை... இவையின்ர பாட்டைப் போடாட்டி நாங்கள் எல்லாம் நொடியில வேற இனமாக மாறீடுவம். அந்தப் புது இனம்தான் துரோகிகளாக்கும்?' ஹரி பொறுக்க முடியாதவனாய் இரைந்தான். அவன் தன் இயல்பு இழந்திருந்தான்.

'ஹரியண்ண பொறுங்க நான் கதைக்கிறன்.' என்றான் திரு. ஹரிக்குத் தானா இப்படி பொறுமை இழந்து இரைகிறேன் என்கின்ற திகைப்பு உண்டானது.

'குகன் உங்கட ஆசை விளங்குது. எனக்கும் தனிப்பட்ட முறையில அப்பிடிச் செய்யலாமெண்டு அவிப்பிராயம் இருக்குது. ஆனா வார்டோவில எல்லா இயக்கப் பெடியளும் அவைக்குச் சப்போட்டான ஆட்களும் இருக்கினம். உங்கட பாட்டை இண்டைக்கு றேடியோவில போட்டா நாளைக்கு எதிர்ப்பாட்டி இன்னொரு பாடலைக் கொண்டு வருவாங்கள். பிறகு எங்களுக்கு உங்கட பிரச்சாரம் செய்யிறதும், பிரச்சனை தீர்க்கிறதும் முழுநேர வேலையாயிடும். நடைமுறையில அது நித்தம் அடிபாடா வரும். நாங்கள் வானொலி ஆரம்பிக்கிற போதே இந்த வானொலிய எந்த அரசியல் நோக்கத்திற்காகவும் பயன்படுத்துறது இல்லையெண்டு அழுத்தம் திருத்தமாகச்

சொல்லியிருந்தம். நீங்கள் அப்ப இங்க இல்லையெண்டு நினைக்கிறன். இப்ப வடிவாகக் கேளும். இந்த வானொலியில எந்த இயக்கம் சம்பந்தப்பட்ட பாடலும் நாங்கள் ஒலிபரப்பமாட்டம். அது எந்த இயக்கமாகவும் இருக்கலாம். இது தனி மனிதர்களால் உருவாக்கப்பட்ட வானொலி. அப்பிடி இருந்தும் நாங்கள் எல்லாருக்கும் பொதுவாக இருக்கோணும் எண்டு நினைக்கிறம். அந்தக் கொள்கைக்கு யாரும் குந்தகம் விளைவிக்க முடியாது. அதை நாங்கள் அனுமதிக்கவும் மாட்டம். நாங்கள் சுதந்திரமாக இயங்கிறதை தயவு செய்து நீங்கள் அனுமதிக்கோணும். அதுக்கு குந்தகம் செய்யக்கூடாது.' என்றான் திரு.

'நான் ஒரு பாட்டுப் போடக் கேட்டன். நீங்க என்னண்டா நல்ல பிரசங்கம் செய்கிறியள். அப்பாக்குட்டி தோத்துப் போவா. இப்பிடி நாங்களும் பிரசங்கம் செய்யலாம். ஆனா அது தமிழ்மக்களுக்கு உதவுமே? விடுதலைக்கு எப்பிடியெண்டாலும் பங்களிப்புச் செய்ய வேணும். அப்பிடிச் செய்யாதவைய எப்பிடிச் சொல்லுறது எண்டு தெரியுமே?" என்றான் குகன்.

'என்ன... கதை ஒருமாதிரிப் போகுது? வெருட்டுறியா? துரோகி எண்டுவியோ? உங்கட பட்டப் பெயர்களுக்குப் பயந்து, இல்லாட்டி வெருட்டலுக்குப் பயந்து நாங்கள் மசிவமெண்டு நினைச்சா அந்தக் கனவை நிரந்தரமா மறந்திடும். இது நாங்கள் நடத்திற வானொலி. எங்களுக்கு எப்பிடி நடத்தோணுமெண்டு ஒரு பிளான் இருக்குது. அதன்படிதான் இது நடக்கும். ஆருக்கும் கும்பிடுபோட்டு வானொலி நடத்த நாங்கள் தயாரில்லை.' என்றான் திரு.

'நீங்கள் ஏதோ றேடியோவைச் சொந்தமாய்க் கொண்டுவந்த மாதிரியெல்லே கதைக்கிறியள். இது தமிழரைச் சாட்டி எடுத்த றேடியோத்தானே? அதே தமிழர் கேட்டா அது எங்களிட்ட வரும். அதை எப்பிடிச் செய்யுறதெண்டு எங்களுக்குத் தெரியும். தமிழற்ற பெரும்பான்மை எங்களோட இருக்குது. உங்களுக்கு அது தெரியுமே?" என்றான் குகன்.

'எங்க நிண்டுகொண்டு என்ன கதைக்கிறா என்ன...? எங்களைப் பாத்தா கேணையராத் தெரியுதோ?" என்று கூறிய திரு தான் என்ன செய்கிறேன் என்பதை அறியாதவனாய் அவனை நோக்கிப் பாய்ந்தான். ஹரி துடித்துப் பதைத்து எழுந்து திருவை எட்டிப் பிடித்தான்.

'தேவையில்லாமல் கைகலப்புச் செய்யிறேல்ல. பிறகு அதுவே ஒரு காரணமாய்ப் போயிடும்.' என்று ஹரி சமாதானம் செய்தான்.

'நாங்களே சண்டைக்குப் போறம். அவங்கள் எல்லே தேடி வந்து சண்டைக்கு இழுக்கிறாங்கள். பெரும்பான்மை சிறுபான்மை பற்றி எல்லே கதைக்கினம். தாங்கள் பெரும்பான்மையா இருந்தா எங்கள என்னவும் செய்யலாமெண்ட இளக்காரம் பாருங்க.

இவையெல்லாம் சிறுபான்மைக்கு விடுதலை வாங்கித்தார மூஞ்சியள். தங்களத் திருத்தத் தெரியாதவன் எல்லாம் உலகத்தைத் திருத்த தொடங்கின மாதிரித்தான் இது.'

'சரி விடு திரு. சும்மா கத்துறவனைப் பாத்து நாங்களும் கத்தினா அது நிலவைப் பாத்து நாய் குரைக்கிறமாதிரி. கொஞ்சம் பனியில இருக்கினம். காலம் கெதியாகத் தணிய வைக்கும்.' என்றான் ஹரி.

'ஓ யாருக்கு பனியெண்டு இருந்து பாருங்கோ. எங்கட பலம் தெரியாமல் கதைக்கிறியள். துரோகியள் கூட்டத்தை அடக்கிறமாதிரி அடக்க எங்களுக்கு அனுமதி இருக்குது.' என்றான் குகன்.

'ஆரடா துரோகி? ஆரடா துரோகி?'

திரு ஹரியிடம் இருந்து திமிறிக்கொண்டு குகனை நோக்கி ஓடினான்.

## அத்தியாயம் 6 சங்காரம்

தென்றல் குளிரை இறுகத் தழுவி திமிர்த்து எழுந்த அகங்காரத்தோடு அந்த மனிதனை உரசிச் சென்றது. அந்த மனிதன் பல்கணிக் கதவைச் சாதுவாகச் சாத்தினான். பின்பு சிவகரனைக் கோபமாகப் பார்த்தான்.

'நீ பேசாமல் இரு. எனக்குப் பணம் முக்கியம் இல்லை. ஆத்ம திருப்தி அதைவிட முக்கியமானது. பணம் முக்கியமாய் இருந்தால் உங்களைப் போல தெண்டல் குறுப்பில் நானும் சேர்ந்திருப்பன். எனக்கு இந்த விஷயம் தெரியாது எண்டு நினைக்கிறியா? தெரியும். ஆனா மனச்சாட்சியை விக்க முடியேல்ல. அதைவிடு… ம்… உனக்கு உன் உயிர் முக்கியம் இல்லையா… என்ன?' என்றான்.

'ஐயோ என்னை ஒண்டும் செய்து போடாதே.'

'ம்… அப்ப சொல்லு. எங்கே பணம் இருக்குது எண்டதைச் சொல்லு.'

'வெளியால இருக்கிற தகரக்கொட்டிலுக்கு நடுவ ஒரு கார்ப்பெற் இருக்குது. அதை கிளப்பிப் பாத்தியெண்டா நிலம் தெரியும். அந்த இடத்தில நடுவ இருக்கிற நாலு கல்லு அசைக்கக்கூடியதாக இருக்கும். அந்தக் கல்லுகளை எடுத்தியெண்டா ஒரு இரும்புப் பிறேம் இருக்கும். அதையும் தூக்கினா மூண்டு பார்சல் கீழ இருக்கும்.'

'பிழையா இருந்தா நான் அதுக்கு மேல கதைக்கமாட்டன்.'

'இல்ல… நான் சொன்ன இடத்தில காசு இருக்குது.'

'சரி பாத்திட்டு வாறன்.'

என்று கூறிவிட்டுப் போன அந்த மனிதன் மீண்டும் திரும்பி வந்து சிவகரனின் கட்டுச் சரியாக இருக்கின்றதா என்று மிகவும் அவதானமாய்ப் பரிசோதித்தான். பின்பு

இளகியிருந்த கட்டை மீண்டும் இறுக்கிச் சரி செய்தான். சிவகரனின் கைத் அலைபேசியைத் தன்னோடு கவனமாக எடுத்துச் சென்றான். அவன் அவசரமாக அந்தக் கொட்டகைக்குள் புகுந்தான். அதற்கும் மின் வசதி இருந்தது அவனது வேலையைச் சுலபமாக்கியது. கார்ப்பெற்றை எடுத்து நிலத்தைப் பரிசோதித்தான். அங்கு இருந்த தகடு போன்ற ஒன்றை எடுத்து கற்களுக்கு இடையில் விட்டுக் கிளப்பினான். கற்கள் கிளம்பின. இரும்புப்பிறேம் வந்தது. கீழே பிளாஸ்ரிக் உறையால் கவனமாகப் பொதி செய்யப்பட்ட மூன்று பொதிகள் இருந்தன. அவசர அவசரமாக ஒன்றை எடுத்துப் பிரித்துப் பார்த்தான். மணம் மாறாத ஆயிரம் குரோணர் தாள்கள் நெருங்கிக் கிடந்தன. விரைவாக அந்த மூன்று பொதிகளையும் தூக்கிக்கொண்டு வீட்டிற்குத் திரும்பி வந்தான். சிவகரன் சும்மாய் இருக்கவில்லை. தப்பித்துக் கொள்வதற்காய் முயன்றிருக்கிறான். முடியவில்லை. கதிரை சாய்ந்து நிலத்தில் வீழ்ந்து கிடந்தான். அந்த மனிதனுக்கு அது கோபத்தை வரவழைத்தது. சிவகரனைக் கதிரையோடு தூக்கி நிறுத்தினான். பின்பு சிவகரனைப் பார்த்து,

'இதைவிட எவ்வளவு இருக்குது?' என்றான்.

'அதுதானே நான் ஏற்கனவே சொல்லிப்போட்டன். இதுக்கு மேல என்னிட்ட ஒண்டும் இல்ல. ஐயோ என்ன சும்மா விட்டிடு. இந்தக் காசை வேற ஒரு இடத்திலும் மொத்தமாக வைக்கேலாமல்தான் அங்க பாதி இங்க பாதியாய் வைச்சிருந்தன். பிளீஸ் இனி என்ன விட்டிடு.'

'உன்ன விடோணும் எண்டுதான் என்னுடைய மனிதாபிமானம் சொல்லுது. அப்பிடி விட்டா இனியும் உன்னை மாதிரி ஆட்கள் சனத்தை ஏமாத்திப், போகாத பாதையை சொற்கமாகக் காட்டிப், பணம் பறிக்கமாட்டியள் எண்டதுக்கு என்ன உத்தரவாதம் இருக்குது சொல்லு பார்ப்பம்?'

'பிளீஸ்... நான் திருந்தீட்டன். என்ன விட்டிடு. என்ர பிள்ளையள நான் பார்க்கோணும்.'

'எனக்கும் உன்ன விடோணும் போலதான் இருக்குது. ஆனா நீ கிரிமினல். என்ர முகத்தப் பார்க்காட்டியும் குரலை வைச்சே யார் எண்டு அடையாளம் கண்டு இருப்பாய். நாளைக்கு என்னை உள்ளுக்கு அனுப்பிப்போட்டுப் பிறகு என்ன திருகுதாளம் போடலாம் எண்டதை இப்பவே யோசிச்சிருப்பாய். ஒரு மனிதனின் உயிரை மற்றைய மனிதன் பறிப்பதற்கு எந்த அதிகாரமும் அவனுக்குக் கிடையாது. அதை யாரும் அவனுக்குக் கொடுத்துவிடவும் முடியாது என்பதையும் நான் நம்புகிறவன். ஆனால் மனிதனாய் இருக்கின்ற மிருகத்திற்கும் அந்த விதி பொருந்துமா என்று என்னை நான் இன்று கேட்டேன். அது இல்லை என்று பதில் சொல்லிச்சு. என்ன செய்யமுடியும்? எத்தினையோ வருஷம் தொடர்ந்து நீங்கள் தப்புச் செய்து இருக்கிறியள். அப்போது உறுத்தாத மனது... திருந்தாத மனது... இப்ப திருந்தும் எண்டு நான் எப்பிடி நம்ப முடியும்? நான் செய்யப் போறது ஒன்றும் புதுமையில்லை. இப்பிடிச் செய்யிறதை எங்கட கலாசாரம் ஆக்கீட்டம் இல்லையா? நம்பவைச்சுக் கழுத்தறுப்பதுகூட எங்கள்

கலாசாரம் இல்லையா? இது நான் உனக்கு முதன் முதலாய் செய்யிறது இல்லையே? எங்களுடைய வரலாற்றில இப்பிடியான கழுத்தறுப்புகள் இல்லாத காலமே கிடையாதே?'

'நான் இந்த விஷயத்தை என்ர உயிர் உள்ளவரைக்கும் யாருக்கும் சொல்லமாட்டன். உனக்கு என்னால எந்தவித இடையூறும் வராது. பிளீஸ் என்ன விட்டிடு.' சிவகரன் மீண்டும் கெஞ்சினான்.

'இப்பிடி உயிர்ப்பிச்சை கேட்டுச், சிலகாலம் நல்ல பிள்ளைகளாகப் பதுங்கிப் பதுங்கித் திரிஞ்சவங்கள் பிற்காலத்தில இயமனாக வந்து நிண்டாங்கள். இது தமிழன்ர பிரத்தியேக சரித்திர அனுபவம். உன்னுடைய கையில இருக்கிற விலங்கைக் களட்டினாலே நீயெல்லாம் நெஞ்ச நிமித்தத் தொடங்கீடுவா. அதுக்குப் பிறகு பொலிசுக்குப் போகேலாட்டியும்... உன்ர அடியாட்களை வைச்சு என்ர உயிருக்கு உலை வைப்பாய். நாங்கள் பழிக்குப் பழி, கொலைக்குக் கொலை செய்து நல்லாய்ப் பழக்கப்பட்டுப் போன இனம். இல்லையே? இது பாண்டவர்கள் இல்லாத பாரதம். ராமன் இல்லாத இராமாயணம். இங்க அழிவும் அதர்மமும் மட்டுமே மிஞ்சும். கடைசியில எதுக்குமே அர்த்தம் இருக்காது.'

'அதைப் பற்றி எனக்குத் தெரியாது. என்ன விட்டிடு.'

'நீ பாவம். உனக்கு விடுதலை தரவேணும். நீர்மூலம் பிறந்து, நீரிலேயே சங்கமித்துப் போகும் இந்துக்களின் பிண்டத்தைக் கொண்டவர்கள் இல்லையா நாங்கள்? ஆத்மாக்கள் என்றும் அரணை அடைய ஆவலாய் உள்ளதை அறிந்தவர்கள்.'

'என்ன சொல்லுறாய்?' சிவகரன் பயத்தில் நடுங்கினான்.

ஐஸ் கரைந்து நீர் சோபாவில் ஊறிற்று. தனது திட்டங்கள் குறிப்பிட்ட நேர அட்டவணைப்படி நடக்கவில்லை என்கின்ற கலக்கம் அந்த மனிதனுக்கு. அவன் அவசர அவசரமாகச் சமையல் அறையை நோக்கிச் சென்றான். டீபிறிசரில் இருந்து மேலும் ஐஸ் கட்டிகளைக் கோளத்திற்குள் போட்டு அதைச் சரி செய்தான். அவனுக்கு அதற்கு மேல் சிவகரனோடு பேசுவதற்கு நேரம் இருக்கவில்லை. ஒருகணம் 'இவனை இப்படியே உயிரோடு விட்டுச் செல்வோமா?' என எண்ணிப் பார்த்தான். பின்பு மனதை மாற்றிய வண்ணம், 'கடமையைச் செய் பலனை எதிர்பார்க்காதே' என்கின்ற பரந்தாமனின் கட்டளைக்கு ஏற்ப, இன்று அதற்கும் பங்கம் வந்துவிட்டது என்கின்ற கோபத்தோடு, சிவகரனின் பின்னால் சென்று, அதே வேகத்தில் தனது முழுப்பலத்தையும் பாவித்து, அந்த வீம கதை போல இருந்த ஐஸ் கோளத்தால் அவனது கழுத்தை நோக்கி வெறி பிடித்தவன் போல் மீண்டும் மீண்டும் தாக்கினான்.

முதல் அடி பட்டதும் சிவகரனிடம் இருந்து ‘ஆ’ வென ஒரு அலறல் அவலமாக வந்தது. பின்பு அவன் மயங்கி அந்த அலறல் அடங்கிற்று. அந்த மனிதன் தொடர்ந்தும் மீண்டும் மீண்டும் தனது மொத்தப் பலத்தையும் சிவகரனின் கழுத்தை நோக்கி இறக்கினான். குறைந்த நேரத்தில் உத்தரிக்காது கொலை செய்ய வேண்டும் என்பது மாத்திரம் இப்போது அவன் மனதிலும் செயலிலும் இடம்பிடித்த ஒரே வேதமாகியது. அவன் மூர்க்கமாகச் செயற்பட்டான். சிறிது நேரத்தில் மிகவும் சாதுவாக மூச்சு போக முடியாது போய் வருவதை அவன் அவதானித்தான். அவன் சிவகரனின் தலையை இரு கையாலும் பிடித்துச் சுற்றி முறுக்கித் திருகினான். ஏற்கனவே கழுத்து எலும்புகள் முறிந்து போய்விட்டதில் அதில் அதிக சிரமம் இருக்க வில்லை. வேட்டைக் கத்தியைப் பாவித்து இருக்கலாம். ஏதோ ஒரு வன்மம் அவனை அப்படிச் செய்யாது தடுத்ததாய் அவன் நினைத்தான். அது என்ன சபதம் என்பது அவனுக்கும், ஆண்டவனுக்கும் மட்டுமே வெளிச்சம்.

சிறிது நேரம் சிவகரனை நின்று பார்த்த அந்த மனிதன் அவனது கைவிலங்கை கழற்றி எடுத்தான். படுக்கை அறைக்குள் சென்று ஒரு போர்வை எடுத்து வந்து அதைப் போர்த்தினான். பின்பு பணத்தை எடுத்துக் கொண்டு ஏரிக்கரைப் பக்கத்தால் இறங்கினான். அமைதியாகத் தனது காரை நோக்கி நடந்தான். எங்கோ மலையடிவாரத்தில் சில ஓநாய்கள் ஊளையிட்டன. இறப்புகள் அவற்றிற்கு எப்படித் தெரிகின்றன? ஆத்மாக்களின் அசைவு ஓநாய்களைப் பயமுறுத்துகிறதா? சிவகரனுக்காகப் பல இயமதூதர்கள் வந்திருப்பார்கள். அவன் தப்பிவிட்டால்? கணக்குப் பிழைத்துவிட்டால்? இயமதர்மனின் முன்னேற்பாடான நடவடிக்கையாக இருக்க வேண்டும் என்று அவன் நினைத்தான்.

## அத்தியாயம் 7 செய்தி

அன்று ஆதவப் பிரகாசமான சனிக்கிழமை. அடிக்கடி விடுப்பெடுத்துக் கொள்ளும் சூரியன் அன்று மனிதர்களுக்கு விடுப்பு நாள் என்பதைப் புரிந்தவன் போல அதிகாலையே முகில்கள் என்னும் ஆடை களைந்து, நீறற்ற நிர்வாணச் சன்னியாசியாக, சுடும் அம்மணக் கோலத்தில் பிரசன்னமானான். ஆட்சி பறிபோன துக்கத்தில் குளிர் கோபித்துக்கொண்டு ஓடிய பின்பு, அதிகாரம் செலுத்தும் கதகதப்பு காற்றின் காதலனாக உறவாடியது. இந்த ரம்மியமான பொழுதுகள் எப்போதாவது இங்கு வந்து உலாவிச் செல்லும். அந்த அருமையான நாளாக இன்று அமைந்தது மனிதர்கள் பெற்ற வரம். அந்த வரத்தைக் கொண்டாட அவன் மனது துள்ளியது.
ராமு இன்று எங்காவது கடற்கரைக்குச் செல்ல எண்ணினான். அப்படிச் சென்றால் சூரியக் கதிர்களைச் சுதந்திரமாக உடலில் பரவவிட்டு, மல்லாந்து படுக்கலாம் என்பது அவன் திட்டம். அந்தத் தவிப்பு திடீரெனத் தவிடு போடியாயிற்று. சுமன் தொலை பேசியில் அழைத்துத் தன்னோடு ஹரி வீட்டிற்கு வருமாறு கூறினான். அது

உண்மையில் ராமுவுக்குச் சற்றுச் சலிப்பாகப் போயிற்று. அவனை யாரும் உதவிக்கு அல்லது பம்பலுக்கு என்று அழைத்தால் மறுக்கும் வழக்கம் அவனிடம் கிடையாது. ராமுவைக் கூப்பிட்டால் அவன் நிச்சயம் வருவான் என்பது எல்லோருக்கும் தெரிந்த விடயம். அதுவே அவன் பலவீனம். எந்த விஷயத்துக்குப் போனாலும் சுமன் ராமுவைத்தான் அழைப்பான். ராமு தனது ஊர்க்காரன் என்பதில் அவன் அதீத உரிமை எடுத்துக்கொள்வான். அசுரனைப் போன்ற உடலும், அதற்கேற்ப பலமும் இருப்பது அடுத்த காரணம். யார் அழைத்தாலும் ராமு அதற்கு ஒருநாளும் வெளிப்படையாகச் சலித்துக் கொண்டது கிடையாது. அவன் எப்போது யாரைப் பார்த்தாலும் சிரித்த முகத்தோடு உதவி செய்வான். அசுரத் தோற்றத்திற்குள் இருக்கும் அழகான குழந்தை மனிதன் அவனிடம்.

ஹரி வீட்டிற்கு ராமுவும், சுமனும் செல்லும் போது பதினொரு மணி ஆகிற்று. ஹரி உல்ஸ்றுட்டில் உள்ள தனி வீடொன்றில் குடியிருந்தான். தெரியாத்தனமாய் சில காலத்திற்கு முன்பு அந்த வீட்டை வாங்கிவிட்டு இப்பொழுது வட்டி கட்டுவதாய் எப்போதும் அழுவது அவன் வழக்கம். தனி வீடு என்றால் ஒவ்வொரு மாதமும் பராமரிப்புப் பணம் செலுத்தத் தேவையில்லை. அதை ஈடுசெய்ய நாங்களே பராமரிப்பு வேலைகளைச் செய்யவேண்டும். அந்த வேலைகள் இப்போது அவனுக்கு அலுத்துப் போக இதை விற்றுவிட்டுப் பழையபடி பிளாற் வாங்கப் போகிறேன் என்று கூறுவான். பூமணி அதற்குக் ஹரியை விடமாட்டாள். தனி வீட்டில் இருந்தால்தான் தாராளமாகச் சத்தம் போடலாம்... விரும்பியதை யாருக்கும் பயப்படாமற் சமைக்கலாம்... விரும்பியது போன்று விருந்தினரை அழைக்கலாம்... கொண்டாடலாம்... கூத்தாடலாம்... என்கின்ற சுதந்திரத்தை இழப்பதற்கு அவள் தயாராக இல்லை. நான்கு ஆப்பிள் மரத்தைச் சொறிவதிலும், பூக்கன்றை நீவி விடுவதிலும், வளர்ந்த புல்லை மொட்டை அடிப்பதிலும் பிள்ளைகள் இல்லாது புழுத்துப் போன நேரத்தைப் போக்காட்ட வழி கண்டதாக அவளுக்குத் தோன்றியது.

ஹரிக்குப் பொழுது போவது ஒரு பிரச்சனையாக இருப்பது இல்லை. ஊர்ப் பிரச்சனைகள், கூட்டங்கள், இலக்கியச் சந்திப்புக்கள், மலிந்துவிட்ட கலை நிகழ்ச்சிகள், பிறந்த நாட்கள், கலியாணவீடுகள், சாமத்தியவீடுகள், செத்தவீடுகள் என்பதாக அவன் ஓய்வின்றி வலம் வருவான். பூமணி சிலவற்றிற்கு அவனோடு போய் வந்தாலும், பலதிற்கு அவள் செல்வதில்லை. அதுவும் பிறந்தநாட் கொண்டாட்டம் ஒவ்வொரு சனி ஞாயிறும் வந்து போகும். பரிசுப் பொருட்களையும் கொடுத்து, பல்லையும் இளிப்பது சங்கடமாயினும் சமாளித்துக் கொள்ளலாம். உங்களுக்கு எத்தனை பிள்ளைகள் என்கின்ற அநாகரிகமான கேள்வி முன்பின் தெரியாதவர்களிடம் இருந்து திடீரென எறியப்பட்ட பந்தாய் வந்து விழும். அப்படியான சந்தர்ப்பங்களில் பூமணி துவண்டு போவாள். அதற்காக மட்டுமே அவள் பிறந்த நாட் கொண்டாட்டத்திற்கு அறவே போக விரும்புவதில்லை. ‘நீ அந்தரத்திலைதான் வாராய் இல்லை.’ எனக் ஹரி அவளைக்

கொப்பில் ஏற்றிச் சரிக்க நினைத்தாலும் பூமணி அதற்குப் பலியாவதில்லை. பூமணிக்குத் தண்டல்காரரைப் பிடிப்பதில்லை. தண்டல்காரரும் இலேசாய் அவளை விடுவதில்லை. நிறைய வாதப் பிரதிவாதங்கள் நடந்தாலும் கடைசியில் அவள் ஒருபோதும் அநியாயத்திற்கு முதலீடு செய்ததில்லை. அதனால் இவர்களுக்கு இலவசப் பட்டங்கள்… முதுகிற்குப் பின்னால் பல வசைமொழிகள்… கிடைக்கும். அது காதிற்கும் எட்டும். அது காதிற்கு எட்டினாலும் எதைச் சரி என்று நம்பினார்களோ அதைக் கடைப்பிடிப்பதில் அவர்கள் உறுதி காட்டினார்கள். அவர்களிடம் இரண்டு நாக்கு இருக்கவில்லை. இரண்டு பேச்சிற்கும் அங்கு இடமில்லை.

காலம் முரட்டுத்தனமாக முன் நகர்ந்து சென்றது. தூற்றியவர்களும்… தூய தமிழ்ப் பட்டங்கள் தந்தவர்களும்… இப்போது தொலைந்து போன கனவில் துக்கத்தோடு மிதக்கிறார்கள்.

சிறிது நேரத்தில் சுமனும், ராமுவும் வருவார்கள் என்பதை அறிந்த பூமணி வெளியே வைக்கும் கதிரை, மேசையைத் துப்பரவு செய்தாள். அதில் ஒரு அழகிய பூச்சாடி நிறைய நீர் நிறைத்து, தனது கைவண்ணத்தில் வளர்த்த மலர்களைத் தண்டோடு வெட்டி ஊன்றி விட்டாள். அது அழகோடு வாசம் தரும் அற்புதத்தைப் புரிந்தது. ஹரியின் களஞ்சியத்தில் இருந்த வியர்ப் போத்தல்களை எடுத்து குளிர்சாதனப்பெட்டியில் காலியாக இருந்த இடம் தேடி வைத்தாள். இன்று கிறில் போடலாம் என்பதுதான் அவளின் திட்டம். ஹரிக்கு அது பிடிக்கவில்லை. கோடைக் காலம் வந்துவிட்டால் கிறில் போடுவதுதான் வழக்கம். எரித்துச் சாப்பிடும் சாப்பாடும் ஒருவகையில் சுகாதாரக்கேடு என்பது அவனது நீண்டகால வாதம். இன்று வெயில் என்றாலும் பிரியாணி ஆக்கிச் சாப்பிடவேண்டும் என்கின்ற தனது விருப்பைப் பூமணியிடம் கூறினான். பூமணியும் அதற்குப் பச்சைக் கொடி காட்டினாள்.

பிரியாணிக்குச் சம்பா அரிசி வாங்கச் சென்ற ஹரி திரும்பி வந்து வண்டியால் இறங்கவும் ராமுவும், சுமனும் அங்கே வரவும் சரியாகிற்று. சனிக்கிழமை என்பதால் வீதியில் வழமையைவிடச் சிறு அமைதி நிலவியது. காவல் வண்டி ஒன்று அவர்கள் வீட்டைத் தாண்டிச் சென்றது. பூமணி ஹரியிடம் இருந்து அரிசியை வாங்கினாள். பின்பு எல்லோரையும் பார்த்து ‘உள்ள வாங்கோ.’ என்றாள்.

சுமன் அவசரமாக அவளைப் பார்த்து ‘அக்கா என்ர விஷயம் என்ன மாதிரி?’ என்றான்.

‘அது சரியடா. நான் நேற்று அடிச்சு வந்தனான். போகேக்க கேள் தாரன்.’ என்றாள். ராமு பொறுக்க முடியாதவனாய்,
‘என்னடா அது?’ என்றான்.

‘இல்ல... கொண்டு போனால் செலவுக்கு உதவுமெண்டு ஒரு இருபது காசா அக்காட்ட கேட்டிருந்தன். மிச்சம் என்ர கிரடிற்காட்டில இருக்குது. கலியாணம் எண்டு போனால் நிறையச் செலவு ஆகும்தானே?’

‘என்னிட்டக் கேட்டு இருக்கலாமே?’

‘நீ சம்பளம் கிடைச்சாச் செலவழிச்சுப் போடுவாய் எண்டிட்டுக் கேட்கேல்ல.’

‘அதுவும் சரிதான்.’

மேசையில் குளிரான வியர்ப் போத்தல்களை எடுத்து வந்து வைத்துவிட்டுக் ஹரி அவர்களைப் பார்த்து ‘இங்க வாங்க.’ என்று கூப்பிட்டான். இருவரும் அங்கு சென்றனர். பின்பு அங்கு போடப்பட்ட கதிரையில் அமர்ந்து, வியர்களை எடுத்து பாலைவனத்திற்கு வெள்ளம் பாய்ச்சுவதாக வறண்ட நாவை ஈரமாக்கினர். வெயிலுக்குக் குளிர்ந்த வியர் அருமையாக இருக்க, மேலும் ஒவ்வொரு இழுவை இழுத்தனர்.

‘கோழிய உரிச்சு, வெட்டித் தாறியளே அப்பா?’ எனப் பூமணி குரல் கொடுக்க, ஹரி எழுந்தான்.

‘இருங்கண்ணை, நான் வெட்டிக் குடுத்திட்டு வாறன்.’ என ராமு எழுந்து சமையல் அறையை நோக்கி நடந்தான்.

‘சரி... அப்ப நாங்களும் வாறம்.’ என்ற வண்ணம் ஹரியும், சுமனும் அவன் பின்னால் சமையல் அறையை நோக்கி நடந்தனர்.

‘எப்பிடி இருக்குது கலியாண அலுவல்கள் எல்லாம்?’ ராமு சுமனைப் பார்த்துக் கேட்டான்.

‘காசு இருந்தா இந்தியாவில செய்ய முடியாத வேலையே? அதெல்லாம் ஒழுங்கா நடக்குது. அக்காமாரையும் இயக்கம் விட்டு வைச்ச தங்கைமாரையும் கரையேத்தவே எனக்கு நாற்பது வயசாகீட்டுது.’ என்றான்.

‘கொப்பர் கெட்டிக்காரர். வரிசையாகப் பெத்து வைச்சிருக்கிரார். பார் எங்களுக்கு ஆசைக்குக்கூட ஒண்டில்ல. அதுக்கும் கொடுப்பினை வேணுமடா சுமன். அது சரி, ஊர்ப்பிள்ளையத்தானே பேசி இருக்கினம்?’ என்று கேட்டான் ஹரி.

‘ம்... பாவம் நிறையக் கஸ்ரப்பட்டுப் போனா. அதுதான் சீதனம்கூட வேண்டாம் எண்டு சொல்லி இருக்கிறன். சீதனம் வாங்காட்டி எனக்கு ஏதோ பிரச்சினை இருக்கெண்டு நினைப்பினமாம். எப்பிடியண்ண இருக்குது? எங்கட சமுதாயம் ஒரு நோய் பிடிச்ச சமுதாயம் அண்ணை. அதில ஆயிரம் வருத்தம் ஒட்டி இருக்குது. ஒண்டுக்கு வைத்தியம் செய்ய இன்னொண்டு எழும்பி நிண்டு மூர்க்கமாகக் கூத்தாடுது.’ என்றான் சுமன்.

‘அதெண்டா உண்மைதான் சுமன். அது சரி அப்ப போட்டோவைப் பார்த்துத்தான் சரி சொல்லி இருக்கிறா போல?’ என்றான் ராமு.

‘இதென்ன கேள்வி ராமு? நாங்கள் இன்னும் தமிழராகத்தானே இருக்கிறம். நீர் ஏதோ நோர்வேக்காரன் மாதிரிக் கதைக்கிறீர்?’ என்றான் சுமன்.

‘இல்ல சுமன். நாங்கள் ஒரு திருந்தாச் சமுகம். நோர்வேக்காரன் ஏதோ உரிஞ்சுபோட்டுத் திரியிறதாயும், நாங்கள் எல்லாரும் கௌவரிமான்கள் மாதிரியும் நினைக்கிறம். அவங்களிட்ட இருக்கிற நல்ல பழக்கங்களைத் தத்தெடுக்கிறது இல்லை. அதில எந்தக் கரிசனையும் எங்களுக்குக் கிடையாது. அவங்களில எது கொஞ்சம் கூடாதோ, அதைத் தூக்கிப் பிடிக்கிறதில பின்னுக்கு நிற்கிறேல்ல. இன்னும் துடைக்கிறது கழுவுறது பற்றி மாயிற எங்களுக்கு அவங்கட பரந்த அறிவு பற்றின அக்கறை வாறேல்ல.’ என்றான் ராமு.

‘சரி ராமு, இப்ப நீ என்னத்தைச் சொல்ல வாராய்?’ என்று கேட்ட சுமன் ராமுவுக்குப் பதிலாக கையைக் கழுவிவிட்டுக் கோழியை எடுத்து, அதன் தோலை உரித்தான். ஹரி மெல்லிய சத்தத்தில் றேடியோவைப் ஓன்பண்ணி வைத்தான்.

‘முகமே தெரியாமல்... போட்டோவைப் பாத்திட்டுக் கலியாணத்துக்கு ஒத்துக் கொள்ளுறது நீண்டகால வாழ்க்கைக்கு எவ்வளவு உசிதமா இருக்கும்?’ என்றான் ராமு.

‘அதுக்காக வாழ்ந்து பார்த்துக் கலியாணம் செய்யேலுமே? சுவைச்சுப் பார்த்து வாங்கிற உரிமை சாப்பாட்டில சிலவேளை இருக்கலாம். எங்கட கலாசாரத்தில ஆணுக்கும் பெண்ணுக்குமான திருமண உறவில அது இருக்க முடியாது. உந்த விளையாட்டெல்லாம் இவங்களுக்குத்தான் சரி. பிடிச்சாக் கலியாணம் இல்லாட்டி காத...’ என்றான் சுமன்.

‘பேசிச் செய்யிற கலியாணத்தை இப்ப நாங்கள் மட்டும் செய்யேல்ல. நொஸ்க்குகளும் செய்யினம். இப்ப அவை தாயிலாந்துக்குப் போய்த் தள்ளி வாறது எங்களைவிடக் கேவலமாகத்தானே இருக்குது? தாயிலாந்துப் பெம்பிளையளுக்கும் இவங்களுக்கும் என்ன ஒற்றுமை இருக்குது? இவங்களிட்ட இருக்கிற காசில மனிசரை வாங்கிவாற மாதிரி இல்லையே அது? வறுமையில காசுக்காக அவளவையும் ஒட்டு மொத்தமா விலை போறதா எனக்குப் படுகுது? எல்லா இடத்திலையும் குறைகள் இருக்குது. சிலவேளை இந்தக் குறைகளைப் பற்றி இங்க பெரிசுபடுத்துறேல்ல. தாயிலாந்துப் பெம்பிளையளைக் கொண்டு வந்து சந்தோஷமாய் இருக்கிறதை ரீவியில காட்டுவாங்கள். ஆனா இவங்கட வன்முறைக்குப் பலியாகிறவை பற்றிக் கதையே வாறேல்ல. நாங்கள் பேசிச் செய்தாலும் ஒரே காலாசாரம், ஒரே மொழி, சிலவேளை ஒரே கிராமமாய் இருக்கும். இரண்டு குடும்பம் இணையிற உறவு. அதைவிட இதில பிழை குறைவாத்தான் வரும். நானும் அக்காவும் அப்பிடித்தானே கலியாணம் செய்தம். பிரச்சனையே? ஒண்டிரெண்டு தப்பா வரும். அது காதலிச்சுக் கலியாணம் செய்தாலும் வாறது தானே? வாழ்ந்து பார்த்தபிறகு பிடிச்சாக் கலியாணம் செய்யிறது நல்லதுதான். ஆர் அதுக்கு வாறாளவையடா ராமு? அப்பிடி எண்டா நான் இன்னுமொரு கலியாணம் செயலாமெண்டு யோசிக்கிறன்.’ என்றான் ஹரி சிரித்தவண்ணம்.

‘அக்காவிட்ட அடி வாங்கப் போறியள். நீங்கள் சொல்லுறதும் சரிதான் அண்ண. நொஸ்க்குகள் பெம்பிளையள வாங்குறாங்கள். நாங்கள் ஆம்பிளையள விக்கிறம். எப்ப இதெல்லாம் திருந்துமோ தெரியாது.’ என்றான் ராமு.

‘ராமு! அது தண்ணி விழுந்து கல்லுத் தேயிறமாதிரி. அதுகின்ர வேகத்திலதான் மாற்றம் வரும். எங்கட அவசரத்துக்கு எல்லாம் இப்பிடியான மாற்றங்கள் சட்டென்று வந்திடாது.’ என்றான் ஹரி.

‘அதுக்காக நாங்களும் சும்மா இருக்கக் கூடாதுதானே?’ என்றான் ராமு.

‘அதுவும் உண்மைதான்.’ என்றான் சுமன்.

‘ராமு நீ எப்பவும் முன்னுக்கு நிக்கிறவன்ரா தம்பி. எத்தினை பிரச்சனைக்குத் துணிஞ்சு முன்னுக்குச் சமாதானம் செய்யப் போயிருப்பா? உன்ர மனசு சின்னச் சின்ன விஷயத்துக்கும் பொங்கும். சிலவேளை அதுதான் வாழுற மனிசருக்கு அடையாளமோ என்னவோ? எனக்கு அது பிடிக்குமடா தம்பி. மனிசரெண்டா தன்னைச் சுத்தி என்ன நடக்குதெண்ட அக்கறை இருக்கோணும். அதில பிழை இருந்தா எந்தக் கொம்பன் எண்டாலும் தட்டிக் கேட்கோணும்.’ என்றான் ஹரி.

‘இதை எங்கட சமுதாயம் ஏற்கனவே செய்திருந்தா அங்க கோவணமும் இல்லாமல் ஒரு கூட்டம் அலையவேண்டி வந்திராது. எல்லாரும் வாய் பொத்தி மௌனம் காத்து எங்களுக்கே நாங்கள் கொள்ளி வைச்சமாதிரிப் போயிட்டுது.’ என்றான் ராமு.

‘இப்பிடியும் சொல்லலாம் ராமு. ஊரில இருந்த சனங்கள் வாய் திறந்தால் உடனேயே கொள்ளி வைச்சிருப்பாங்கள். வாய் திறவாமல் இருந்ததிற்கு கடைசியில் மொத்தமாகக் கொள்ளி வைச்சாங்கள். வெளிநாட்டில இருந்து கொடி பிடிச்ச சனத்துக்குச் சுயநலம், சிலருக்கு அறியாமை. அதைவிடப் போராட்டத்தை வைச்சு வியாபாரம் செய்தவங்களை என்ன செய்ய முடியும்? எல்லாப் பக்கமும் பிழைகளும், விமர்சனங்களும் இருக்குது. அது ஒழுங்குபட்டால் ஏதாவது விடிவு வரும். அது சரி சுமன்… நிறையக் கஸ்ரப்பட்டவா எண்டு சொன்னா? என்ன நடந்தது?’ என்றான் ஹரி.

‘யாழ்பாணத்தில இருந்து கலைக்கப் போய் வன்னியில இருந்தவை. அங்க நடந்ததைச் சொல்ல வேணுமே? அது இப்ப எல்லாருக்கும் தெரிஞ்ச சங்கதி தானே? முதல்ல பிடிச்சு மொட்டை அடிச்சுப் போட்டாங்கள். மொட்டை அடிச்சா பிறகு இலங்கையில எங்க போகமுடியும்? அதுதானே அவையின்ர அடையாளம். யூதர்களுக்கு கைதி எண் குத்தின மாதிரி இந்தக் கதையும். பிறகு ஒரு மாதிரிக் காசு குடுத்து வவுனியாவுக்கு வந்து இருக்கினம். அங்க இருந்து ஒரு முஸ்லீம் குடும்பத்தின்ர துணையோட பதுளையில எட்டுமாதம் விரும்பாத வீட்டுச் சிறையில இருந்தவையாம். பிறகுதான் வியூட்டிப்பார்றில கட்டை மயிரை நீட்டு மயிராக்கிக் கொண்டு கொழும்புக்கு வந்தவையாம். பிறகு ஒருமாதிரி இந்தியா விசா எடுத்துச் சென்னை வந்து சேர்ந்திட்டினம். அநியாயத்துக்கு பிள்ளையள இழுத்துக்கொண்டு போறது மட்டும் இல்லை, அதுகள் எங்கையும் தப்பிப்

போய்ப் பிழைக்கக் கூடாது எண்டதில எவ்வளவு அக்கறை பாத்தியளே? இஞ்ச பென்ஸ்சில கொண்டு போய்த் தமிழ் பள்ளிக்கூடத்தில விட்டிட்டு… பொழுது போகாமல் கொடி பிடிக்கிறவைக்கு அந்தத் தாய் தேப்பன்ர வலி விளங்குமே?' என்றான் சுமன்.

'உந்த அக்கிரமம் அங்க வீட்டுக்கு வீடு நடந்த காரியம்தானே? யாழ்பாணத்தை ஆளேக்க அங்க ஆடிச்சினம். பிறகு வன்னிச் சனத்தை வதைச்சு எடுத்தினம். கடைசியில கோவணத் துண்டும் இல்லாமல் போன சனங்கள் வன்னிச் சனங்கள்தான். காணி பூமியோட வசதியாய் இருந்த சனம் இண்டைக்கு கஞ்சிக்காக மானத்தை விக்குதுகள். பொழுது போகாமல் அரசியல் பேசினவங்கள் கோவணத்தோட நிக்கிற சனத்தை மறந்து போட்டு… சுருட்டுறதைச் சுருட்டி முடிய, முகவரிய மாத்திக்கொண்டு கோடம்பாக்கத்திற்குப் போயிட்டாங்கள். இங்க இருக்கிற கொஞ்ச லுசுகள் கிடப்பில போட்ட வட்டுக்கோட்டைத் தீர்மானத்தை வைச்சு… நாடுகடந்த அரசாங்கம் நடத்தப் போகினமாம். இன்னும் யாரை ஏமாத்திற பிளானோ தெரியாது.' என்றான் ஹரி.

'உந்தப் பினாமியள் எல்லாம் எவ்வளவு காசைச் சுருட்டி இருப்பாங்கள்? இப்ப ஒரு சதம் அங்க அந்தரிக்கிற சனத்துக்கு குடுக்காமல்… தங்கட பொக்கேற்றுக்கை எல்லாத்தையும் போட்டிட்டு… எந்தக் குற்ற உணர்வும் இல்லாமல்… பவுசாத் திரியுறாங்கள் தானே? இவங்களை எல்லாம் யார் கேட்கிறது?' என்றான் ராமு.

'விடு ராமு, தன்வினை தன்னைச்சுடும் ஓட்டப்பம் வீட்டைச்சுடும் எண்டு பட்டினத்தார் சொல்லி வைச்சிருக்கிறார். ஆனா அது பட்டினத்தார் காலத்துக்குச் சரியாய் இருந்திச்சுது. இப்ப பாவிகள் காலம். எதுகுமே பலிக்குதில்லை.' என்றான் சுமன்.

கோழி வெட்டி முடிந்தது. பூமணியின் சமையல் இரகசியங்களை அறிய எண்ணியவர்கள் போல ராமுவும் சுமனும் அங்கே இருந்த நாற்காலியில் அமர்ந்தனர். பூமணி சம்பா அரிசியை அவியப்போட்டுக் கோழியிறைச்சிக்கறி வைப்பதற்கான ஆயுத்தத்தில் ஈடுபட்டாள். பின்பு ஏதோ நினைத்தவளாக,

'உண்மையா அப்பா… இவன் ராமுவைப் போல இல்லாட்டிச் சுமனைப் போல ஒரு தம்பி இல்லையே எண்டு எனக்கு இப்ப கவலையா இருக்குது.' என்றாள்.

'அது இப்ப சரியான லேற்றே?' என்ற வண்ணம் ஹரி எழுந்து மேலும் மூன்று வியர்களை எடுத்து மேசையில் வைத்தான். ராமுவிற்கும், சுமனிற்கும் ஹரியின் நக்கலை நினைத்துச் சிரிப்பு வந்துவிட்டது.

'டே நீங்களும் இந்த ஆளின்ர பகிடியைக் கேட்டுச் சிரிக்கிறியளே? உந்த ஆளுக்குப் பகிடிகூட விடத்தெரியாது. பகிடி விட்டா நினைச்சு நினைச்சுச் சிரிக்கோணும். அப்பிடியே இருக்குது இது?' என்று பூமணி தன்னைத் தானே சமாதானம் செய்தாள்.

'கொப்பரே போயிட்டார். இப்ப போய்த் தம்பியெண்டா? செயற்கை முறையில உருவாக்கிக்கூட எடுக்க முடியாது. பிறக்கிறது சொந்தத் தம்பியா இருக்காது.'

‘ஐயோ பெரிய பகிடியெல்லாம் விடுகிறார். எல்லாரும் சேர்ந்து சிரியுங்கோ.’ இயலாமையில் பூமணி ஏதோ சொன்னாள்.

வானொலியில் செய்தி போனது. அதில் யாரோ ஒரு வெளிநாட்டவரைப் பிணமாக கண்டு எடுத்ததாகவும், அவர் கொலை செய்யப்பட்டு இருக்கலாம் என்றும் அது கூறியது. ராமுவின் கை தவறுதலாகப் பட்டதில் அவன் வியர்ப் போத்தல் சரிந்து அமிர்தம் மேசையில் சிந்திற்று. பொன்திரவம் சிந்தியதில் அவர்கள் பதறிப்போனார்கள்.

‘இதுக்கு மாத்திரம் ஒரு நாட்டிலும் குறையில்லை.’ என்ற வண்ணம் சுமன் வியர்ப் போத்தலை விரைவாக நிமிர்த்தி வைத்தான். வியர் அதிகம் விரயமாகவில்லை. ஹரி காகிதம் கொண்டு வந்து மேசையைத் துடைத்தான். பின்பு சுமன் தனது வியரை எடுத்துக்கொண்டு வெளியே செல்ல, மற்றவர்களும் அவன் பின்னால் தங்கள் வியர்களை எடுத்துக் கொண்டு சென்றார்கள்.

அப்படிச் சென்றவர்கள் வெளி மேசையில் இருந்து சூரியப் பிரசன்னத்தைச் சுகித்தனர். அப்போது ஹரியின் அலைபேசி சிணுங்கியது. போனை எடுத்துக் கதைத்த ஹரியின் முகம் பேயறைந்ததாய்ச் சட்டென மாறிற்று. கதைத்து முடித்ததும் அலைபேசியைப் பொக்கேற்றுக்குள் வைத்துவிட்டு நிமிர்ந்தவனைப் பார்த்து,

‘என்ன ஹரியண்ண, என்ன செய்தி?’’ என்றான் சுமன்.

‘இவன் சிவகரனை யாரோ கொலை செய்து போட்டாங்களாம். அவனுக்குத்தான் அங்க கித்தை இருக்குதாம். கித்தைக்குப் போனவனைக் காணேல்ல எண்டு மனிசி மலேசியாவில இருந்து போன் பண்ணி இருக்கிறா. பிறகு யாரோ அவனைத் தேடிப் போய்ப் பார்த்த இடத்திலதான் அது தெரிஞ்சுதாம்.’ என்றான் ஹரி.

‘ஊரையெல்லாம் நல்லா ஏமாத்தித் திரிஞ்சவன். யாராவது வஞ்சம் தீர்ப்பாங்கள்தானே? நம்பி ஏமாந்த சனம் சும்மாவே விடும்? இவரும் இசகுபிசகாக கித்தையில தனியப் போய் மாட்டிட்டார் போல இருக்குது.’ என்றான் சுமன் நேரே பார்த்தது போல.

‘என்னெண்டாலும் கொலை செய்திருக்கத் தேவையில்லை. கொலையால ஏதாவது பிரச்சனை தீரப்போகுதே? கொலை செய்தாலும் தீராத ஆத்திரம் ஆருக்கும் இருக்குமோ என்னவோ? உங்க சிலருக்கு இவங்கள் செய்த வேலையால கிட்டத்தட்ட விசரே பிடிச்சிட்டுது. இஞ்சதானே? விசரில கொலை செய்தா ஒண்டும் செய்யேலாது.’ என்றான் ராமு.

‘ம்... அதுவும் உண்மைதான். எங்கட நாட்டு வன்முறைய இங்கையும் காட்டுறது அவ்வளவு நல்லாய் இல்லை. எங்கட தமிழ்ச்சனம் கொஞ்ச நாள் குரன்லாண்டிற்க அடிபட்டாங்கள். அது இப்ப அடங்கீட்டுதெண்டு இருந்தா, திடீரெண்டு இப்பிடி தொடங்கி இருக்கிறாங்கள்.’

‘சரியண்ண. பெரிய தியாகி ஒருத்தர் போட்டார் எண்டு கவலைப்படுவமே? உதைவிட்டிட்டு வேற ஏதாவது கதையப்பாப்பம்.’ என்றான் ராமு.

‘அதுவும் சரிதான். இவங்கள் ஊரையெல்லாம் பிடுங்கினாங்கள். அந்தக் காசில ஆயுதம் ஆயுதமாக வாங்கி அனுப்பினாங்கள். அதால ஆயிரம் ஆயிரமா அப்பாவிச் சனம் அழிஞ்சிருக்கும். அதுகின்ர வினையை இப்ப அனுபவிக்கிறாங்கள். உப்புத் திண்டவன் தண்ணி குடிக்கத்தானே வேணும்? பிறகு உதுக்கெல்லாம் என்ன அனுதாபம் வேண்டிக்கிடக்குது? பாவம் பட்டினத்தாற்ற வாக்கு சில இடத்தில எண்டாலும் பலிக்கட்டன்.’ என்றான் சுமன்.

‘அப்பிடி இல்லச் சுமன்… யார் செய்தாலும் தப்பு தப்புத்தானே. இப்பிடித் தப்பு நடக்கேக்க பேசாமல் இருந்துதானே எங்கட இனம் இண்டைக்குச் சந்திக்கு வந்தது. இப்ப இனத்தின்ர இருப்பே அங்க ஈடாடிப் போச்சுது. அதையே தொடர்ந்து இந்த நாட்டில யாராவது செய்தாலும் அது தப்புத்தானே?’ என்றான் ஹரி.

‘நீங்கள் சொல்லுறதும் நியாயம்தான்.’ என்றான் சுமன்.

‘இஞ்சயப்பா, யாரோ தமிழரைக் கொலை செய்து போட்டாங்களெண்டு றேடியோவில சொல்லுது.’ என்று பூமணி சமையல் அறைக்கு வெளியே வந்து நின்று கத்தினாள்.

‘ஓ அது எங்களுக்குத் தெரியும். இவன் சிவகரனைத்தானாம் யாரோ கொலை செய்து போட்டாங்கள்.’ என்று ஹரி கத்த,

‘என்ன?’ என்று பூமணி அதிர்ந்தாள்.

## அத்தியாயம் 8 பலப்பரீட்சை

வார்டோவில் சில காலங்களுக்கு முன்பு…

ஹரி அன்று வலுவாகப் பிரயத்தனப்பட்டு மதம் கொண்ட யானையாகத் திமிறிய திருவை மோத விடாது பிடித்தான். எது நடக்கக்கூடாதோ அதுவே நடந்துவிடும் என்கிற பயத்தில் ஹரிக்கு என்ன செய்வதென்று விளங்கவில்லை. இதைப் பார்த்த மாலதி தொலை பேசியில் சிலருக்கு அதைக் கூறினாள். சிறிது நேரத்தில் அவர்கள் வண்டியில் வந்து இறங்கினார்கள். அவர்கள் வருவதைக் கண்டவுடன் குகன் ஆக்ரோஷமாய் உறுமிவிட்டு வெளியே சென்றான். வந்தவர்களில் சீலன் ஹரியைப் பார்த்து,

‘அடி போடுவமா அண்ண?’ என்றான்.

‘அடி போடுறது பெரிய விஷயம் இல்லை. இந்த வானொலியைக் காப்பாற்றி எங்கட கைக்க வைச்சிருக்கிறது பெரிய விஷயம். அடி போடுறது அதுக்கு உதவாது. பேசாமல் உருப்படியா ஏதாவது சிந்திப்பம்.’ என்றான் ஹரி.

இதைக் கேட்டுச் சோர்வாக இருந்த திரு,

‘கொஞ்ச நேரத்தில என்ன விசரனாக்கீட்டான்.’ என்றான்.

‘அவங்கள் இப்பிடித்தான் செய்வாங்கள் திரு. இது ஒரு ஆரம்பம். இனித்தான் நிறைய நடக்கும். பின்னால நிக்கிற கூட்டத்தைக் காட்டி பிடிக்கிற இடம் எல்லாத்தையும் பிடிப்பாங்கள். அது மட்டும் நிச்சயம். அதை எவ்வளவு காலத்திற்குப் பின்தள்ளிப் போடேலுமோ அவ்வளவு காலத்திற்குப் பின்தள்ளிப் போடுறதுதான் புத்தி.’ என்றான் ஹரி.

‘ம் விளங்குது ஹரியண்ண. நாங்களே உரிமை கேட்டுப் பிச்சையெடுக்கப் போறம் இல்லையா?’ என்றான் திரு.

ஹரி பேசவில்லை. சிறுபிள்ளை வேளாண்மை வீடு வந்து சேராது என்று அம்மா சொல்லும் பழமொழி அவன் ஞாபகத்தில் வந்தது.

*

அந்தச் சம்பவம் நடந்து ஐந்து நாட்கள் கடந்திருக்கும். அதை மறந்து அன்றைய வானொலி நிகழ்ச்சிகளை அட்டவணைப்படுத்துவதில் மாலதி ஈடுபட்டிருந்தாள். திருவும், ஹரியும் கதைத்த வண்ணம் இருந்தார்கள். வெளியே பனி மிதக்கும் வைரத் துகள்களாய் வானத்தை விட்டிறங்கியது. அது பூமியில் விழுந்து மின்னியது. பனியோடு பிரியாத காற்றும் வந்து நின்று வெளியே வராதீர்கள் என்று ஓலமிட்டது. உடலின் ஒவ்வொரு துவாரத்தாலும் குளிர் உள்ளே புகுந்து விடுமோ என்கின்ற உடலின் பதைபதைப்பு. உடல் தன்னிச்சையாக அதில் இருந்து பாதுகாப்புத் தேடச் செய்தது. தோலின் துவாரங்கள் சுருங்கி, ரோமம் குற்றிட்டு நிற்க, உடல் வெப்பத்தை அடைகாக்கும் தற்காப்புத் தந்திரத்தை வரித்தது. மீதமிருக்கும் ஓட்டைகளையும் செயற்கை உடையால் மறைத்துக் கொள்ளும் மனிதர்களின் அறிவும், அதனால் விளைந்த படைப்புக்களும். பெரும் கடலிலே வீசப்பட்ட இரட்டையிலைகள் போன்ற ஒரு தீவாக வாறன் சீ *(Barents Sea)* இல் அந்த வார்டோ நகரம் நகராமல் மிதந்தது. சில மயில்கள் கடலால் பிரயாணித்தால் இரசியாவின் கடல் எல்லையை அடைந்துவிடலாம். இந்தத் தீவில் அமெரிக்காவிற்கு உளவறிந்து சொல்லுவதற்கு அமைக்கப்பட்ட இராணுவ முகாம் ஒன்று இருக்கிறது. அதில் பிரமாண்டமான சட்டலைட்டுக்கள் ஒரு சிறிய குன்றில் ஒழிந்து கிடக்கின்றன. பனிப்போரின் போது சோவியத்தின் பின்வளவில் இருந்து ஒட்டுக்கேட்டு அமெரிக்காவுக்குச் சொல்லிய பெருமை நோர்வேக்கு உண்டு. ஹிட்லரை இந்த வடபகுதியில் இருந்து சோவியத் அடித்துக் கலைத்தது. இருண்டவன் கண்ணுக்கு மருண்டதெல்லாம் பேய் என்பதாய், நேற்றோவுடனும் அமெரிக்காவுடனும் ஒட்டிவிட்ட நோர்வே. ஸ்ராலினின் முரட்டு மீசைக்குள் இருந்த குள்ளத்தனம் இப்போது வெளிச்சம். அது இவர்கள் பயந்ததிலும் நியாயம் உண்டு என்பதை வரலாறாக்கிற்று. இன்றைய இரசியா உலக அமைதிக்கே அச்சுறுத்தல் விடுகிறதா என்கின்ற கேள்வி எழுகிறது.

வார்டோ நகரத்தின் மத்தியில் நிமிர்ந்து நிற்கும் ஒரு கம்பீரமான தேவாலயம். நாங்கள் ஒரு கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தைக் கொடுப்பவர்கள் என்பதை உலகிற்குச் சொல்வதான தியாகத் தோற்றம். இந்தத் தீவைச் சுற்றி விரிந்த நீலக் கடல். கப்பல் கப்பலாக மீனை அள்ளி வந்து, பதனிட்ட பின்பு அவை நான்கு திக்கும் பிரயாணிக்க, எதிர்த் திசையில் இருந்து வார்டோவை நோக்கிய பணத்தின் வரவு.

ஹரிக்கு இன்று ஏனோ இருப்புக் கொள்ளவில்லை. வானொலி வேலைகள் நடந்த போதே காற்றின் பலம் அசுரத்தனமாய் அதிகரித்தது. ஓவென அதன் உளையிடல் எங்கும் எச்சரிப்பது போல எதிரொலித்தது. இந்தத் தீவில் காற்றின் கொடிய ஊழித்தாண்டவம் நித்தம் நடக்கும். அது பழகிப் போன ஒன்றுதான். இருந்தும் இன்று ஹரிக்கு அது ஏனோ அன்னியமாகப் பயமுறுத்தியது. காரணம் இன்றி மனது நிம்மதி இல்லாது அலைந்தது. இதைத் திரு அவதானித்தான்.

'என்ன ஹரியண்ண அந்தரப்படுறியள்?' என்றான்.

'வெளியால ஏனோ வெதரும் சரியில்ல. உள்ளுக்கு ஏனோ மனசும் சரியில்ல. சிலவேளை காரணம் தெரியாமல் இப்பிடியான உளைச்சல்கள் மனதைக் குடையும். மனிசிய எடுக்க வேணும். அந்த அலுவலும் இழுபடுகுது. *UDI* ஐயில விசா கேட்டா நாட்டையே கேட்ட மாதிரி இழுக்கிறாங்கள். அது வேற மனசக் குடையுது.' என்றான்.

'அதுக்கு இப்ப என்ன செய்ய முடியும் அண்ண? குளிர் எல்லாத்தையும் உங்களுக்கு ஞாபகப்படுத்துது போல?' என்றான் திரு. அவனது எள்ளலைப் புரிந்தாலும் புரியாதவனாக,

'உண்மைதான். இது, இந்த நேரத்தில தேவையில்லாத கவலைதான். சிலவேளை இப்பிடித்தான் திரு... சம்பந்தம் இல்லாமல் கவலைகள் வந்து கரும் பூதமாய் நிற்கும். காரணம் தெரியாமல் அது சோகமாய் மூச்சு முட்ட அழுத்தும். அப்பிடி ஒரு கவலைதான் இதுவும். கொஞ்சம் வெளியால போய்க் குளிர் காத்து எடுத்தாச் சரியா வருமோ தெரியேல்ல.'

'ஐயோ உந்தக் குளிருக்கையோ அண்ண? உங்களுக்கும் நோர்வேக்காரற்றை பைத்தியம் பிடிச்சிட்டுது.' அவன் கைகளை நெஞ்சோடு அணைத்து உடலைக் குறுக்கினான்.

'முழுக்க நனைஞ்ச பிறகு முக்காடு எதுக்கு? வார்டோவுக்கு வந்த பிறகு குளிரைப் பற்றி யோசிச்சு என்ன பிரயோசனம்? குளிரை அனுபவிக்க வேண்டியதுதான்.'

'நான் இப்ப உந்த விஷப் பரீட்சைக்கு வரேல்ல அண்ண.' என்றான் திரு.

'சரி சரி நீங்க இருங்க. நான் ஒரு வாட்டி கீழ போட்டு வாறன்.'
என்று கூறிய ஹரி எழுந்து வெளியே சென்றான். மாலதி திருவைப் பார்த்துச் சிரித்தாள்.

வானொலி நிலையம் மூன்றாவது மாடியில் இருந்தது. படிகளால் இறங்கியே கீழே வர வேண்டும். லிப்ற் இல்லாதது பெரிய குறையாக யாருக்கும் தென்படவில்லை. மூன்று மாடிகள் உள்ள கட்டடத்திற்கு லிப்ற் கேட்பது சோம்பேறித்தனம். என்பதாக எண்ணிய ஹரி படிகளால் கீழே இறங்கி வந்தான். முதலாவது மாடியை அண்மித்த போது இரண்டு கார்கள் வந்து வாசலில் சடுதியாக நிற்பது போலச் சத்தம் கேட்டது. 'யாராக இருக்கும்?' என எண்ணிய ஹரி எதற்கும் கீழே சென்றால் அறிந்து கொள்ளலாமென நினைத்த வண்ணம் அவசரமாகப் படிகளால் இறங்கினான்.

ஹரிக்குத் தலை சுற்றியது. அவன் இதை எதிர்பார்க்கவில்லை. திரும்பி ஓடினால் அவமானமாய் இருக்கும் என்கின்ற தன்மானம் அவன் கால்களை அசையவிடாது பூட்டுப்போட்டது. கையில் கட்டைகளோடு ஓடி வருபவர்களை எப்படி எதிர்ப்பது என்பதைக்கூட எண்ண முடியாதவனாய்ச் சில கணங்கள் உறைபனிச் சிலையாக அசையாது நின்றான். குகன் அவர்களுக்குத் தலைமை தாங்கி வந்தான். ஹரி அதிர்ச்சியில் இருந்து விடுபடுவதற்குள் அவர்கள் அவனை அண்மித்து விட்டார்கள். 'முதல்ல இவனுக்குத்தான் அடிபோட வேணும். இவன்தான் இங்க எல்லாரையும் குழப்புகிறது' என்று கூறிய வண்ணம் குகன் தனது கையில் வைத்திருந்த கட்டையால் ஹரியின் தலையில் ஓங்கி அடித்தான். ஹரி நிலைமையைப் புரிந்து கொண்டு தலையைக் குனிந்து தோள்மூட்டைத் திருப்ப அது வழுக்கிச் சென்று கதவில் பட்டு உடைந்து போனது. ராஜீவ்காந்தி இலங்கை இராணுவத்திடம் இருந்து தப்பிய தந்திரம் இங்கு மீண்டும் ஒருமுறை பாவிக்கப்பட்டதாய் ஹரிக்குத் தோன்றியது. இது எந்த இராணுவம் என்பதுதான் ஹரிக்குப் புரியவில்லை. அவன் அவசர அவசரமாகக் கதவுக்கு வைத்திருந்த கதிரையைத் தூக்கி தலைக்கு மேல் முதலிற் பிடித்தான். குகனைத் தவிர்ந்த மற்றவர்கள் அவனை விலத்திக் கொண்டு மேலே சென்றார்கள். குகனுக்கு அதிக துணிவு கிடையாது. ஹரி கதிரையை ஓங்கிய வண்ணம் குகனை நோக்கி ஓடினான். அவன் பயத்தில் மேலே சென்றவர்களைப் பின்தொடர்ந்தான். 'தொடை நடுங்கி…' என எண்ணிய ஹரி கதிரையை எறிந்து விட்டுத் தனது காரை நோக்கிப் பாய்ந்தான். காரை இயக்கிப் பாடசாலை வளாகத்தைத் தாண்டப் பொலிஸ் சத்தத்தோடு வந்தது. யாருக்கோ இந்தத் திட்டம் தெரிந்திருக்க வேண்டும். அவர்கள் முன் யோசனையோடு பொலிசுக்கு ஏற்கனவே அறிவித்து விட்டார்கள். ஹரி தனது காரைப் பின்னே எடுத்து பொலிஸ் போவதற்கு இடம் கொடுத்தான். அவர்கள் அவசரமாக வானொலி நிலையத்திற்குப் போகும் வாசலில் அந்தக் குண்டர்களின் கார்களுக்குப் பின்னே தமது காரை நிறுத்தினார்கள். பொலிசின் சத்தம் கேட்டதுமே காரையும் எடுக்காது சிலர் பாடசாலை வளாகத்தை விட்டு ஓடுவதைக் ஹரி அவதானித்தான். கலையகத்திற்குப் போனவர்கள் மட்டுமே இப்போது

அகப்படுவார்கள். மற்றவர்கள் துண்டைக் காணோம் துணியைக் காணோமென ஓடுகிறார்கள். இதில் ஒன்றும் புதுமை இல்லையெனக் ஹரிக்குத் தோன்றியது.

ஹரி தனது காரை மீண்டும் தரிப்பில் நிறுத்திவிட்டு மேலே சென்றான். பொலிஸ் மூன்று பேருக்குப் பிளாஸ்ரிக் கைவிலங்கு மாட்டி நிலத்தில் படுக்க வைத்திருந்தார்கள். திருவிற்கு மண்டையில் இருந்து இரத்தம் ஓடியது. மாலதி கைமூட்டைப் பிடித்த வண்ணம் வலியிற் புழுவாய்த் துடித்தாள். கண்ணாடியறை தனது உயிரை விட்டிருந்தது. அதன் எலும்புக்கூடு இனி என்னிடம் எந்த இரகசியமும் இல்லை என்பதாக அம்மணம் காட்டியது.

ஹரிக்கு ஒருகணம் இதன் தாற்பரியம் விளங்கவில்லை. 'யார் மீது உள்ள கோபத்தில் யார் சொத்தை நாசப்படுத்துகிறார்கள்? இது கோபமா? அதிகாரமா? அல்லது அடங்கிப்போ என்கிற அச்சுறுத்தலா? அச்சுறுத்தல்தான். அடங்கிப்போ என்கின்ற அச்சுறுத்தல்தான். வன்முறைக்கு வன்முறை என்பது இன்று தமிழரின் வாழ்வின் ஒவ்வொரு அசைவையும் கட்டுப்படுத்துகிறது. அதை மீறினால்... மீற நினைத்தால்... றவுடித்தனம் பதில் சொல்கிறது. இங்கும் அது தன்மொழியில் பதில் சொல்லியிருக்கிறது. உங்கள் சுதந்திரம்... பேச்சுரிமை... எழுத்துரிமை... பொருளாதார வளம் எல்லாம் தங்களுக்குத் தாரைவார்க்கப்பட வேண்டும் என்பதை அடித்துச் சொல்லி இருக்கிறார்கள். அதை மீறினால்... துருவத்தில்... தொலைந்து போன ஒருதீவில்... நீங்கள் ஒளிந்துகொண்டாலும்... எங்கள் பிடியில் இருந்து தப்ப முடியாது என்பதைத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள்.' இவ்வாறாகக் ஹரி சிந்தனையில் மூழ்கினான். பொலிஸார் அம்புலன்சிற்கு அறிவித்த பின்பு அந்த மூன்று நபர்களையும் பிளாஸ்ரிக் விலங்கிட்டபடி தங்களின் வாகனத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அந்த வன்முறையாளர்கள் தியாகிகளின் தோறணைகாட்டிச் சென்றனர். மற்றைய மனிதர்களின் சுதந்திரத்தை வன்முறையால் பறிக்க நினைப்பவர்களின் வாழ்க்கை ஐரோப்பாவில் எப்படி முடிந்தது என்பது எட்டும் தொலைவில் எச்சங்களாக எங்கும் இந்தத் தீவிற்கு மறுபுறத்தில் பரந்து கிடப்பதுகூடத் தெரியாது இவர்கள் ஆடும் ஆட்டம் ஹரிக்கு அருவெருப்பைத் தந்தது. இந்தத் தீவிலிருந்து கடலின் கீழே செல்லும் சுரங்கப் பாதையால் மறுகரையை அடைந்து விட்டால் சிறிய குன்றுகள் நிரையாக அணிவகுத்து நிற்கும். அந்தக் குன்றுகளில் அவர்களின் எச்சங்கள் இன்னும் அழியாது இருக்கிறன. இரசிய எல்லைகளை நோக்கி அமைக்கப்பட்ட அந்தப் பதுங்குகுழிகள் இன்றும் வரலாற்றுச் சாட்சியாக மர மண்டைகளின் மறதிக்கு மருந்தாக இருக்கிறது. ஹரி சிலவேளை அவற்றைச் சென்று பார்ப்பது உண்டு. அநியாயம் நிலைக்காது என்பதை அவை இன்றும் இடித்துரைப்பதாக அவனுக்குத் தோன்றும். எங்கள் சமுதாயத்திற்கு மட்டும் எந்த வரலாற்றுப் பாடமும் உறைப்பதில்லை. அவர்கள்

கண்மூடி நிரந்தரமாகக் கனவு காண்கிறார்கள் என்கின்ற இந்த நினைப்பால் ஹரிக்குத் தலையிடித்தது.

இங்கு நடந்ததைக் கேள்விப்பட்டுக் கணேஸ், றாக்கி, சுமன் ஆகியோர் ஒரு காரில் வந்து இறங்கினார்கள். மேலே வந்தவர்களைக் கண்ணாடி அறையிருந்த பகுதிக்குச் செல்லப் பொலிஸ் அனுமதிக்க மறுத்தது. அவர்கள் படியில் நின்று நெளிந்தார்கள். இதைப் பார்த்த ஹரி வெளியே சென்றான். பின்பு படியை மறைக்காது அவர்களையும் கூட்டிக்கொண்டு மேற்படிக்குச் சென்றான். விரைவில் அம்புலன்ஸ் ஆட்கள் வந்து திருவையும், மாலதியையும் அழைத்துச் செல்வார்கள் என்பது அவனுக்குத் தெரியும். அவர்களைப் பார்க்க அவனுக்குப் பரிதாபமாகிற்று. கணேஸ் வந்து நிற்பதைப் பார்க்க எங்கோ சண்டைக்குப் புறப்பட்டு வந்தவன் போன்று தோன்றியது. ஹரியைக் கண்டவுடன் அவன் அடக்க முடியாதவனாய்,

'என்னண்ண தேடி வந்து அடிச்சிருக்கிறாங்கள். அப்பிடி ஒரு கத்தி குசினிக்க இல்லாமல் போனதே? எடுத்து ஏத்தி இருக்கலாம்தானே? இவங்களுக்கு முறையாகப் படிப்பிக்கோணும். இல்லாட்டி உந்த ஆட்டம் லேசில நிக்காது. சும்மா வால் பிடிக்கிறதுகளே இப்பிடிச் செய்தா நாங்கள் எல்லாம் என்ன பொன்னையரே? எங்கட குணத்தை முழுமையாகக் காட்டினாத்தான் இவங்கள் இனி அடங்கி இருப்பாங்கள். என்ன மிஞ்சிப்போன பிறாண்ஸ்சில இருந்து யாரையும் ஆயுதத்தோட வரவைப்பினமாக்கும்? எங்களுக்கு இரசியன் வோடர் எவ்வளவு தூரத்தில இருக்குது? மூர்மன்ஸ் எவ்வளவு தூரத்தில இருக்குது? சாமான் வாங்கிவந்து வைக்கிறது பெரிய வேலையே? வாங்கிவர வேணும் அண்ண. இல்லாட்டி இவங்கள் எங்கட தலையில மிளகாய் அரைச்சுப் போடுவாங்கள்.'

'அப்பிடி இல்லைக் கணேஸ். எதிர்பாராமல் என்னைக் கீழ வைச்சே மடக்கிப் போட்டாங்கள். நல்ல காலத்துக்கு எனக்குக் கதவுக்கு வைச்சிருந்த கதிரை இருந்தது. அது கொஞ்ச நேரம் கைகொடுத்திச்சு. அவை இரண்டு பேரும் இதைத் துப்பரவுக்கும் எதிர்பார்க்காமல் மேல இருந்தவை. அதைவிட மாலதி ஒரு பெம்பிளை. ஒரு பெம்பிளையெண்டும் பாராமல் எப்பிடி அடிச்சிருக்கிறாங்கள் பாருங்கோ. இவங்கள் என்ன பிறப்புகளோ எனக்குத் தெரியேல்ல? நாங்களும் ஆயுதம் வாங்கலாம். அவையவிட மோசமாகச் செய்யலாம். அப்பிடி எண்டா அவைக்கும் எங்களுக்கும் என்ன வித்தியாசம் சொல்லும் பாப்பம்?' என்றான் ஹரி.

'இதைத்தான் எங்கட தலைவரும் சொல்லிச் சொல்லி அழிஞ்சு போனவர் அண்ண. இவங்களுக்கு அந்தப் பாஷையெல்லாம் புரியாது.' என்றான் கணேஸ்.

'அவங்களுக்குப் புரியுதோ இல்லையோ எங்களுக்குப் புரியோணும். அதுதான் நாங்கள் நாங்களாய் இருப்பதாகும். அவங்கட தூண்டுதலில, அவங்கள் விரும்புறமாதிரி நாங்கள்

பிழையான பாதையில போனா நாங்கள் நாங்களா இல்லை எண்டு அர்த்தம்.' என்றான் ஹரி.

'பொலிஸ் உயிர் போன பிறகும் ஆதாரம் கிடைச்சா மட்டும்தான் வழக்கையே எடுப்பாங்கள். அப்பிடி எடுத்தாலும் ஆயிரம் வாதப்பிரதி வாதங்களுக்குப் பிறகு குற்றம் நிரூபிக்கப்பட்டால் குறைந்தபட்சத் தண்டனை கொடுப்பாங்கள். பிறகு ஹொட்டல் மாதிரிச் சிறையில சொகுசு வாழ்க்கை வாழ விடுவாங்கள். அதுக்குச் சம்பளமும் கொடுத்து வெளியால அனுப்பி வைப்பாங்கள். உப்பிடியான ஜெயிலுக்கு நாங்கள் வேணும் எண்டாற் பயப்பிடலாம். உந்த எமன்கள் மசியமாட்டான்கள். எங்களுக்கு நாங்களே பாதுகாப்புத் தேடிக்கொள்ளாட்டா அது எங்கட மடத்தனமாகத்தான் இருக்கும். நொஸ்க் பொலிசுக்கு உந்தக் குசும்பன்களின்ர புத்தியைப் படிக்கத் தெரியாது.' என்றான் கணேஸ்.

'நல்லா இயங்குகிற இவங்கட அரசவியந்திரத்திலும் ஓட்டைகள் இல்லாமல் இல்லை. இப்பிடியொரு அமைப்பை எங்கட நாட்டில உருவாக்க இன்னும் ஆயிரம் வருசம் செல்லலாம். அதுக்காக நாங்கள் சட்டத்தைக் கையில் எடுக்க வேணும் எண்டுறது நியாயமில்லை.' என்றான் ஹரி.

'அப்ப ஆராவது ஒருத்தன் வெளிநாட்டில இருந்து வந்து எங்களை நாயைச் சுடுகிறமாதிரி சுட்டுப்போட்டுப் போவான், அதைப் பார்த்துக்கொண்டு இருக்கச் சொல்லுறியளோ? நாங்கள் எதுக்கும் தயாரா இருக்கிறதுதான் எங்களுக்கு நல்லதெண்டு நான் நினைக்கிறன்.' என்றான் றாக்கி.

'ஓஸ்லோவில எண்டா அப்பிடிப் பயப்பிடுறதில சிலவேளை நியாயம் இருக்கலாம். இரண்டாயிரம் கிலோமீற்றர் தாண்டி இங்க வந்து சுட்டுப்போட்டுப் போறது சாதாரண விஷயம் இல்ல. றாக்கி நீர் தேவையில்லாமல் பயப்படுகிறீர்.' என்றான் ஹரி.

'ஓ... அப்பிடி ஏதாவது முதல்ல நடக்கட்டும். அதுக்குப் பிறகு நாங்களும் அடுத்த வழிமுறையைப் பற்றி யோசிக்கலாம். இப்பவே ஆடு அறுக்க முதல் எதையோ அறுக்கிறது எண்டு சொல்லுவினம்... அப்பிடியான வேலையைச் செய்வானேன்?' என்று சுமன் முதன் முறையாக நிதானமாகப் பேசினான்.

'ஓ இவங்கட ஆட்டத்துக்கு விடக்கூடாது. அதுக்காக நாங்களும் பொறுமையைக் கைவிடக்கூடாது.' என்றான் இறக்கத்தோடு கணேஸ்.

'அப்ப... இப்ப பேசாமல் இருக்கோணும் எண்டுறியள்?' என்றான் றாக்கி தோல்வியோடு.

'அப்பிடி இல்ல. நாங்கள் ஆயுதம் தேடுற அளவுக்குப் போக வேண்டாம். அந்தச் சனியன் எல்லாம் வேண்டாம் எண்டுதானே விட்டிட்டு இங்க வந்தம். பிறகு எதுக்கு அதுதான் வழியெண்டு தொட்டதுக்கு எல்லாம் ஓட நினைப்பான். அவை என்ன செய்யினம் எண்டு பாப்பம். எந்தளவுக்கு அவை போவினம் எண்டு இருந்து ஆறுதலாப் பாப்பம். பிறகு அதுக்கு ஏத்தமாதிரி நாங்கள் என்ன செய்யலாமெண்டு யோசிப்பம்.' என்றான் ஹரி.

இவர்கள் கதைத்த வண்ணம் நிற்கும் போதே அம்புலன்ஸ் வந்து நின்றது. திருவையும், மாலதியையும் ஏற்றியபின் அது விரைவாகப் புறப்பட்டுச் சென்றது. சிறிது நேரத்தில் பொலிசாரும் வானொலி நிலையத்தை மூடித், தடுப்பு பட்டி ஒட்டிவிட்டுப் புறப்பட்டார்கள். இருந்தும் தமிழ் ஆட்களின் கார்களும், சில சுதேசிகளின் கார்களும் விடுப்புப் பார்க்கத் தொடர்ந்து வந்தன.

## அதிதியாயம் 9 பாலன்

கோடை காலமானதால் (காலம் ஆனதால்) குளிர் நோர்வேயை மீண்டும் அடிமைப்படுத்தியது. பருவகாலமும் அதன் பணி செய்யும் சூரியனும் புரிந்த சதியில் குளிர் அகலக்கால் பதித்து, இருளைப் பரிசளித்து, நாளுக்கு நாள் வேகமாக முன்னேறி நோர்வேயை ஆக்கிரமித்தது. சூரியனின் தெற்குப் பயணம் வடக்கின் இருண்ட காலமாய் நீண்டிற்று.

பொன்னிற இலைகளைப் பூமிக்கு அர்ப்பணித்து, பல வர்ணங்களை அவள் மீது தெளித்து, அவள் வர்ணம் அழிக்கும் நாள் வருவதை உணர்ந்து, கைகளை உயர்த்திப் பிரபஞ்சத்தை நோக்கி, யாகம் செய்யும் நிர்வாண மரங்களின் ஏக்கம். அடுத்து வரும் கோடைக்காலம் பற்றிய கனவில் இந்த உத்தரிப்பை ஏற்கும் ஏக்கமான யாகம். கோடையில் சொந்தம் பாராட்டிய பறவைக் கூட்டம் கனியிலதோ, காலம் பிழைத்ததோ என்பதாகச் சூரியன் சென்ற திசை நோக்கிப் படையெடுக்கும் அதன் சுதர்மம். மனிதனும், மனிதரின் செல்லப் பிராணிகளும் பறந்து போகமுடியாத ஏக்கத்தோடு, தாங்கள் வரைந்த கோடுகளைத் தாங்களே தாண்ட முடியாத கைதிகளாக, அவற்றையே தங்களுக்கான தாண்டப்படாத இலட்சுமணக் கோடுகளாக வரித்து, அதற்குள் அடங்கிக், குளிரைக் கண்டு நடுங்கும் உள்ளங்களும், விறைக்கும் அங்கங்களுமாக, ஒவ்வொரு ஆண்டும் தவறாது வந்து போகும் ஆக்கினைக்குத் தயாராகினர்.

இப்போது ஆறுமணிக்கே இருட்டின் ஆட்சி எங்கும் வியாபிக்கும். மார்கழியை நெருங்க நெருங்க வேளையாகவே இருள் சூளும். அந்த இருளைப் பிரித்து, உடல் நிறையைக் குறைக்கும் ஓர்மத்தோடு பாலன் நடந்தான். இரத்த அழுத்தம் கூடிவிட்டதாக மருத்துவர் கூறிவிட்டார். யோசனையால் இரத்த அழுத்தம் கூடியிருக்க வேண்டும் என்பதாக அவன் எண்ணினான். அதுவும் சிவகரனின் கொலைக்குப் பின்பு இன்னும் அது அதிகரித்திருக்க வேண்டும். இயக்கத்திற்குக் காசு சேர்த்துக் கொடுத்த பலருக்கும் பிடித்த கிலி பாலனையும் விட்டு வைக்கவில்லை. போன கிழமை பாலன் மருத்துவரிடம் போனான். அவர் இரத்த அழுத்தத்தை முதலில் அளந்தார். அதை அளந்தவுடன் இரத்த அழுத்தம் அதிகமாக இருந்த பாலனைவிட மருத்துவருக்கு இரத்த அழுத்தம் கூடியிருக்க வேண்டும். அவர் அப்படித்தான் ஓடித்திரிந்தார். பாலனைப்

பார்த்து உடனடியாகவே மருந்து பாவிக்க வேண்டும் என்றார். உடற் பயிற்சிகள் செய்வதற்கும் எழுதிக் கொடுத்தார். உடற்பயிற்சி எழுதிக் கொடுப்பதும் புதிய வைத்தியமாம். பாலனைப் பொறுத்தவரை உடற் பயிற்சி என்பது நேரத்தை வீணாக்கும் செயலாகும். இப்போது தவிர்க்க முடியாது அதைத் தானே செய்ய வேண்டி வந்ததில் அவனுக்குப் பெரும் சலிப்பு. உயிர்வாழும் ஆசையின் பிடியில் அகப்பட்டவனாய்ப் பாலன் இன்று வெறியுடன் நடைபயிலத் தொடங்கினான்.

காட்டிற்குள்ளே நடைபயில அவன் முதலில் எண்ணினான். இருட்டிய பின்பு அங்கு போக அவனுக்குப் பிடிக்கவில்லை. நான்கு கால் விலங்குகளோ அல்லது இரண்டு கால் விலங்குகளோ தாக்கினால் உதவி கிடைப்பதற்குள் உயிர் போய்விடும் என்பது அவன் பயம். உயிர் வாழ்வுக்கான நடையில் உயிர் போவதை அவனால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. தனது எண்ணத்தை மாற்றி ஒப்சால் நகரப் பகுதிக்குள் நடைபயிலத் தொடங்கினான். ஒப்சால் நகரப் பகுதிக்குள் போகும் போது உயர்ந்து நின்ற மாடிவீடுகள் அவனை வாவென்று அழைத்தாலும், அதில் வாழும் தமிழர்கள் தன்னைக் கண்டால் நாறல் மீனைப் பார்க்கும் பூனை போன்று பார்ப்பார்கள் என்கின்ற எண்ணம் அவனுக்குச் சங்கடம் தந்தது. மாலை என்பதால் ஒப்சால் சென்றர் பூட்டியாகிற்று. நார்வேசன், மிக்ஸ் என்னும் இரு பெட்டிக் கடைகளும், ஒரு பீச்சா கடையும் திறந்திருந்தன. நடந்து சென்ற பாலனின் எண்ணம் அவனையும் கேளாது பின்னோக்கிச் சுழன்றது. ‘நாங்கள் நல்லதுதானே செய்தோம்? நாட்டிற்காகத்தானே செய்தோம். சும்மாய் இருந்த சோம்பேறிகளுக்கு எங்கள் உழைப்பு விளங்கவில்லை. கொஞ்சப் பணம் போய்விட்டது. வன்னியில் வருங்காலத்தில் கித்தை கட்ட முடியாது என்கின்ற கோபத்தில், எங்களை நாறல் மீனைப் போல பார்த்தால் என்ன செய்வது? இப்போதுதானே எல்லோரும் குடும்பம் குடும்பமாய் இலங்கைக்குப் போய் வருகிறார்கள்? எங்களுக்கு முன்னுக்கு நின்று கொடி பிடித்தவர்கள்கூட அங்கு சென்று பாதுகாப்பாய்த் திரும்புகிறார்கள். வந்த பின்பு பெருமையாகப் புகைப்படங்கள் காட்டி மகிழ்கிறார்கள். முகப்புத்தகத்தில் போட்டு ஆர்ப்பரிக்கிறார்கள். அங்கு இவர்களை என்ன கேட்டார்கள்? ஆற்றில் போட்டுவிட்டுக் குளத்தில் தேடும் மடமைத்தனம் அவர்களுடையதா அல்லது எங்களுடையதா? சுந்தரருக்குக் கிடைத்தது போல இவர்களுக்குக் கிடைக்கச் செய்ய நான் என்ன சிவனா?

ம்… இப்பொழுது மாத்திரம் இவர்கள் திருந்திவிட்டார்களா? ஒன்று இல்லாவிட்டால் இன்னொன்று. இயக்கம் போனால் கோயில். கோயில் போனால் ஒரு சாமி. சாமி போனால் ஒரு ஆசாமி. அல்லது கோடம்பாக்கத்துக் குப்பைகள். கோமாளிக் கூத்துக்கள். வன்னியின் விதவைகளோ, முடங்களோ இவர்கள் புலன்களை அடைய முடியாத பாவிகள். சோற்றை மட்டும் தின்று மீதமாக்கும் பணத்தை என்ன செய்வது? எங்கேயாவது கொட்ட வேண்டும்? வன்னியைத் தவிர, வறுமையில் வாடுபவர்களைத் தவிர, வேலையில்லாது வீட்டில் இருக்கும் நேரத்தில் பணத்திற்கு வேலை கொடுக்க

ஏதாவது ஒரு வழி வேண்டும்.' எண்ணங்கள் அவன் தேகத்தின் அசைவால் பிறந்த சூட்டை மேலும் கொதிகொள்ள வைத்தது. அவன் நடை அதற்கேற்ப மாறிற்று. திடீரென யாரோ தன்னைத் தொடர்வது போன்ற உணர்வினால் அவன் திடுக்குற்றான். தன்னைக் கட்டுப்படுத்த முடியாது திரும்பிப் பார்த்தான். அவனுக்குப் பதட்டமாகிற்று. யாராவது தன்னையும் கொலை செய்வார்களோ என்கின்ற எண்ணம் எழுந்தது. எங்காவது உடனடியாக ஓடிவிட்டால் நல்லதெனத் தோன்றியது. பின்பு தன்னைத் தானே ஆசுவாசப்படுத்தினான். அது மனப்பிராந்தியாக இருக்க வேண்டுமென எண்ணினான். அந்த எண்ணத்தைப் புறம்தள்ளிவிட்டு, வீறாப்போடு மேற்கொண்டு நடந்தான்.

அவன் ஒப்சால் நகரை ஊடறுத்துச் சென்றான். வழியில் ஒரு மஞ்சள் நிறம் பூசப்பட்ட தொடர் மாடிக் கட்டடம் அவனை வழிமறித்தது. அதில் குடியிருப்பவர்கள் பற்றிய எண்ணம் அவனையும் கேளாது மூளையில் தான்தோன்றியாய் எழுந்தது. அதனால் மனதிற்குள் வெறுப்பு அமிலமாகச் சுரந்தது. 'அந்தத் தொடர் மாடியில் மூன்று தமிழ்க் குடும்பங்கள் இருந்தன. அதில் ஜெகபாலன் என்பவன் எதுவுமே விளங்காதவன். நாட்டில் எதற்காகப் போராட்டம் தொடங்கியது? தொடக்கியவர்கள் யார்? பின்பு யாரதைக் கையில் எடுத்தார்கள்? இந்தப் போராட்டத்தில் இருந்து நமக்குக் கிடைக்கப் போவது என்ன? இதைப் பற்றிய எந்த அக்கறையும் அவருக்குக் கிடையாது. அல்லது அவர் மூளைக்கு அது விளங்காது. நாட்டில் இருந்து பிரச்சாரப் படங்கள் வரும். உசுப்பேற்றுவதற்கு விசேடமாக உருவாக்கப்பட்ட படங்கள் அவை. அந்தப் படங்களைப் பார்ப்பார்கள். உணர்ச்சியில் தத்தளிப்பார்கள். எவ்வளவு இவர்கள் உணர்ச்சியில் உழல்கிறார்களோ அவ்வளவிற்கு வசூல் கிடைக்கும். அதில் இரத்தம் நிறைய ஓடும். உயிர்கள் கணக்கில்லாது போகும். பிணங்கள் குவியலாக நிறையும். அப்போதுதான் மீண்டும் பணம் குவியும். கேட்டுக் கேளாமல்த் தாள்கள் புரளும். தேவையில்லாத விளக்கங்கள் சொல்லத் தேவையில்லை. ஜே ஜே போடும் இவருக்குத் தலைவர் எங்கள் ஊர்க்காரன் என்பது மட்டுமே விளங்கியது. ஊர்க்காரன் என்பதிற்காய் வலியில்லாது பணத்தை இளக்கும் பெருந்தன்மை அவருக்கு இருந்தது. எங்களைப் பொறுத்தவரையிலும் யார் யாருக்கு எப்படித் தெரிந்தால் என்ன? சேர்த்துக் கொடுத்தோம். அப்போது எங்களின் தயவு வேண்டும் என்கின்ற எண்ணம்... ஊர்க்காரன் என்கின்ற விசுவாசம்... கண்டாலே தேனுறப் பாலுறக் கதைக்கும் பௌவியம்... ம்... இப்போது...? பார்வைகள் எதிரிகளைப் பார்ப்பதாக... இனி உன் தயவு தேவையில்லை என்பதாக... ம்... வன்னியில் சறுக்கிவிட்டார்கள். கடைசியில் ஒட்டுமொத்தமாய் கையை உயர்த்திவிட்டார்கள். சிங்கள இனத்தின் எதிரி... அதுவும் அடிபணிய மறுத்த தமிழன்... அதிலும் அவர்கள் புலிகள்... அல்லது புலிகளாய் இருக்கலாம் என்று சந்தேகிக்கப்படுபவர்கள்... பிறகென்ன? சட்டம் இல்லாத மரண தண்டனைகள். மனிதம் வெட்கும் சித்திரவதைகள். அதில் அகப்பட்ட அப்பாவிகளும் புலிகளாக...' பாலனுக்கு அதை எண்ண வெறுப்புப் பொங்கிற்று. அவன் நடையின் வேகம் மேலும் கூடிற்று.

ஒப்சால் சென்ரரைக் கழியும் போது சில சுதேச இளைஞர்கள் செஞ்சிலுவைச் சங்கத்திற்காகப் பணம் சேர்த்துவிட்டுச் சோர்வாகத் தங்களது வீடுகளை நோக்கிச் சென்றார்கள். பாலனுக்கு அவர்களைப் பார்ப்பதற்குப் பரிதாபமாக இருந்தது. அவன் நினைவுகள் தாங்கள் பணம் சேர்த்ததைப் பற்றிச் சுழலத் தொடங்கியது. 'உண்டியலைத் தூக்கிச் சென்றால் ஒரு குரோண் விழலாம். பத்துக் குரோணர்கள் விழலாம். அதிசயமாக நுறு குரோணர்கள் விழுந்தாலும் விழலாம். ஒவ்வொரு வீடாக இவர்கள் அலைந்து திரிந்து அலுத்துப் போயிருக்கும். நாங்கள் முகவரியையும், தொலைபேசி எண்ணையும் வைத்துக்கொண்டு, அதிகாரத்தோடு ஆயிரம் ஆயிரம் குரோணர்களாக வாங்குவது அலாதியானது. இன்னும் சிலகாலம் இந்தப் போராட்டம் தொடர்ந்திருக்கலாம். எங்கள்பாடும் செழிப்பாக இருந்திருக்கும். இப்போது வந்த முடிவு மாறி இருந்தால்... ஏதாவது ஒரு நல்ல முடிவில் தலைவர் உயிரோடு இருந்திருந்தால்... வாழ்க்கை பூராகவும் வற்றாத செல்வமாய் இருந்திருக்கும். போராட்டம் என்பது பொன்முட்டையிடும் வாத்தாக... அட்சய பாத்திரமாக... அள்ள அள்ளக் குறையாமல் பணத்தில் புரண்ட காலமாக... எங்கள் ஏக்கங்கள் இந்த மடையருக்கு எப்படிப் புரியும். இனித் தேவையில்லாது யாரோடும் தொடர்புகளை ஏற்படுத்தக் கூடாது. இருப்பதைப் புத்தியோடு அனுபவிக்க வேண்டும்.' என்று எண்ணிய வண்ணம் பாலன் வேகமாக நடந்தான்.

பாலன் இப்போது ஒப்சாலில் உள்ள தனி வீடுகள் இருக்கும் பகுதிக்குள் வந்தான். அவன் சிவராமன் வீட்டுக்கு அருகாக வந்தபோது பாலனின் எண்ணங்கள் அவனை நோக்கிச் செல்லத் தொடங்கியது. 'சிவராமன் ஒரு கடை வைத்தாலும் வைத்தான் அதில் இருந்து பணம் பணமாய் புரட்டிப் புரட்டி அள்ளுவான். அந்தப் பணத்தில் ஒரு குரோணர் யாருக்குக் கொடுப்பதாயினும் அவனுக்கு உயிர் போய்விடும். அவன் மூளை மாத்திரம் எதைச் செய்தாலும் ஆழமான கிரிமினல் நோக்கோடு சிந்திக்கும். எந்தக் களவைச் செய்தாலும் எப்படிப் பிடிபடாமல் செய்வது என்பது அவனுக்கு மாத்திரம்தான் தெரியும். முதலில் பணம் சேர்க்கப் போன போது நுறு குரோணர்கள்தான் தருவேனென அடம்பிடித்தான். எங்களுக்குச் சிரிப்பாகவும், வெறுப்பாகவும் இருந்தது. எவ்வளவு கதைத்தும் மசியமாட்டேன் என்று தொடர்ந்தும் வாதாடினான். ஒரு போன் வரவேண்டிய இடத்தில் இருந்து வந்தது. பின்பு இரண வேதனையோடு ஆயிரமாயிரமாய் இளக்குவான். அப்படி இளக்கும் போது அவன் படும் வேதனையைப் பார்க்கவேண்டும். கடைசி நிதிக்கும் மனமில்லாது ஒரு பெரிய தொகைத் தந்தான். பிரச்சனை முடிந்து சுதந்திரம் வந்தால்... முதலில் யாழ்ப்பாணத்தில் கடைதிறக்க வேண்டும் என்பது அவன் கனவு. அதற்கு இது முற்பணமாய் இருக்கும் என்பது அவன் கணிப்பு. எல்லாருடைய கனவிற்கும் ஒரு நாள் மீசை வைத்த சிங்களவன் கொள்ளி வைத்தான். இப்போது மிஞ்சியது நாங்கள் மட்டும். எங்களை இயக்கம் என்று

இவர்கள் பார்த்தால் நான் என்ன செய்ய முடியும்? நாங்கள் தரகர்கள் என்று இவர்களுக்குப் புரிய வைக்க முடியாது. மரியாதையோடு ஒதுங்குவதுதான் புத்தி.' இவ்வாறாக எண்ணிய வண்ணம் வந்த பாலன் அவன் வீட்டைக் கழிந்து அதிக தூரம் வந்துவிட்டதை உணர்ந்தான். பின்னால் யாரோ வருவது போன்று இம்சையான பயம் ஏனோ தொடர்ந்தது. திரும்பிப் பார்த்தான். யாரையும் காணவில்லை. வன்னியில் இறந்தவர்களின் ஆவியாக இருக்குமோ? ஒரு கணம் அப்படி எண்ணியவன் என்ன மடத்தனமான நினைவு இதுவெனத் தன்னைத் தானே கடிந்தான்.

சிறு தூரத்தில் நித்தியன் வீடு தெரிந்தது. அவன் ஓர் தொடர் வீட்டில் குடியிருந்தான். பாலனுக்கு அவனைப் பற்றிய நினைவுகள் படச் சுருளாக மூளையில் விரியத் தொடங்கியது. 'இவனும் வட நோர்வேயில் இருந்து இங்கு வந்தவன். வட நோர்வேயில் இருந்தும் பணம் கொடுக்க மறுத்தவன் என்கின்ற தகவல் கிடைத்தது. முக்கியமானவர்கள் அங்கு சென்று கதைத்தும் சரிவராது தோல்வியோடு திரும்பி வந்தார்கள். அப்படி இருந்தும் இங்கு வந்த பின்பு மசிவான் என்கின்ற எண்ணத்தில் சிலமுறை சென்று கரைக்க முடியுமாவென்று பார்த்ததுண்டு. இரும்பைக்கூடக் கரைத்துவிடலாம். இவன் கரையவே இல்லை. கரையாதது மட்டுமல்ல எப்போதும் துணிவாக இயக்கத்தை எதிர்த்துக் கேள்வி கேட்பான். அவனிடமிருந்து வரும் கேள்விகள் மிகவும் சங்கடமானவை. சற்று வழுவினாலும் அதை வைத்தே திருப்பி அடிப்பான். அவன் கரையமாட்டான் என்கின்ற உண்மை புரிந்த பின்பு, அவனிடம் போவதை நிறுத்தியாகிற்று. அதன் பின்பு அவன் எதிர் கோஸ்டிகளுடன் சேர்ந்து திரிந்ததை அவதானிக்க முடிந்தது. அதனால் துரோகிகளில் ஒருவன் என்பதாக அவன் தவிர்க்கப்பட்டான். இன்று அவன் மனதிற்குள் சிரிக்கலாம். காசு கொடுத்தவர்களைப் போன்ற மடையர்கள் உண்டா என்கின்ற மம்மலில் மிதக்கலாம். கடைசி முடிவுகள் அப்பிடியாகப் போய்விட்டது. இனி யாரும் அதை மாற்ற முடியாது நிலைத்து விட்டது.' என்பதாக எண்ணிய வண்ணம் பாலன் நித்தியன் வீட்டைக் கடக்கும் தறுவாயில் நித்தியன் வீட்டுக் கதவு திடீரெனத் திறந்திற்று. அதை எதிர்பாராத பாலன் திடுக்குற்றான். அவனுக்கு அதிர்ச்சியில் நெஞ்சாங்கூடு வறண்டு போயிற்று. திடீரென உள்ளங்கை வியர்த்தது. நித்தியன் குப்பைப் பையோடு வெளியே வந்தான். பாலனுக்கு ஓட வேண்டும் போல்த் தோன்றியது. அதற்குள் நித்தியன் பாலனைக் கண்டுவிட்டான். இருந்தாலும் பாலன் விரைவாக நித்தியன் வீட்டைக் கடந்து போய்விட வேண்டுமென எண்ணி நடைக்கு வேகமேற்றினான். நித்தியன் அவனை விடுவதாக இல்லை.

'டே நீ பாலன் எல்லே?' என்றான்.

'ம்' விருப்பம் இல்லாதவனாய்ப் பாலன் உறுமினான்.

'இதுக்கிளால எங்கையடா போறா? ஒளிச்சுத் திரியிறியோடா?'

'ஏன் நான் ஒளிக்கோணும்? நான் வாக்கிங் போறன்.'

'ஓ... இந்த ஒழுங்கையால வாக்கிங் போற முதல் ஆள் நீ தான்ரா அப்பா. விழுந்தாலும் உனக்கு மீசையில மண் ஒட்டாதே? ஒளிக்கிறதுக்கு வேற இப்பிடி ஒரு விளக்கமே?' என்றான் நித்தியன்.

'நான் ஏன் ஒளிக்கோணும்? இருட்டானப் பிறகு காட்டுப்பக்கம் போக முடியாது எண்டிட்டு இதால நடந்து போறன்.'

'அது சரியடா, கடைசிக் காலத்தில எவ்வளவைச் சுத்தினியள்? நீங்கள் இப்ப இலட்சாதிபதிகள் இல்லையே?' என்று அவன் பாலனை வம்புக்கு இழுத்தான்.

'அண்ண தேவையில்லாக் கதை என்னோட கதையாதேங்கோ. உந்தத் தேவையில்லாக் கதைக்கெல்லாம் பதில் சொல்ல எனக்கு நேரம் கிடையாது. ஒரு குரோணர் நீங்கள் கொடுத்திருக்க மாட்டியள். எச்சில் கையால காகம் துரத்தாத பிறவியள் நீங்கள். பிறகு எந்த மூஞ்சையை வைச்சுக்கொண்டு நியாயம் கேட்கிறியள்? நாங்கள் காசு சேர்த்துக் குடுத்தம். அதில பிழைவிட்டா என்ன நடக்கும் எண்டெல்லாம் உங்களுக்குத் தெரியாது. அதை நான் உங்களுக்குச் சொல்லவும் தேவையில்லை. அதில இருந்த நேர்மையும் கட்டுப்பாடும் எங்களுக்குத்தான் தெரியும்.'

'நியாயம் கேட்கிறதுக்கு என்ன முகமா இருந்தா என்ன சண்முகா? ஊரை ஏமாத்திக் காசு காசா அள்ளினியள். அதுகள் இப்ப கேட்கிறதுக்கு பதில் சொல்லக் காணேல்ல... கோபம் மாத்திரம் வருகுது. உங்கட சுத்துமாத்தால இப்ப எத்தின சனம் விசர் பிடிச்சு அலையுதுகள் தெரியுமோ? கோபம் வருகுதோ உமக்குக் கோபம்? மனச்சாட்சி இல்லாத மிருகங்களடா நீங்கள். சிங்களவன் அடிச்சாலும் உடம்பை வித்து வாழவேண்டி இருக்கேல்ல. இப்ப அதையும் செய்ய வைச்சிட்டியளே? அங்க அதுகள் உடம்பை விக்கிறதுக்கு உங்களமாதிரி வெளிநாட்டுப் பினாமியள் முக்கிய காரணம். உதுகளைச் சொன்னா உங்களுக்குக் கோவம் வருகுதோ?'

பாலன் அதற்கு மேல் அங்கு நிற்கவில்லை. அவன் ஓட்டமும் நடையுமாக அந்த இடத்தை விட்டு நகர்ந்தான். நித்தியனின் பார்வை அவன் முதுகைத் துளைப்பது போன்ற அவஸ்தை தொடர்ந்தது. அவனைக் கொல்ல வேண்டும் என்கின்ற வெறி மனதிற்குள் எழுந்தது.

*

பூமணி இரசாயனம் குறைந்த பற்பசையால் பல்லுத் துலக்குவது வழக்கம். அது றேமாத்துாசனில் (ஒரு கடையின் பெயர்) கிடைக்கவில்லை. அதை வாங்குவதற்கு முதலில் ஒப்சால் சென்றர்க்குப் போவோம் என்று எண்ணிய ஹரி, சிலவேளை ஒப்சால் சென்றர்ரும் பூட்டியிருக்குமோ என்கின்ற சந்தேகமெள வண்டியை திவைத்தாவை

நோக்கிச் செலுத்த எண்ணினான். அதற்கு முதல் அதைப் பூமணிக்கு தொலை பேசியில் தொடர்புகொண்டு கூறினான். பின்பு வண்டியை மெதுவாக இயக்கினான்.

*

இதற்கு மேலும் குச்சு ஒழுங்கை வழியே செல்வதில் வெறுப்புற்றவனாகப் பிரதான பாதையில் பாலன் நடக்கத் தொடங்கினான். இருள் மேலும் கரிய பெரும் அவுணனாக அடர்த்தியாக விரிந்து, பார்வையின் நீளத்தைக் குறுக்கியது. அந்த மனிதன் அலைந்தான். பாலன் அறியாத வண்ணம் அவனது வீட்டிலிருந்து பின்தொடர்ந்தான். எங்கு பார்த்தாலும் ஆட்கள் அவனது காரியத்தைக் கெடுத்தனர். எரிச்சலோடு அவன் பாலனை இடைவிடாது பின்தொடர்ந்தான்.

பிரதான பாதையில் இருந்து காட்டிற்குப் போகும் பாதை வந்தது. அதில் சிறிது தூரம் மின்விளக்கு ஒளிரும் பகுதி. அப்பகுதியில் இன்றும் மின்விளக்குகள் பிரகாசமாய் ஒளிர்ந்தன. தனது பயத்தைப் பின்தள்ளிய பாலன் அந்தப் பாதையில் இறங்கி நடந்தான். பின்னால் வந்த அந்த மனிதனும் ஓட்டமும் நடையுமாக வந்து அந்தப் பாதையில் இறங்கினான். அவன் அவசரமாக முகத்திற்குத் தொப்பியும், கையிற்குக் கையுறையும் அணிந்தான். தனது பையில் வைத்திருந்த கூரிய ஆயுதத்தைப் பையின் சிப்பைத் திறந்து பற்றிய வண்ணம் மேலும் விரைவாகப் பாலனின் பின்னே நடந்தான்.

பாலனுக்கு மீண்டும் யாரோ தன்னைப் பின்தொடர்வது போல ஒரு உணர்வு ஏற்பட்டது. ‘அசட்டுத் துணிவில் இந்த ஒழுக்கையில் இறங்கி விட்டேனோ?’ என்கின்ற அந்தரமும் பயமும் அவனுக்கு நடுக்கத்தைத் தந்தது. பயத்தில் கால்கள் பின்னின. யாரும் தன்னைப் பின்தொடர்கிறார்களோ எனத் திரும்பிப் பார்க்க ஆவல் உண்டானது. ஆவலை அடக்க முடியாது அவன் திரும்ப எத்தனித்தான். ஒருவன் படு வேகமாக அவனை நோக்கி ஓடிவந்தான். அவன் முகம் தெரியாது தொப்பி அணிந்திருந்தான். மல்யுத்த வீரன் போன்ற தோற்றம். ஏன் ஓடி வருகிறான் என்பதை நிதானிக்க முதல் அவன் கைகள் ஒரு ஆயுதத்தோடு உயர்ந்தது. திடீரென தலையில் பலமான அடி ஒன்று விழுந்தது. பாலனின் உலகம் காலிற்கு கீழே கரைந்து போயிற்று. பூமி வாய் திறந்து அவனை விழுங்குவது போல இருந்தது. அவன் நிலத்தில் வீழ்ந்தான். அந்த மனிதன் சிரிப்பது போல இருந்தது.

ஒரு அடியில் நிலத்தில் விழுந்துவிட்ட பாலனை அந்த மனிதன் வெறியோடு பார்த்தான். அந்த ஆயுதத்தை மேலே தூக்கி பாலனின் தலையை நொறுக்கத் தயாராகினான். அவன் எதிர்பாராத வண்ணம் தூரத்தே யாரோ இருவர் ரொச்லையிற்றுடன் ஓடிவரும் வெளிச்சம் தெரிந்தது. அந்த மனிதன் நொறுக்க எண்ணியதை நிறுத்திவிட்டுத் தனது

பையைத் தூக்கிய வண்ணம் காட்டுப் பகுதியை நோக்கி ஓடினான். அங்கே கொலை வெறியோடு அவன் மறைந்து இருந்தான். எப்படியாவது பாலனைக் கொன்றுவிட வேண்டும் என்கின்ற வெறி இன்னும் அவனுக்குத் தணியவில்லை. ஒளிந்திருந்து என்ன நடக்கிறது என்பதை அவதானித்தான்

*

பாதையில் விழுந்து கிடக்கும் பாலனைப் பற்றி அறியாதவர்களாய் அவர்கள் ஓடி வந்தார்கள். திடீரென வழியில் ஒரு மனிதன் விழுந்து கிடப்பதைப் பார்த்து அவர்கள் அதிர்ந்து போனார்கள். சிறிது நேரம் அதிர்ச்சியால் விறைத்துப் போய் நின்றவர்கள் பின்பு அவனுக்கு மூச்சு இருக்கிறதா என்று பரிசோதித்தனர். மூச்சு இருந்தது. தலையால் இரத்தம் வந்தது. அவர்களில் ஒருவர் அலைபேசியை எடுத்துக் கதைத்தார். இதுவரை ஒளிந்து இருந்து என்ன நடக்கிறதென அவதானித்த அந்த மனிதன் அலைபேசியில் அவர்கள் கதைப்பதைக் கண்டதும், இனி எதுவும் செய்ய முடியாது என்கின்ற முடிவோடு எதிர்த்திசையில் நடந்து, பாலனின் வீட்டை நோக்கிச் சென்றான்.

*

ஹரி திவைத்தாவுக்குப் போய்விட்டு வரும்போது அம்புலன்ஸ் ஒன்று அவனைக் கடந்து சென்றது. அது சத்தத்தோடும், வெளிச்சத்தோடும் அவசரம் என்றது. அவன் வாகனத்தை ஓரம்கட்டி, அதற்கு வழிவிட்டான். அதன் பின்னால் பொலிசும் கூக்குரல் இட்டவண்ணம் போனது. என்னவாக இருக்கும் என்பதை அறியும் ஆர்வத்தோடு அவர்கள் போன திசையில் அவன் வந்தான். அம்புலன்ஸ்சும் பொலிசும் காட்டுக்குப் போகும் பாதையில் நிற்பதைக் கண்டான். வாகனத்தை ஒரு இடத்தில் நிறுத்திவிட்டு என்ன நடக்கிறது என்பதைப் பார்க்க அங்கே சென்றான்.

ஹரி வருவதற்குள் அவர்கள் அவசர அவசரமாக ஒரு மனிதனை எடுத்து வந்து அம்புலன்ஸ்சில் ஏற்றி விட்டார்கள். ஆள் கறுப்பாய் இருந்தது மட்டுமே ஹரிக்குத் தெரிந்தது. ஹரி ஏமாற்றத்தோடு 'மலிந்தால் சந்தைக்கு வரும்தானே?' என எண்ணிய வண்ணம் அங்கே நிற்காது வீட்டிற்குச் சென்றான்.

## அத்தியாயம் 10 குமுறல்

வார்டோவில் சில காலங்களுக்கு முன்பு…

பனித்துகள்களைத் துப்பாக்கிச் சன்னங்களாக வீசிய காற்றின் உக்கிரத்தையும் பாராது ஹரியின் வீட்டிற்குக் கணேஸ் பிற்பகல் வந்தான். அவன் எதையோ சொல்ல வேண்டும் என்கின்ற பிரசவ வேதனையில் அவதியுற்றான். அவனைப் பார்த்தவுடனேயே ஹரி அதனை ஊகித்துக்கொண்டான். சத்திர சிகிச்சையா அல்லது சுகப்பிரசவமா என்கின்ற ஆராய்ச்சியை நிறுத்திவிட்டுக் குளிரோடு போராட்டம் நடத்தி வந்தவனுக்கு பிளேன் ரீ ஒன்று கொடுத்துக் கதைக்கும் திட்டத்தோடு ஹரி செயற்பட்டான்.

சிறிது நேரத்தில் ஹரியிடம் இருந்து தேநீரை வாங்கிய கணேஸ்,
'உங்களுக்கு ஒரு விசயம் தெரியுமோ?' எனப் பொறுக்க முடியாது கேட்டான்.
'ஏதோ விசயம் சொல்ல வந்தது விளங்குது. என்ன விசயமெண்டு என்னால ஊகிக்க முடியேல்ல. சொல்லு... என்னெண்டு கேட்பம்.' என்றான் ஹரி.
'றேடியோ இவ்வளவு காலமும் நடந்து வந்த அந்தப் பழைய ஸ்ரூடியோ இப்ப பூட்டித்தானே இருக்குது. அதுக்குப் பதிலாக புதுசா ஒரு இடமெடுத்து அங்க தற்காலிகமாக அது நடக்குதாம். அதுக்கு உள்ளதான் அவங்கட ஒபீசும் இருக்குதாம். இண்டைக்குப் பகல் அதுக்க இருந்து மகேசன் வந்தவனாம். அவனைப் பற்றி உங்களுக்குத் தெரியும்தானே? இண்டைக்கு நிச்சயமா ஏதாவது அங்க அள்ளி வைச்சிருப்பான். சிலவேளை கிட்டடியில எங்களோட றேடியோக்காரர் ஏதாவது மீற்றிங் வைப்பாங்கள். நீங்கள் திருவெல்லாம் அதுக்கு தயாரா இருக்கோணும். நாக்காலா எப்பிடி எல்லாம் ஜாலம் போடலாம் எண்டதை உவன் மகேசனைப் பார்த்துதான் படிக்கோணும்.'
'ம் உண்மை. அப்பாவியளாக வருவாங்கள். பிறகு அவுணரா அட்டகாசம் செய்வாங்கள். வந்த தொடக்கத்தில கொஞ்ச நாளைக்குப் பதுங்கீட்டு, பிறகு தங்கட குணத்தைக் காட்டுவாங்கள். அதுவும் இவன் மகேசன் ஆக மோசமானவன். நீ சொல்லுற மாதிரி துடிக்கிற மீனைக் குழம்புக்க பார்த்தனெண்டு அடிச்சுச் சத்தியம் பண்ணுவான். அப்ப இண்டைக்கு எப்பிடி அள்ளி வைச்சிருப்பான் எண்டு மீற்றிங்குக்குப் போனாத்தான் தெரியும்.' என்றான் ஹரி யோசனையோடு.
'மீற்றிங் வைக்கிறது எண்டாலும் திருவைத்தான் கூப்பிடுவாங்கள். நீங்களும் அவனோட போனாத்தான் எங்கட பக்க நியாயங்களை எடுத்துக் கதைக்கலாம்.' என்றான் கணேஸ்.
'இப்ப மீற்றிங் நடந்தா அதில நடந்த சண்டையப் பற்றிக் கதைவரும். அதை நினைக்கவே ஏதோமாதிரி இருக்குது. உங்களால ஒற்றுமையாக இருக்க முடியாதா? எண்டமாதிரிப் பார்க்கப்போற பார்வையை நினைக்கவே அவமானமாய் இருக்குது.'
'நாங்களே சண்டைக்குப் போனோம் அண்ண? அவங்களாக வந்தா நாங்கள் என்ன செய்யிறது? நீங்களே மான அவமானம் பாக்கலாமா?' என்றான் கணேஸ்.

‘ம்… நான் என்ன ஞானியா? மனிசனாய் இருக்கும் வரைக்கும் மான அவமானம் இருக்கத்தானே செய்யும். இல்லாமல் இருந்திருந்தால் எவ்வளவு நல்லாய் இருந்திருக்கும்? ஆர் சண்டைக்கு வந்தது எண்டு அவங்களுக்கு விளங்காதுதானே? எல்லாரும் தமிழராய் இருந்து கொண்டே ஏன் நீங்கள் சண்டை பிடிக்கிறியள் எண்டுதானே கேட்பாங்கள்?’

‘ஹிட்லர் இந்த நாட்டைப் பிடிக்கேக்க இவங்களுக்கு உள்ளேயும் சண்டை பிடிச்சாங்கள். இரண்டு பகுதியும் நொஸ்கா இருந்தும் ஏன் சண்டை பிடிச்சாங்கள்? அநியாயத்தை எதிர்த்தாச் சண்டை வரத்தானே செய்யும்? இது எங்கட எதிர்ப்புப் போராட்டம் எண்டதை அவங்களுக்கு நீங்கள் விளங்கப்படுத்துங்கோ. தலைக்கு மேல வெள்ளம் வந்திட்டுதாம்… இனிச் சாண் தாண்டா என்ன? முழம் தாண்டா என்ன? எங்கட பக்கத்து நியாயங்கள்… எங்கட பக்கத்துப் பிரச்சனைகள்… எல்லாத்தையும் வெளிப்படையாச் சொல்ல வேண்டியதுதான்.’ என்றான் கணேஸ்.

‘ம்… நீ சொல்லுறதும் நியாயம்தான். இங்க வந்தாவது நிம்மதியாக இருக்க நினைச்சா எல்லா இடமும் பிரச்சனையா இருக்குது. பிரச்சனை வேண்டாம் எண்டாலும் விட்டுக் கலைச்சுத் திரியுறாங்கள். கொஞ்சம் போக்கிரித்தனமா கதைக்கத் தெரிஞ்சவங்களோட, தங்கட கையில பெரும்பான்மை இருக்கு எண்டுற தையிரியத்தில, தாங்கள் பெரிய தியாகிகள் எண்டுற நினைப்பில, எல்லாரும் தங்களுக்குப் பின்னால அலைய வேணுமெண்டு நினைக்கினம். உவங்களோட இனி எப்பிடிக் காலம் தள்ளுறகிது? உயிரையாவது விட்டாக் காணுமெண்டு கண்காணத் தேசம் வந்த பிறகும் ஏன் இப்படி உபத்திரபம் தாறாங்கள்?’

‘ஐயோ அண்ண! நீங்களே இப்பிடி யோசிச்சா மற்றவையின்ர நிலைய நினைச்சுப் பாருங்கோ. நீங்கள் மனம் தளராமல் முன்னுக்கு நிற்கோணும். அவங்கள் என்ன செய்யப் போறாங்கள் எண்டத அவதானமாய்க் கவனிக்கோணும். இவங்கள் எல்லாம் சும்மா வாலுகள். அவ்வளவு தான் அண்ண.’ என்றான் கணேஸ் நம்பிக்கை ஊட்டும் விதமாக.

‘இங்க ஒண்டும் செய்யாட்டியும் ஊரில தங்கட கைவரிசையைக் காட்டலாம் எண்டுற திமிர். அது அவைக்கு ஒருவிதமான விறைப்புத் தருகுது. எடுத்ததுக்கெல்லாம் கொலை எண்டுறது அவங்களுக்குப் பழக்கப்பட்ட ஒண்டுதானே? பாவிக்கத் தெரியாதவன் கையில ஆயுதம் மலிஞ்சுபோய்க் கிடக்குது. அதுதான் எங்கட போராட்டத்தின்ர இன்றைய முகம். அவங்கள் கலைச்சுக் கலைச்சு வெடிவைக்கத் தப்பி இங்க வந்தவங்கள் சிலர் இப்ப அதுக்கே வால் பிடிக்கிறாங்கள்? யாரை அப்ப நம்பலாம் சொல்லும்? தங்கட, தங்கட சுயநலத்துக்காக எதையும் செய்யிறதுதான் எங்கட சனத்தின்ர புத்தி. அதை மாத்திறது லேசில்ல. தலையைக் குடுத்தா அவமானப்பட வேண்டியும் வரும். நான் இன்னும் அதைத் தாண்டேல்லை.’ என்றான் ஹரி.

‘அதுவும் உண்மை. உந்தச் சனங்களை நம்பி முன்னுக்கு நிண்டா நாளைக்கு நாங்கள்தான் அவமானப்பட வேணும். அதுக்காக அவங்களுக்கு இப்பவே எந்த எதிர்ப்பும்

இல்லாமல் அநியாயமாக எல்லாத்தையும் தாரைவார்த்துக் கொடுக்கிறதே? அப்பிடி விட்டா உள்ள காசு எல்லாம் சுருட்டி அங்க அநியாயத்துக்கு அனுப்புவாங்கள். அது அங்க போய் இன்னும் எத்தின ஆயிரம் உயிரை அழிக்குமோ தெரியாது. பாவம் செய்யாட்டியும் பாவம் செய்யவிட்ட பாவம் எங்களுக்கு வரும்.' என்றான் கணேஸ்.

'கடைசியாக நீ சொன்னது முழுக்க முழுக்க உண்மை. இங்க இருந்து போற ஒவ்வொரு ஓராவும் (சதம்) அங்க துப்பாக்கிச் சன்னமாய்ப் போய் யாற்றையும் தலையைத்தான் தைக்கும். இதுதான் நடக்குதெண்டும் எல்லாருக்கும் தெரியும். எதிரி அழியிறதவிட எங்கட இனம் மொத்தமா அழியுது. அதுக்கு நாங்களும் ஒத்துழைக்கக் கூடாது. இவங்கட ஆட்டத்துக்கு லேசில விடக்கூடாது. எப்பிடித் தடுக்கப் போறம்? ம்...?' என்றான் ஹரி.

'அதுதான் அண்ண என்ர எண்ணமும். நாங்கள் இங்க இருக்கும் வரைக்கும் அவங்கள் நினைச்ச மாதிரி செய்ய விடக்கூடாது. உங்க இதைவிடக் கனவேலை நடக்குதாம். தமிழ் ஆட்களைக் கொமீனுக்க (நகரசபை) புகுத்தி விடுறத்துக்கு அலுவல் நடக்குதாம். நொஸ்கனிட்ட போனா அவன் ஏதும் தருவான். மிச்சம் பிடிச்சு அவனுக்கு ஒண்டும் வாறேல்ல. மிச்சம் பிடிக்கிற கலாசாரம் அவனுக்குத் தெரியாது. தமிழ் ஆட்கள் வந்தா எங்களுக்கு வாற காசையும் தரமாட்டினம். ஏதாவது சுத்துமாத்துச் செய்து அதை எப்பிடி நாடு கடத்தலாம் எண்டு பாப்பினம்.'

'ம்... ஏற்கனவே செலவு செய்யாமல் நகரசபை எங்களுக்கு வாற காசை மிச்சம் பிடிக்குது. அது பெரிய அளவிலான சேமிப்பு. உந்த வள்ளல்ல தமிழாக்களும் வந்தா? பார் நாங்கள் பாத்துக்கொண்டு இருக்கவே எவ்வளவு வேலை நடக்குது?' என்றான் ஹரி.

'அப்பிடித்தான் அண்ண. நீங்க இருந்து பாருங்க... எங்களுக்கு இங்க செலவழிக்க வேண்டிய காசு எப்பிடிப் போகுமெண்டு. அதுக்கு என்ன பெயர் மாற்றங்கள் திருகுதாளங்கள் எல்லாம் நடக்குமெண்டு. எத்தின சங்கங்கள் முளைக்குமெண்டு. இவங்கள் சரியான நரியங்கள். நரிவேலை செய்யாமல் விட்டா அதிசயம்தான். ஆனா என்ன அந்தப் பணம் எத்தின சனத்தின்ரை உயிரைக் குடிக்குமோ தெரியாது? உந்தப் பாவம் எல்லாம் எங்க இருந்தாலும் உவங்களைச் சும்மா விடாது அண்ண. முட்டு, ஆஸ்த்மா எண்டு கடைசி காலத்தில படுக்கையில கிடந்து இழுபடுவாங்கள். ஓ... கொள்ளிகூடக் கிடைக்காமல் நாறிப்போய்ப் பிரேத அறையில கிடப்பாங்கள். முற்பகல் செய்தால் பிற்பகல் விளையாமலே விடப்போகுது?' என்றான் கணேஸ் கோபமாக.

'சும்மா ஏன் ஊர்க் கிழடுகள் மாதிரிச் சாபம் போடுறீர். எதிரியும் துன்பப்படக் கூடாது எண்டு எண்ண வேணும். அதுதான் மனிதம் உள்ள மனிதனுக்கு அழகு. நாங்கள் எதையும் குள்ள நோக்கத்தோட தொடங்கேல்ல. நடத்தேல்ல. அப்பிடி நாங்கள் குள்ளத்தனமாய் நினைக்கவும் கூடாது. ஆனா இப்பிடி இவங்கள் திடீரெண்டு வந்து

உரிமை கோருவாங்கள் எண்டு நாங்கள் நினைக்கேல்ல. அதில தப்பு விட்டிட்டம். கடைசியில எங்கட நினைப்பில மண் விழுந்து போயிட்டுது.' என்றான் ஹரி.

'நாங்கள் தோல்வி அடைஞ்சதா அல்லது ஏமாந்ததா நினைக்கக் கூடாது அண்ண. அப்பிடி ஒரு நிலை வரவிடக் கூடாது. எப்பவும் கண்ணுக்க எண்ணை ஊத்தினபடி திரியோணும். இனிச் சண்டைக்கு வந்தாலும் பயப்பிடக் கூடாது. ஒரு நாளைக்கு நாங்களும் துணிஞ்சு இறங்கினால்தான் பிறகு பையன்கள் அடங்குவாங்கள். இப்ப சொல்லுறது என்ர வையித்தெரிச்சல் இல்லை. ஊரில இருக்கிற சனங்களின்ர வையித்தெரிச்சல். எத்தனைபேற்ற தாலிய அறுத்துப் போட்டாங்கள் இவங்கள்?' என்றான் கணேஸ்.

'சரி அதைவிடு. ஆனா இங்க வந்த பிறகும் அடிபடுகிறது, வெட்டுப்படுகிறது, கோட்டுக்கு அலையிறது, ஜெயில்ல இருக்கிறது என்னுடைய நோக்கமில்ல. அதுக்கு அர்த்தமும் இல்ல. இதுகளைத் தவிர்க்கிற அளவுக்கு கதைக்க முடியாத மிருகங்கள் இல்ல நாங்கள். எங்களுக்கு வாலாயமா இருக்கிற மொழி இப்பிடியான பிரச்சனைகளைக் கதைச்சுத் தீர்க்கிறதுக்குப் பயன்பட வேணும். அதை நாங்கள் ஒழுங்காகப் பாவிக்கோணும்.' என்றான் ஹரி.

'நீங்கள் சொல்லுறது சரியண்ண. அது கதைக்கத் தெரிஞ்சவை கதைப்பினம். பிரச்சனைய நைஸ்சாத் தீர்ப்பினம்.' என்றான் கணேஸ்.

'அட நீயும் சும்மா விடமாட்டா. உண்மைதான்ரா அப்பா. மேசையில இருந்து பிரச்சனையக் கதைக்கிறதுக்கும் ஒரு ஞானம், பொறுமை, அமைதி, விட்டுக் கொடுப்பு, சகிப்புத்தன்மை வேணும். கொட்டைபோட்ட அரசியல்வாதியளுக்கே அது இல்லை. அப்பிடி இருக்க பள்ளிக்கூடப் பக்கம் போகாதவங்களுக்கும், அரைகுறையாப் போனவங்களுக்கும், போனாலும் சுயநலத்தோட சிந்திக்கிறவனுக்கும் எப்பிடி அந்தப் பரந்த மனப்பான்மை வரும்? சொல்லு பாப்பம்?'

'அதுதான் அண்ண... அவன் அவனுக்குத் தெரிஞ்ச பாஷையிலதான் கதைக்கோணும்.' என்றான் கணேஸ். ஹரி அதற்குப் பதில் சொல்லவில்லை. அவன் ஏதோ சிந்தனையில் அமைதியானான்.

தொடர்ந்தும் சிறிது நேரம் கதைத்த பின்பு கணேஸ் விடைபெற்று தனது வீட்டிற்குப் போனான். வெளியே காற்றுப் பலமாக வீசியது. 'வார்டோவில் நடப்பது பெரும் விருட்சத்தில் இருந்து ஒரு சிறிய இலையை விழுத்தும் மென் காற்றுப் போன்றதொரு நிகழ்வு. அந்த விருட்சமே விழுமளவிற்கு ஒரு நாள் புயல் வீசும். புயல்கூட வீசத் தேவையில்லை. விருட்சம் தானாகவே விழுந்துவிடலாம். விருட்சத்தின் மேல் ஏறியிருந்து அடிமரத்தைத் தறிப்பதைத்தான் போராட்டமாகச் சித்தரிக்கிறார்கள். பொங்கிப் பொங்கி எழுகிறார்கள். இவர்கள் போராட்டத்தில் தமிழர் என்கின்ற இனம் சிலவேளை இலங்கையில் இருந்தது என்பதற்குச் சரித்திர அடையாளங்களைத் தேடவேண்டிய காலம்

வரலாம். அதற்காக நாங்கள் யாரையும் நோக முடியாது. எங்களுக்கு நாங்களே அப்போது தாராளமாய் நன்றி சொல்லிக் கொள்ளலாம். அல்லது தாராளமாய்ச் சேறு பூசிக்கொள்ளலாம்.' ஹரியின் எண்ணவோட்டம் இப்படியாகச் சென்றது.
ஹரிக்குத் தற்போது வெளியே பார்க்கவே வெறுப்பாகிற்று. அவன் போய் வெறுப்போடு படுத்தான்.

## அத்தியாயம் 11 பிறந்த நாள்

மேற்கு ஐரோப்பியர்களும் அவர்கள் பரம்பரையினரும் செல்வம் பெருகிய பின்பு, நாட்காட்டி வந்த அண்மைக் காலத்தில், தாங்கள் இந்த உலகில் பிறந்த மகிழ்வை, புதிய வயது தொடங்கும் பொழுது, கிறிஸ்தவ முறைப்படி, மெழுகுதிரி அணைத்து, கேக் வெட்டி, கொண்டாடிய நிகழ்வு பிறந்த நாள் கொண்டாட்டமாகியது. அதுவும் ஆயிரத்து எண்ணூற்றுத் தொண்ணூற்று மூன்றாம் ஆண்டே பிறந்த நாள் பாட்டே உருவாக்கப்பட்டது. இது வசதியோடு வந்த ஒரு மறக்க முடியாத கொண்டாட்டமாக அவர்கள் வாழ்வில் வந்து போகும். சீமைக்காரனின் மோகத்தில் அவர்கள் விட்ட அழுக்குச் சட்டையால் தங்கள் ஆத்மாவை மூட இலங்கையிலும், இந்தியாவிலும் சிலரால் அது தத்தெடுக்கப்பட்டது. அதைச் சந்தோஷம் என்றார்கள். புதிய நாகரிகம் என்றார்கள்.

பின்பு கொண்டாட்ட வறட்சியில் தவித்த மேற்குலக அகதித் தமிழர்கள் தங்கள் வசதியைக் காட்டும் அவதியில் முழுமையாக அதைத் தமது புதிய கலாசாரமாக்கினார்கள். நாளையளவில் ஈழத்தமிழரும் அதற்குப் பலியாகினர். இப்படியான கொண்டாட்டங்களை நடத்துவதற்கு எண்பதுகளில் இலங்கையில் இருந்த பொருளாதாரம் கைகொடுக்கவில்லை. அது அன்றாடம் பாணுக்கும் சம்பலுக்கும் காசை எண்ணும் வாழ்க்கை. புலத்தில் அது தலைகீழாக மாறிவிட்டது. தங்கள் பொருளாதார வளத்தைக் காட்டவேண்டும் என்கின்ற பதைபதைப்பு பலருக்கு ஏற்படுகிறது. போட்டிக்கு நடத்தப்படும் களியாட்டங்கள் இங்கு வரிசைக்கு மூச்சு விடமுடியாது நிற்கின்றன. விலை உயர்ந்த கார்களின் ஊர்வலம், பெண்கள் நகைக் கடையாக மாறிய பெண்ணியத்தின் கீழ் நிலை, மற்றவனின் பெண்டிரோடு ஆடும் புதிய கலாசாரம் என்று அது தொடர்கிறது. பிறந்த நாள் வந்து போனதே தெரியாது பாணுக்குக் கனவு கண்டவர்களே இப்போது ஐம்பதாவது, எண்பதாவது, தொண்ணூறாவது, எனத் தம்பட்டம் அடிக்கும் புதிய பறங்கிக் கலாசாரமாக அது எழுந்து நிற்கிறது. இனி இறந்த பின்பும் பிறந்தநாள் கொண்டாடுவார்கள். காட்ட வசதியிருக்கும் போது காட்டாமல் இருப்பதற்கு இவர்கள் என்ன ஞானிகளா? அற்ப மனித ஜந்துக்களின் மண்டை வெடிப்பல்லவா இது.

இன்றும் ஒரு பிறந்தநாள். விமலன் தனது முதலாவது பிள்ளையின் பிறந்த நாளை ஒஸ்லோவின் புறநகர்ப் பகுதியில் இருந்த ஒரு மண்டபத்தில் ஒழுங்கு செய்திருந்தான். முந்நூறு விருந்தினருக்கும் அதிகமாகச் சொல்லிச் செய்யப்படும் அந்த நிகழ்வில் பாட்டு, ஆட்டம், மது என்பன தாராளமாய் இருக்கும்.

கோல் அலங்கரிக்கப்பட்டு அங்கு இருந்த மேடையில் வெட்டுவதற்கான கேக்கும், அதைச் சுற்றிய அலங்காரத்தோடான அழகுக் காட்சி வியப்பைத் தந்தது. இந்தக் கூத்துக்களை எத்தனை முறை பார்ப்பது என்பதில் சலிப்படையும் பலர் உண்டு. அவர்களுக்கு மது அருந்த ஒதுக்குப் புறமாய் ஒரு அறை இருக்கும். அல்லது சமையல் அறையும் அதற்குப் பயன்படும். இன்று விமலன் அதற்கும் குறை வைக்கவில்லை. அது பலருக்கும் மகிழ்வைத் தந்தது.

சமையல் அறை அங்கு வழக்கத்தைவிட நீட்டாக இருந்தது. அது சாப்பாடு வைப்பதற்கும், இருந்து மது அருந்துவதற்கும் வசதியாகியது. மது அருந்துபவர்களுக்கு யார் கேக் வெட்டுகிறார்கள், எப்போது தம்பிடித்து அவர்கள் மெழுகுவர்த்தியை அணைத்துச் சாதனை செய்கிறார்கள் என்பதில் அக்கறை கிடையாது. அவர்கள் நேரத்தோடு பின் அறைக்குச் சென்று பொன் திரவத்தை அருந்துவார்கள். நேரத்திற்கு வந்து காசையோ அல்லது பொதியையோ கொடுத்துப் பல்லை இழித்துப் படத்தை எடுப்பார்கள். அத்தோடு அலுவல் முடிந்தது. பரிசில் பொருளைக் கொடுத்துப் படம்பிடிக்கச் சில வேளைகளில் நீண்டநேரம் கால் கடுக்க வரிசையில் நிற்கவேண்டி வரும். அப்போது வெறியில் முஸ்பாத்தி செய்வார்கள். அல்லது முண்டுவார்கள்.

சங்கர், ராமு, குகன் ஈறாகச் சண்முகனோடு இன்னும் பத்து நபர்கள் மட்டில் அங்கு இருந்து மது அருந்தினர். ஹரி இன்று மது அருந்தவில்லை. பூமணி இந்தப் பிறந்த நாள் கொண்டாட்டத்திற்கும் வழமை போல் வரவில்லை. ராமுவும், சங்கரும் குடிப்பார்கள் என்பது ஹரிக்குத் தெரியும். கடைசியில் அவர்களை அள்ளி ஏற்ற வேண்டியது அவன் பொறுப்பு. திருமணம் செய்து திரும்பிய பின்பு சுமன் வேலை பற்றிய அக்கறையில் இப்படியான கேளிக்கைகளுக்கு வருவது இல்லை. அவன் மனைவி இன்னும் வேலை செய்யத் தொடங்கவில்லை. கேளிக்கைகளுக்கு வருவதற்குப் பதிலாக படுத்துத் தனது உடலைத் தேற்றிக் கொள்வது, சொந்தக் கேளிக்கையைப் பார்ப்பது போன்றவற்றில் தற்போது அவன் அக்கறை போயிற்று.

'குடிக்கத் தொடங்கினால் பல மனிதர்களின் குணம் தலைகீழாய் மாறும். ஞானியாய் மாறுபவனும் உண்டு. வாளெடுப்பவனும் உண்டு. மௌனி சிலவேளை பிரசங்கியாகவும்,

பிரசங்கி சிலவேளை மௌனியாகவும் மாறுவான். இதில் யார் எப்படி? சிறிது நேரம் கழித்துப் பார்ப்போம்.' என்பதாகக் ஹரி எண்ணினான்.

'என்ன யோசினை ஹரியண்ணா?' என்றான் ராமு.

'கைக்கு விலங்கு போட்டமாதிரி...' என்றான் ஹரி.

'அப்பிடியெண்டா நீங்களும் அடியுங்க... நாங்கள் ரக்சியில வீட்ட போகலாம்.' என்றான் ராமு.

'அப்பிடி இல்ல. நான் பூமணி அக்கா பற்றியும் யோசிக்கோணும். அவா தனிய இருந்து எதைப்பற்றி யோசிப்பாவெண்டு எனக்குத் தெரியும்.'

'அப்ப நீங்கள் பேசாமல் வீட்ட போகலாமே அண்ணா?'

'விமலன் வீடு தேடி வந்து சொன்னவன். அவனையும் நான் மதிக்கிறதா இருக்கோணும்.'

'வாழ்க்கை எண்டுறது எத்தனை விதமான அல்லாடலுக்கு இடையேயான பயணமாக இருக்குது? அதில் அனுபவம் எண்டது எந்த வழியால் அவன் போக வேணும் எண்டதை காட்டுது.' என்றான் ராமு.

'அப்பிடியா ராமு. உள்ள போன புனிதத் தீர்த்தத்தின் வாசகமாய் உன்வாயில் இருந்து வருவதாய் உதைப் விளங்கிக் கொள்ளலாமா?' என்றான் ஹரி நளினமாக.

'இதுதானே கூடாதெண்டுறது அண்ணா. கருத்துக்கள் போதையோட சேர்ந்து மாறுமெண்டு அர்த்தம் இல்ல. ஆனா... அது வெளியால வாறதும் மனதுக்கையே ஒழிஞ்சு இருக்கிறதும்தான் போதையின்ர வித்தையாக இருக்கலாம்.' என்று நிமிர்ந்து பார்த்துச் சொன்னான் ராமு.

'ம்... தத்துவங்கள் பிறக்கவும், ஞானிகளையும், மிருகங்களையும் இனம் காணுறத்துக்கும் போதை சிலவேளை தேவைப்படுகுது இல்லையா?' என்றான் ஹரி.

'அண்ணா நீங்கள் சொன்னாப் பிழையா இருக்குமோ? எங்களக் கிண்டல் பண்ணுறீங்களா? அல்லது தமிழ் வளர்க்கிறீங்களா?' என்றான் ராமு எள்ளலாக. பின்பு கண்ணாடிக் குவளையைத் தூக்கி ஒரு மிடறு இழுத்தான்.

'ஹரி சொல்லுறது முழுக்கச் சரியடா. நீங்கள் அப்ப சொன்னது எல்லாம் சரியடா. நாங்கள்தான் மொக்குத்தனமாய் அவங்களை நம்பி மாண்டிட்டம். அவங்கள் கடைசியில கோதிருக்க சுளை புடுங்கீட்டாங்கள். கொள்ளை அடிச்சவன் எல்லாம் சுருட்டிக்கொண்டு ஓடிட்டாங்கள். இப்ப நாங்கள் அடுத்த மாதக் கட்டுக்காசு எப்பிடிக் கட்டுறதெண்டு யோசிக்கிறம். ஆண்டியும் ஒரு நாள் அரசனாகலாம். அரசனும் ஒரு நாள் ஆண்டியாகலாம். நாங்கள் எப்பிடி இருந்தம்? இப்ப எங்களை நிரந்தர ஆண்டியாக்கீட்டாங்கள். அவங்கள் அரசராகி உல்லாச இடங்களில ஒழிச்சு விளையாடுறாங்கள்.' என்றான் அருகே இருந்த சங்கர் திடீரென.

‘சரியண்ண… விடுங்க. உங்கட வயித்தெரிச்சலை அவங்களும் ஒரு நாளைக்கு அனுபவிப்பாங்கள்.’ என்றான் ராமு.

‘அதெண்டா உண்மை தம்பி. இரண்டுபேர் ஏற்கனவே அனுபவிச்சிட்டாங்கள். மிச்சப்பேரும் அனுபவிக்க வேணும். அப்பதான் என்னை மாதிரியானவைக்கு ஆறுதல் கிடைக்கும். மண்டைக்க சத்தம் போடுகிற பேய்க் குரல்கள் இல்லாமல் போகும். போன காசு இனித் திரும்பி வராது. ஆனாப் போக்கிரிகள் நல்லா வாழக் கூடாது. எங்கட வயித்தெரிச்சலில அவங்கள் நாசமாப் போயிடோணும்.’ என்றான் சங்கர். கொதியும் வெறியும் அவனைப் பீடித்திருந்தது.

‘இது அவங்கட பிழையில்லை. உங்கட பிழை சங்கர். கேட்டுக் கேள்வி இல்லாமல் அப்ப அள்ளிக் கொடுத்தியள். எப்ப நீங்கள் அவங்களைப் பிழை சொல்ல விட்டீங்கள்? எப்ப நீங்கள் அவங்களை எதிர்த்து ஒரு கேள்வி கேட்டியள்? நாங்கள் கேட்டாத் துரோகி எண்டியள். ஏமாறுகிற கூட்டம் இருந்தா ஏமாத்துறவனும் இருக்கத்தான் செய்வான்.’ என்றான் ஹரி.

‘உண்மை தான். நீங்கள் எண்பத்தேழில இருந்து படிச்சுப் படிச்சுச் சொன்னியள். உங்களால அந்த உண்மைய எப்பிடிக் கண்டுபிடிக்க முடிஞ்சுது எண்டே எங்களுக்கு விளங்கேல்ல. அதை நாங்கள் சுத்தமா அப்ப நம்பேல்ல. அப்ப மண்டைக்க எந்தக் குரலும் இருக்கேல்ல. மனதுக்கதான் நீங்கள் எல்லாம் துரோகிகள் எண்ட கோவம் இருந்திச்சுது. நீங்கள் ஒரு லட்சத்தைக் கொடுத்து நூறுபேரைக் கொலை செய்ய உதவாமல் இருந்திருக்கிறியள் எண்டு இப்ப விளங்குது. நாங்கள் உதவி செய்யிறதாக் குண்டும் துவக்கும் அனுப்பின உண்மையும் இப்பதான் விளங்குது. கடைசியில அதைத் தூக்கிறதுக்குக்கூட ஆளில்லாமல் நந்திக் கடல்ல தாண்ட பிறகுதான் எங்களுக்கு ஞானம் வந்திருக்குது. எங்கட உதவியெல்லாம் எங்கட இனத்தையே அழிச்சதாப் போச்சுது.’ என்றான் சங்கர்.

இந்தக் கதைகளைக் கேட்ட வண்ணம் குகன் ஒரு கண்ணாடிக் குவளையோடு சங்கருக்குப் பக்கத்தில் வந்து இருந்தான். அது ஹரிக்கோ, ராமுவுக்கோ பிடிக்கவில்லை. வானொலி நிலையத்தில் அவன் உண்டு பண்ணிய பிரச்சனையும் அதன் விளைவுகளும் அவன்மீது பலருக்கும் வெறுப்பை உண்டுபண்ணியது. ஹரி குகனைப் பற்றிச் சில கணங்கள் எண்ணிப் பார்த்தான்.

‘குகன் சில விதத்தில் சாதுரியம் காட்டினாலும் இன்னும் தலைவர் இருக்கிறார் என்பதாகக் கனவு காணும் பைத்தியங்களில் இவனும் ஒருவன். இப்படியாகச் சுறண்டிக் கழுவப்பட்ட மூளைகளை எப்படி மாற்ற முடியும்? எதையுமே புரிந்து கொள்ளாது, இனியுமொரு ஆயுதப் போராட்டம் வரும் என்கின்ற அதீத கற்பனையில் இன்றும் மிதப்பவர்களை என்னவென்று சொல்ல முடியும்? வார்டோவில் ஆடியது போதாதென்று

இங்கும் இவன் தொடருகிறான். தமிழீழம் என்னும் குதிரைக் கொம்பு வன்முறையால் கிடைக்கும் என்கின்ற கனவில் இன்னும் வெறி பிடித்து அலைபவர்கள் பலர். போராட்டம் என்பது உரிமைகளைப் பெறுவதற்கு மிகவும் அவதானமாக, கண்ணியமாக உயிர் இழப்புகளை இயலுமானவரை தவிர்த்து செய்யப்படும் கருத்தியல் மாற்றத் தியாகப் பயணத்தில் பிறக்கும் உரிமைக்காகப் பயன்படுத்தும் நுட்பமான ஆயுதம் என்பது அவர்களுக்கு விளங்காது. எம் இனத்திற்கான நெல்சன் மண்டேலா இன்னும் பிறக்கவில்லை. தமிழர்களிடம் ஏற்கனவே இருந்த உரிமைகளும் இன்று பறிபோக… கொலைகளைப் போராட்டமென நம்பியவர்கள்… நம்புகிறவர்கள் இன்றும் ஆயிரம் ஆயிரம். அதில் மூர்க்கமானவர்களில் இவனும் ஒருவன். உலகத்தில் நிறைய மாற்றங்கள் வந்து விட்டாலும் இவர்களின் எண்ணங்களில் மாத்திரம் எந்த மாற்றமும் வரவில்லை.' இந்த எண்ணங்களோடு சேர்ந்த வார்டோ அனுபவங்கள் ஹரிக்குக் குகன் மீது ஒருவித தர்ம சங்கடத்தை உண்டு பண்ணியது.

'என்ன சங்கர் அண்ணை? இவை எண்பத்தி ஏழுல இருந்து என்ன தத்துவம் சொன்னவை? தலைவருக்கு விளங்காதது இவைக்கு விளங்கினதா நினைக்கிறியளே? எச்சில் கையால காகம் துரத்தக்கூட மனம் இல்லாத நப்பியள் எல்லாம் இப்ப தத்துவம் சொல்லுறாங்கள். இவங்களெல்லாம் அந்த நேரம் காசு குடுத்து உதவி செய்திருந்தாத் தலைவரும் இண்டைக்கு வெளிப்படையாக உயிரோட இருந்திருப்பார். தமிழீழமும் எங்களுக்குக் கிடைச்சிருக்கும். ம்… இவையெல்லாம் இப்ப கதைக்க வந்திட்டினம். எல்லாம் குளிர்விட்டுப் போச்சுது.' என்றான் குகன். அவன் பேச்சில் வெறுப்பும், வன்மமும், சண்டைக்கு இழுக்கும் தொனியும் இருந்ததைக் ஹரி உணர்ந்து மௌனம் காத்தான். விமலன் சந்தோத்திற்காய் வைக்கும் ஒரு நிகழ்வில் எதற்காக வீண் சலசலப்பு என்பதாய் அவன் எண்ணினான். ராமுவும் பொறுமையாகப் பேசாது இருந்தான். இவர்களோடு பேசுவதே வீண் என்பது அவன் முடிவு. மௌனத்தில் அங்கே ஒரு அந்தரமான நிலை தோன்றிற்று. அதை உடைப்பது போல ராமு திடீரென எழுந்து 'வாங்க போஸ் குடுத்திட்டு வருவம்.' எனச் சங்கரையும், ஹரியையும் அழைத்தான். அதுவே சாலப் பொருந்தும் என்பதை உணர்ந்து ஹரி அவர்களோடு சென்று விட்டான். பல்லைக் காட்டிப் படத்தை எடுத்து வந்தபோதும் குகன் அதே இடத்தில் அசையாது இருந்தான். அவன் சங்கரை அப்போதும் விடுவதாய் இல்லை.

'என்ன நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாமல் ஓடிட்டியள்?' என்று கேட்ட வண்ணம் அவன் சங்கரை விஷமமாகப் பார்த்தான். அவனது கேள்வியில் இருந்த எக்காளம் சங்கரைச் சூடேற்ற அவன் குகனுடன் விவாதத்தில் இறங்கினான். அவனது வாய்க்கு யாரும் பூட்டுப்போட முடியவில்லை. பேச்சுக்குத் தடைபோடும் நாடல்ல இது. அதையும் மீறத் துணிந்த தமிழர் பலர் இந்த நாட்டில் வாழ்கிறார்கள். அது இந்த நாட்டின் விழுமியத்திற்கு ஒவ்வாத உண்மை.

‘தனி நபர் சுதந்திரம், மத சுதந்திரம், பேச்சுரிமை, எழுத்துரிமையென அனைத்து உரிமைகளையும் வழங்கி, பல்லினங்கள் ஒரு நாட்டிற் பிரச்சனை இன்றி வாழமுடியும் என்பதை ஐரோப்பிய நாடுகள் நிரூபிக்கின்றன. அதிலும் பிழை பிடிப்பவர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். அது மனித குணம். இந்த நாடுகள் தரும் சுதந்திரத்தை நன்கு அனுபவித்த வண்ணம், எந்தச் சுதந்திரத்தையும் மக்களுக்குக் கொடுத்திராத ஒரு இயக்கத்தை எப்படி இவர்களால் நியாயப்படுத்த முடிகிறது?’’ ஹரி மீண்டும் மௌனத்தில் சிந்தனை என்பாளோடு சோகம் பகிர்ந்தான்.

‘ஏன் அவை கதைச்சா என்ன? நம்பவைச்சுக் கழுத்தறுத்ததைவிட நேருக்கு நேர கதைச்சதை நினைச்சுக் கையெடுத்துக் கும்பிடோணும் போல இருக்குது. அவை மற்றவைய ஏமாத்தேல்ல. எங்கள ஏமாறாதேங்கோ எண்டு அப்ப அடிக்கடி சொன்னவை. ச்… அதை நாங்கள்தான் கேட்கேல்ல. எங்கட மூளைக்கு அது அப்ப ஏறேல்ல. குடுத்திட்டு இப்ப முழிக்கிறம். நீங்கள் ஏமாத்தினியள். இல்லையெண்டு உங்களால சொல்ல முடியுமே? நீ இவ்வளவு வாக்காலத்து வாங்குறியே உன்னால நான் கொடுத்த காசைத் திருப்பித் தரேலுமே? சும்மா கொடி பிடிச்சா… போஸ்ற் கொடுத்தா மட்டும் காணாது. மனிசரா… நீதி நீயாயத்தோட முதல்ல வாழத் தெரியோணும். ஒவ்வொரு மனிசனுக்கையும் ஒவ்வொரு அசுரன் ஒளிஞ்சு இருப்பான். அதைத் தட்டியெழுப்பிற வேலை செய்யக்கூடாது.’ என்றான் சங்கர்.

‘அசுரனும், அவுணனும் மயிரப் பிடுங்கட்டும் பாப்பம். நான் ஏன் உங்களுக்குக் காசு தரோணும்? உங்களுக்கு காசு தாறத்துக்கு நான் எங்கையும் கொள்ளையே அடிக்கிறன்? வேணுமெண்டா உங்களுக்கு வக்காலத்து வாங்கிறவையிட்ட வாங்குங்கோ பாப்பம்.’ என்றான் குகன்.

‘முதல்ல உந்தப் பிடுங்கிற கதையைக் கதையாத. உங்க ரெண்டுபேருக்கு ஏற்கனவே நடந்தது தெரியும் தானே? சரி அதைவிடுவம். அவையேன்ரா எனக்குக் காசு தரோணும்? அவையோடா என்னிட்டப் பிச்சைக்காரர் போல அலைஞ்சு அலைஞ்சு காசு வாங்கினவை? அவையோடா ஊரை முறிச்சு வாயில போட்டவை? அவை எங்களக் குடுக்க வேண்டாமெண்டு தலையில அடிச்சினம். ஆனா உங்கள மாதிரி ஆட்கள் குடுங்கோ, குடுங்கோ எண்டு நச்சரிச்சுத் திரிஞ்சீங்கள். நீங்கள்தான் காசு தரவேணுமடா. இல்லாட்டி மொத்தமாச் சுருட்டி வைச்சுக்கொண்டு சுகபோகமாய் இருக்கிறாங்களே… அவங்கள் காசு தரவேணுமடா. அது ஏலாட்டி நீ வாயத் திறக்காத. அதோட உன்ர வாலைச் சுருட்டிக்கொண்டு பௌவியமா இருக்கப்பார். எச்சில் கையால காகம் துரத்துற கதை கதைக்காத. அதுக்கெல்லாம் ஒரு தகுதி வேணும்.’ என்றான் சங்கர்.

‘என்ன நீங்கள் என்ர தகுதி பற்றிக் கதைக்கிறியள்? நாங்களும் நிறையப் பாடுபட்டம். இரவு பகலாக உழைச்சம். நாங்கள் ஏன் வாலைச் சுருட்டோணும்? நாங்கள் ஏன் வாயப் பொத்தோணும்? இது ஜனநாயக நாடு. எங்களுக்கு எங்கையும் கதைக்கிற உரிமை உண்டு.’ என்றான் குகன்.

‘இந்த ஜனநாயகத்தை மறுத்தவங்களுக்கு நாங்கள் உதவி செய்திருக்கிறம் எண்டதே அவமானம்தான். போன காசு போய்ப் பைத்தியம் பிடிக்காட்டியும் செய்த வேலைய நினைக்கக் கொஞ்சம், கொஞ்சமாய்ப் பைத்தியம் பிடிச்சிடும்.’ என்றான் சங்கர்.

‘நானும் ஒரு பைத்தியத்தோட நிண்டு இவ்வளவு நேரம் கதைச்சிருக்கிறன்.’ என்றான் குகன். ஏற்கனவே கோபத்திலும், வெறுப்பிலும், இயலாமையிலும், சித்தம் பிசகியும் உழன்றவனுக்கு மதுவின் மயக்கத்தில் அதைக் கேட்க ரௌத்திரம் பொங்கிற்று.

‘ஆரடா பைத்தியம்?’ கேட்ட வண்ணம் துள்ளி எழுந்து குகனை அடிக்கப் போனான் சங்கர். ஒருகணம் எல்லோரும் பெரும் திகைப்பில் உறைந்தனர். சத்தத்தைக் கேட்டுப் பிரதான பகுதியில் இருந்தவர்களின் தலைகள் எல்லாம் சொல்லி வைத்தது போல்ச் சூரியகாந்திப் பூவாய்ச் சமையல் அறைப்பக்கம் ஒரே நேரத்தில் திரும்பின. என்ன நடக்கிறது என்பது அவர்கள் பார்வையில் தெறித்த கேள்வியாகியது.
பிரச்சனை கைகலப்பில் முடியப் போகிறது என்பதை உணர்ந்த ராமு பரபரப்பாய்த் துள்ளி எழுந்தான்.

‘என்னவெண்டாலும் வாயால கதையிங்க. கைகலப்பு இங்க கூடாது. அதுவும் அவன் எல்லாரும் சந்தோசமாக இருக்கிறதுக்கு செய்யிற பாட்டியில உந்த வில்லங்கம் வேண்டாம். பிறகு பொலிசுக்குப் போக வேண்டி வரும். இங்க வைச்சு றிங்ஸ் பண்ணினதே பெரிய பிரச்சனையாகிடும்.’ என்ற வண்ணம் ராமு சங்கரைப் பிடித்தான்.

‘இல்ல அடிச்சிடுவாரே அவர்? விடுங்கோ… அதையும் ஒருக்காப் பாப்பம்.’ சங்கரை ராமு பிடித்திருக்கும் துணிவில் குகன் கத்தினான். ராமுவுக்கு ஒருகணம் சங்கரைக் குகனுடன் மோதவிட வேண்டும் என்கின்ற ஆசை தோன்றியது. அதன் விளைவு விமலனுக்கு அதிக பாதிப்பாக முடியும் என்பது சட்டெனப் புரிந்தது. அவன் சங்கரை அமைதிப்படுத்தினான். அதற்கிடையில் சங்கர்,

‘உங்க பாரெடா ராமு… உவன் என்ன மாதிரித் துள்ளுறானெண்டு? என்னை யொருக்கா விடு தம்பி. அவன்ர ஒரு தாடை எலும்பையாவது முறிச்சுப் போட்டு வாறன்.’ என்றான்.

‘ஐயோ அதில்ல அண்ண பிரச்சனை. விமலனை ஒருக்கா யோசிச்சுப் பாருங்கோ. நாளைக்கு அவன்தானே எல்லாத்துக்கும் பதில் சொல்ல வேணும்.’ என்றான் ராமு.

‘நீ சொல்லுறதும் நியாயம்தான். இப்பிடியானவங்களைக் கவனிக்கிற இடத்தில கவனிக்கோணும். அப்பதான் உந்த ஆட்டம் அடங்கும்.’

‘சரி விடுங்கண்ண. சாப்பிட்டிட்டு வீட்டை போற வேலையப் பாப்பம்.’

‘அதுவும் சரி. எனக்கும் ஏதோ தலையிக்க செய்யிற மாதிரி இருக்குது. சாப்பாட்டை முடிச்சிட்டு வீட்ட போனால் நல்லா இருக்கும்.’ என்றான் சங்கர்.

சங்கர் மெதுவாக அமைதி அடைந்தான். ராமு ஓடிப்போய் தனக்கும், சங்கருக்கும் சாப்பாடு எடுத்து வந்தான். இதைப் பார்த்த ஹரியும் சென்று தனக்கும் சாப்பாடு எடுத்து வந்தான். பின்பு எல்லோரும் இருந்து சாப்பிட்டு முடியச் சங்கரோடு வீட்டிற்குப் புறப்பட்டார்கள்.

ஹரிக்கு இன்றைய நிகழ்வை எண்ண வியப்பாகிற்று. ஒரு காலத்தில் தான் கூறிய கருத்துக்காகத் தன்னை எதிர்த்தவர்கள் இப்போது வாயிளந்து நிற்கிறார்கள். இப்போது கதைக்கும் போது நட்பு வழியக் கதைக்கிறார்கள். அந்தக் கதைகளைப் பார்க்கும் போது இறந்த காலத்தில் தாங்கள் கண்மூடித்தனமாக நம்பியதற்கு வருந்தும் விதமாகச் சிலர் கதைப்பார்கள். அந்தக் காலங்களில் ஹரி தலைகீழாக நின்று பார்த்தான். அப்போது அதை அவர்கள் ஏற்கவில்லை. காதில் சற்றும் போட்டுக் கொள்ளவில்லை. பதிலாகத் துரோகி என்பதாய்ப் பட்டம் கட்டினர். காலம் தன்னோட்டத்தில் கசக்கும் பாடங்களைக் கற்பித்துச் சென்றது. இப்போது எதுவும் பேச முடியாதவர்களாய் நின்று தவிக்கிறார்கள். ஹரியிடமே வந்து குழைகிறார்கள். என்றாலும் இன்னும் சிலர் குகனைப் போலவே சலவை செய்யப்பட்ட மூளைகளைச் சற்றும் மாற்றாது தொடர்ந்தும் ஏதோ கற்பனையில் அலைகிறார்கள்.

‘என்ன ஹரி யோசிக்கிறீர்? என்னால உங்களுக்கும் தேவையில்லாப் பிரச்சனை… இல்லையே?’ என்றான் சங்கர்.

‘சீச்சீ… அப்பிடி இல்லை அண்ணை. சில வேளை நாங்கள் நினைக்கிற மாதிரி எல்லாம் நடக்கிறேல்லைத்தானே? என்ன அநியாயம் நடந்தாலும் நல்லதொரு முடிவு வந்திருந்தா எல்லாரும் சந்தோசப்பட்டிருப்பினம். பல அநியாயம் நிரந்தரமா மறைக்கப்பட்டிருக்கும். ஆனா அநியாயங்களை அநியாயங்களால வெல்லேலாது எண்டுறதுக்கு எப்பிடியான ஒரு பாடத்தை எங்கட இனத்திற்குக் காலம் கற்றுத்தந்திருக்குது பாத்தியளே? இது வரலாறு வழங்கிப் போன பாடம் அண்ண. இவ்வளவு நடந்தும்கூட நாங்கள் நடந்து வந்த தடத்தில பழுது இருக்குது எண்டதை ஏற்றுக்கொள்ளுற மாதிரி எந்த மாற்றமும் எங்கட சனத்தில இல்ல. கடந்து வந்த தடங்களில் இருந்து கற்றுக்கொள்ளாதவரை எங்கட இனத்திற்கு விடிவோ, பாவவிமோசனமோ கிடையாது. அதை நினைச்சா எனக்கு அந்தரமா இருக்குது.’ என்றான் ஹரி.

‘எனக்கு உங்கட மனதின்ர ஆளம் இப்ப விளங்குது. ஆனா தான் பிடிச்ச முயலுக்கு மூண்டு காலெண்டு நிக்கிற சனங்கள் நிறைய இருக்கினம். அவை எல்லாம் லேசில

மாறுவினம் எண்டும் எதிர்பார்க்க ஏலாது. என்னையே பாருங்கோ… நானே அப்பிடித்தானே நிறையக்காலம் இருந்திட்டன்.'

'ம்… சிலவேளை கண்மூடித்தனமாய் நம்புறதும் உண்டு தானே? ஒரு நாளைக்கு அதைப் பிழையெண்டு உணர்ந்து கொள்கிற சந்தர்ப்பம் வரும். அப்பிடியும் திருந்தாதவர்கள் குருட்டு நம்பிக்கையில் மூழ்கிய நடைப்பிணங்கள்தான்.' என்றான் ஹரி.

'அப்பிடித்தான் ஹரி. வானத்தில இருந்து குதிப்பாரெண்ட நம்பிக்கையில இன்னும் நிறையப்பேர் கனவில மிதக்கிறாங்கள். சொல்லப் போனால் நான் எவ்வளவைக் குடுத்திருப்பன் எண்டதைக்கூடப் பார்க்காமல் என்னத் துரோகி எண்டுறாங்கள் அப்பா. யார் துரோகி? யார் தியாகி? ஏதாவது அர்த்தம் இருக்குதா பாருங்க? தனக்குப் பிடிக்காதவன் எல்லாம் துரோகி. தனக்குப் பிடிச்சவன் எல்லாம் தியாகியெண்ட கணக்கில இருக்குது அது.'

'நீங்கள் இப்ப நல்ல ஞானம் பெற்றிட்டியள்.' என்றான் ஹரி.

'இது கண்கெட்ட பிறகு செய்யிற சூரிய நமஸ்காரம் போல. கொஞ்சம் முந்தியே யோசிச்சிருந்தா நாங்கள் கடன் இல்லாமல் இருந்திருப்பம். அதை நினைச்சா தலைக்க ஏதோ செய்யும். மண்டை ஓட்டுக்குள்ள கண்ட குரலும் கேட்கிற மாதிரி இருக்கும்.' என்றான் சங்கர்.

'போனது போகட்டும். தயிரியமாக இருங்க. யோசிச்சு யோசிச்சு உங்களுக்கு ஏதாவது நடந்தா யாருக்குக் கஸ்ரம்? உங்களுக்கும், வனிதா அக்காவுக்கும், உங்கட மகனுக்கும் தானே கஸ்ரம்… ஊர் நாலும் சொல்லும். வாழ்ந்தாலும் ஏசும் தாழ்ந்தாலும் ஏசும்.' என்றான் ஹரி.

'ம்… அதுவும் உண்மைதான்.' என்று ஒப்புக் கொண்டான் சங்கர்.

## அத்தியாயம் 12 கடையில்

வார்டோவில் சில காலங்களுக்கு முன்பு…

ஒரு மணித்தியாலம் தலைகாட்டும் சூரியன் தன் தலையைத் திரும்ப இழுத்து வெகு நேரமாயிற்று. வார்டோவில் வழக்கமாக வீசும் காற்று அன்று எங்கோ திசைமாறிப் போனதாய் நகரம் இருளிலும், குளிரிலும் மட்டும் மௌனம் பேசியது. இந்த மௌனம் அதன் இயற்கைக்கு விரோதமான செயல் என்றாலும் இன்று அது சர்வ யதார்த்தமாகியது. வேலை முடிந்து நான்கு மணி போல் ஹரி கடைக்குச் சென்றான். அதன் பெயர் அவ்பா. சிறிய கடையென்றாலும் தேவையான பொருட்கள் அனைத்தும் அங்கு கிடைக்கும். அத்தோடு பொரித்த கோழி இறைச்சி, பண்டி இறைச்சி, பித்திப்பன்னா என்கின்ற பொரித்த இறைச்சியும், பொரித்த உருளைக்கிழங்கும் கலந்த

சாப்பாடு ஆகியவை அங்கு சுடச்சுடக் கிடைக்கும். கடைக்குள் சென்றாலே சாப்பாட்டின் மணம் வயிற்றில் அமிலத்தை கனதியாகப் பீச்சியடிக்கும்.

உள்ளே எதிர்பாராத விதமாய் திருவும் நின்றான். திருவோடு கதைத்துக் கதைத்து தமக்குத் தேவையான பொருட்களை எடுத்த வண்ணம் இருவரும் நடந்தனர். அப்பொழுது அவர்கள் இருவரும் கடைக்குள் திடீரென வந்தார்கள். புதிதான அந்த நபரைக் ஹரிக்கு யாரென்று முதலிற் விளங்கவில்லை. பின்பு திரு சொல்லித்தான் அவர் யார் என்பது புரிந்தது. அவர்கள் ஹரியையும் திருவையும் கண்டவுடன் தாமாகவே வந்து அறிமுகம் செய்தார்கள்.

அறிமுகம் எப்போதும் அழகாகத்தான் தொடங்குகிறது. கொடி பிடிக்கும் போது குணங்கள் விகாரமாகின்றன. என்று ஹரி எண்ணினான். இவர்கள் அளவளாவிய போது கணேசும் வேலை முடிந்து அங்கு வந்தான். அங்குதான் முதன் முதலில் ஹரி சங்கரைக் கண்டான். அவன் எப்படிப்பட்டவன்? அவனது கருத்துக்கள் எப்படியானவை என்பது அவனுக்கு அப்போது தெரியாது. அதை நோண்டும் நோக்கமும் ஹரிக்கு இருக்கவில்லை. சங்கர் அதற்கு அவகாசம் கொடுக்காமல் தொடங்கினான்,

'இங்க நிறையத் தமிழ் ஆட்கள் வேலை செய்யினம். அப்ப நல்லா உதவியும் செய்வினம் என்ன? செய்தாத்தானே பெடியளும் ஒரு கரை காணுவாங்கள். சிங்களவன்களுக்கும் அது நல்லதொரு பாடமா இருக்கும். பெட்டி பெட்டியாப் பெடியள் அனுப்பி வைச்சாத்தானே சிங்களவன் கொதிப்பான். அப்பதான் எங்கட வீரம் அவங்களுக்குத் தெரியும்.' என்றான்.

ஹரி, திரு, கணேஸ் ஆகியோர் மௌனம் காத்தனர். அதைப் புரிந்து கொள்ளாத சங்கர், 'அப்ப நீங்கள் ஒவ்வொரு மாதமும் எவ்வளவு குடுக்கிறியள்?' என்றான். அவனது பார்வை ஹரியின் மேல் விழுந்தது. ஹரி பேசாது நின்றான். கணேஸ் அதைப் பொறுக்க முடியாது,

'நாங்கள் எவ்வளவு குடுக்கிறம் எண்டது உங்களுக்கு இப்ப முக்கியமே? இல்லாட்டி அவைக்குக் கட்டாயம் குடுக்கத்தான் வேணுமே? நீங்கள் விரும்பினாக் குடுங்க. இல்லாட்டி வாயப் பொத்திக்கொண்டு போங்க. மற்றவயப் பற்றி ஏன் தேவையில்லாமல் கவலைப் படுகிறியள்?' என்றான்.

'என்ன நீர் இப்பிடிக் கதைக்கிறீர்? நீரும் தமிழன்தானே?' என்றான் சங்கர்.

'கதைக்கிறதை ஒழுங்காக் கதையுங்க. இங்க காசு தராட்டி எல்லாம் மாறீடுமோ? நாங்கள் ஊரில காலம் காலமாப் பேர் சொன்ன பரம்பரை. தமிழனிலும் தடிச்ச தமிழர் நாங்கள் தெரியுமோ? என்னத் தமிழனோ எண்டு கேட்கப் புறம் போக்கு நீர் வந்திட்டீரே?' என்றவாறு கணேஸ் கோபத்தோடு சங்கரை நெருங்கினான்.

'நான் என்ன பிழையாக் கேட்டனான்? ச்... ஒரு வேகத்தில பெடியளுக்கு எவ்வளவு குடுக்கிறியளெண்டு கேட்டன். பெடியளுக்குக் குடுக்காமலும் தமிழர் இருப்பினமோ? அப்பிடியெண்டா நீங்கள் வேற இயக்கமா இருக்கும். வேற இயக்கம் எண்டா… நாங்கள் வேற இயக்கமெண்டு சொல்லுறது தானே? அதை விட்டிட்டு என்ன கெம்பிறீர். உங்கட பரம்பரைத் தடிப்பு உங்களோட. இங்க நீர் என்னை அடிச்சுப் போடுவீரே? வந்து அடியும் பாப்பம்.' என்றான் சங்கர்.

ஹரி கணேசைத் தடுத்தான்.

'அவர் இப்பதானே புதுசா வந்தவர். ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு தனிப்பட்ட கருத்து இருக்கும். அதைக் கொஞ்ச நாளில அறிஞ்சிடுவார். அப்ப இப்பிடிப் பிரச்சனை வராது.' என்றான்.

'அண்ண! அவர்தான் இங்க புதுசா வந்தவர். அப்ப அவர்தான் அவதானமாகக் கதைக்கோணும். அதை விட்டிட்டு நாங்கள் அவரைக் கூப்பிட்டுப் பாடம் எடுப்பம் எண்டு நினைக்கிறதே?'

'சரி விடு… இனி இப்பிடி நடக்காது.' என்றான் ஹரி.

'நீங்கள் வேற இயக்கமெண்டா நான் கேட்காமலே விட்டிருப்பன். பொதுவான ஆட்களாய் இருப்பியள் எண்டு கேட்டன்.' என்றான் சங்கர்.

'நாங்கள் வேற இயக்கமா இல்லையா எண்டுறது முக்கியமில்லை. நீங்கள் ஏன் மற்றவையின்ர தனிப்பட்ட விசயத்தைக் கேட்கிறியள்? கதைக்கிறதுக்குப் புதினமா இல்ல?' என்றான் ஹரி.

'ஓ…' சங்கர் நளினமாக ஓசை எழுப்பினான். ஹரி முறைத்துப் பார்த்துவிட்டு அவர்களை விட்டு விலகிச் சென்றான். ஹரியோடு திருவும், கணேசும் சேர்ந்து வர சங்கர் எதிர்ப்பக்கமாகப் பொருட்களை எடுத்த வண்ணம் போனான்.

இவர்கள் சிறிது தூரம் சென்றுவிட்டார்கள். சங்கரோடு வந்தவன் இவர்களை நோக்கி ஓடிவந்தான். அவனுக்குச் சாதுவாக மூச்சு வாங்கியது. வார்டோக் காற்றில் பிராணவாயு குறைவு என்பதாக ஹரி எண்ணினான்.

'மன்னிக்கோணும்… சங்கர் கதைச்சது சரியில்லைத்தான். எண்டாலும் நாங்கள் வாக்குவாதப்பட்டாலோ, அடிபட்டாலோ எங்களுக்குத்தானே மரியாதை இல்லை. தமிழரெண்டு ஒற்றை வார்த்தையில முடிச்சுப் போடுவாங்கள்.' என்றான் அவன்.

'யார் இல்லையெண்டு சொல்லுறது. சிலருக்கு மற்றவயப் பற்றி விளங்கிக் கொள்ளுற தன்மை இல்ல. தங்கட எண்ணங்களை மட்டும் திணிக்கத்தான் தெரியுது. விரும்பிச் செயல்படுகிறது ஒரு நல்ல விஷயம். அதையே மற்றவர்மேல திணிக்க நினைக்கிறது மகாதப்பு. அதை யார் செய்தாலும், எதுக்காகச் செய்தாலும் ஏற்றுக் கொள்ள முடியாது. நாங்கள் இப்ப வாழுற நாட்டுச் சனத்தைப் பார்த்தாவது சகமனிதர்களின்ர உரிமையை மதிக்கப் பழகவேணும். நான் சொல்லுறது சரியா?' என்றான் ஹரி.

'ம் நீங்கள் சொல்லுறது சரிதான். விரும்பாட்டி வலோக்காரம் செய்யாமல் விடுறதுதான் நல்ல புத்தி.' என்றான் அவன்.

'இதைக் கொஞ்சம் எடுத்துச் சொல்லுங்கோ அண்ண.' என்றான் கணேஸ்.

'சொல்லிப் பார்க்கலாம். பெடியள் காதில போடுறாங்களா எண்டு போகப் போகத்தான் தெரியும்.' என்றான் அவன்.

'நீங்கள் சொன்ன தமிழனென்ற கௌரவம் இங்க எப்பவோ போயிட்டுது. இருக்கிற மிச்ச சொச்சமும் போகாமலிருக்க ஏதும் உங்களால செய்ய இயலுமோ எண்டு பாருங்க.' என்றான் கணேஸ்.

'ம்... பாப்பம்.'

அந்த விசயத்திலேயே அசையாது அழுந்துவதை விரும்பாத திரு,

'நீங்கள் எங்க அண்ண இருக்கிறியள்?' என்றான்.

## அத்தியாயம் 13 சங்கர்

கதையின் பராக்கில் கார் சங்கரின் வீட்டிற்கு வந்த போது கோடைக்காலத்து மின்னலாய் அதிர்ச்சி அனைவரையும் தாக்கியது. சங்கர் தனி வீட்டில் குடியிருந்தான். தொண்ணுறுகளில் வீடு மலிந்த போது வாங்கிய வீடு அது. அழகான வளவோடு ஆப்பிள் மரங்கள் சடைத்து நிற்க, நடுவே ஒளிந்து விளையாடும் அவனது அழகு மாளிகை. ஓடியோடி உழைத்துச் சங்கர் வீட்டுக் கடனை முதலில் கட்டி முடித்தான். பின்பு உழைப்பதில் பெரும் பகுதியை வீட்டை நவீனமாக்குவதில் செலவு செய்தான். வீடு என்பது அவனது முதற் பைத்தியம். தனிவீடு என்றால் பராமரிப்பதற்கு ஒரு பகுதி நேரம் தேவைப்படும். அது சங்கருக்குச் சற்றும் அலுப்படிக்காத விசயம். மாலை நேரக் குளிரைப் பாராது வெளியே நின்று வளவு வேலை பார்ப்பான். இப்போது விற்பதென்றாலும் வாங்குவதற்குப் போட்டிக்கு ஆட்கள் நிற்பார்கள். சிவகரனின் கண்கள் இந்த வீட்டிலும், சங்கரின் செல்வச் செழிப்பிலும் வெகு காலமாய்த் தொடர்ந்து மேய்ந்தன. சந்தர்ப்பம் வரவேண்டும் என்பதற்காய்க் காத்திருந்தான். அப்போதுதான் கடைசி யுத்தத்திற்கான நிதிச் சேகரிப்பு வசமாய் வந்து மாட்டியது. சங்கரை மசிய வைப்பது அவ்வளவு கடினமாக இல்லாவிட்டாலும் அவனது மனைவியான வனிதாவைச் சமாளிக்க முடியவில்லை. அவள் ஒத்துக் கொள்ளாது அடம் பிடித்ததில் சிவகரன் அதிகம் சிரமப்பட்டான். இறுதியில் சிவகரன் வென்றான். வீடு மீண்டும் கடனில் மிதக்கலாகிற்று. வன்னி இருப்பு ஈடாடிய போதும் இங்கு அது எழுற்சியாக நடந்திற்று.

அந்த அழகான வீட்டின் முன் இப்பொழுது பொலிஸ் கார் அபசகுனமாய் நின்றது. ஒரு ஆணும் ஒரு பெண்ணுமாக இரு பொலிசார் இறங்கி நின்று வீட்டைப்

பார்வையிட்டனர். பின்பு வனிதாவக்கா அவர்களோடு ஏதோ கதைப்பதை ஹரியால் பார்க்க முடிந்தது. இந்த நேரத்தில் எதற்கு இவர்கள் வீட்டில் பொலிஸ் என்பது ஹரிக்குப் விளங்கவில்லை. இப்போது ஒஸ்லோவில் என்ன நடக்கிறது என்பதை அறிய முடிவதில்லை. அப்படியான ஒரு மர்மம் தமிழருக்குள் இருப்பதான பிரமை அவனை உலுப்பிற்று. 'உரிமை திரிபான சொத்துக்களுக்காக அடிபடும் பேய்களின் கோரத்தாண்டவம் நெடுங்காலம் நீடிக்கும். உரிமை கிடைத்தவன் பொதுச் சொத்தை தனதாக்கிக் கொண்டது வேறு கதை.' என்பதாக அவன் எண்ணினான். காரை நிறுத்திய அடுத்த கணமே சங்கர் அவசரமாக இறங்கி வீட்டை நோக்கி ஓடினான். சங்கரைத் தொடர்ந்து ஹரியும் ராமும் ஓடினார்கள்.

சங்கர் ஓடி வருவதை வனிதா கண்டு கொண்டாள். அவன் அருகே சென்றதும் அந்தப் பொலிசாரைப் பார்த்து 'இவர்தான் என்னுடைய கணவர்.' என்று நொஸ்கில் கூறி அவனை அறிமுகப்படுத்தி வைத்தாள். அடுத்த கணமே வனிதாவுக்கு அடக்கி வைத்திருந்த துன்பங்கள் ஒன்று திரண்டு தொண்டைக் குழியை அடைத்தது. கவலையை சில நோர்வேப் பெண்கள் இரும்பு மனிதராய் மறைத்துக் கொள்வார்கள். சில பெண்கள் ஒரு சில நிறமற்ற முத்துக்கள் உதிர்த்து முற்றுப் புள்ளி வைப்பார்கள். பிசகாத தமிழ்ப் பெண்ணாய் வனிதா வாய்விட்டு சத்தமாக அரற்றினாள். கதறினாள். ஹரிக்கும், ராமுவுக்கும், ஏதோ சர்ச்சைக்குரிய விசயம் நடந்திருப்பதாகப் புரிந்தது. என்ன நடந்தது என்கின்ற கேள்வியும், கற்பனையும், பூனையும் எலியுமாக ஓடி விளையாடின.

வனிதா அழுவதைச் சிறிது நேரம் அமைதியாகப் பார்த்துக்கொண்டு நின்ற பொலிசார் பின்பு கை கொடுத்து... தங்கள் பெயர்களைச் சொல்லிச் சங்கரோடு அறிமுகம் செய்தனர். அதன் பின்பு துார்வால்ட் என்ற அந்த ஆண் அதிகாரி சங்கரைப் பார்த்து... 'நாங்கள் இந்தப் பக்கம் ரோந்துக்காக வந்தம். அப்ப எங்களுக்கு உங்கட மனைவிக்கு யாரோ தொலைபேசியில கொலை மிரட்டல் செய்ததாகத் தகவல் வந்தது. நீங்கள் நாளைக்கு மங்களறுட் பொலிசுக்கு வந்து அந்த முறைப்பாட்டை எழுத்தில் தரவேணும். நாங்கள் அதுக்குப் பின்பு என்ன செய்வதென்று முடிவெடுப்பம். நீங்கள் தேவையில்லாமல் கவலைப்பட வேண்டியதில்லை. ஏதும் பிரச்சனை என்றால் எங்களுக்கு மீண்டும் போன் பண்ணலாம்.' என்றார் தன் மொழியில். அப்போதுதான் வனிதா அழுததின் அர்த்தம் சங்கருக்கும் மற்றவர்களுக்கும் புரிந்தது. பொலிசார் மேற்கொண்டு தாமதியாது அவசரமாகப் புறப்பட்டுச் சென்றுவிட்டார்கள். அவர்களுக்கு ஆயிரம் வேலைகள் இருக்கும். இப்படியான சில்லறை அலுவல்களுக்கு இலகுவில் வரமாட்டார்கள். இன்று எங்கோ அலுவலாக இந்தப் பக்கம் வந்ததால் மட்டுமே முகம் காட்டினார்கள் என்பது ஹரிக்குப் புரிந்தது.

வனிதா இப்போது அழுவதை நிறுத்திவிட்டுச் சிறிது அமைதியாக இருந்தாள். சங்கர் திடீரெனத் தொடங்கினான்.

'இந்தக் குகன் நாய்தான் இதைச் செய்திருப்பான். அவனை ஒரு கை பார்த்தால்தான் சரி. இப்ப போய் நாலு சாத்துச் சாத்தினா எல்லா உண்மையும் தெரியவரும்.' என்று கூறிய வண்ணம் தனது காரை இயக்குவதற்காய் சங்கர் பாய்ந்து ஓடினான். மீண்டும் அங்கே பரபரப்பு ஏற்பட்டது. திகைப்பு மனித இயக்கத்தைச் சிலையாக்கியது. ராமு தன்னைச் சுதாகரித்துக்கொண்டு, அதிக வேகமாய் ஓடிப்போய் சங்கரின் கையைப் பிடித்தான்.

'அண்ண உங்களுக்கு என்ன விசரே? இப்பதான் மாமாமார் வந்திட்டுப் போகினம். உங்க எங்கையும் போய் குடிச்சிட்டு வாறவையப் பிடிக்க ஒளிஞ்சு நிப்பாங்கள். நீங்கள் குடிச்சிருக்கிறதை அவங்களோட கதைக்கேக்கையே நைசா அறிஞ்சிருப்பாங்கள். பிறகு நீங்கள் வில்லங்கத்தை விலை கொடுத்தே வாங்கப் போறியள்? இப்ப தேவையில்லாமல்ச் சும்மா பிடிபட்டு லைசென்சைப் பறிகொடுக்கப் போறியளே?' என்றான்.

'டே அவங்கள் வந்தா நான் பாம்பாட்டம் வெட்டி வெட்டிக் கார் ஓட்டுவன்.' என்றான் சங்கர். ஹரிக்கு அதைக் கேட்க நகைப்பாயிற்று. என்றாலும் அதைக் மென்ற வண்ணம், 'ஓ… நீங்கள் வெட்டி, வெட்டிக் கெட்டித்தனமாய் ஓட்டுறதில விண்ணன் எண்டு எல்லாருக்கும் தெரியும். அதைவிட இப்ப வேற முக்கியமான விசயம் ஒண்டு இருக்குது.' என்றான்.

'என்ன ஹரி அது?' என்றான் சங்கர்.

'முதல்ல வீட்டுக்குள்ள வாங்க. ஆற்ற நம்பரில இருந்து போன் பண்ணி இருக்கிறாங்கள் எண்டு பார்ப்பம்.' என ஒரு திருப்பம் கொடுத்தான். பொலிஸ் ஏற்கனவே பார்த்திருக்கும் என்பது அவனது ஊகம். என்றாலும் சங்கரைத் தாக்காட்ட அது ஒன்றே அவனிடம் அப்போது கைவசம் மாட்டிய காரணம்.

'ம் அதுவும் நல்ல ஐடியாத்தான்.' என்றான் சங்கர்.

பின்பு எல்லோரும் வீட்டிற்கு உள்ளே சென்று தொலைபேசியை எடுத்துப் பார்த்தனர். அதில் எந்த எண்ணும் இருக்கவில்லை. அது எண்ணை மறைத்து வந்த அழைப்பு. அதைப் பார்த்த ராமு 'இவ்வளவும் செய்யிறவங்கள் இதையும் யோசிப்பாங்கள் தானே?' என்றான்.

'ம்… தொடர்ந்தும் போன் அடிச்சுத் தொந்தரவு செய்தா பொலிஸ் கண்டுபிடிப்பாங்கள். இப்போதைக்கு நாங்கள் ஒண்டும் செய்யமுடியாது.' என்றான் ஹரி.

'இவன் குகன்தான் உதைச் செய்விச்சிருக்கிறான். அந்த நாய்க்கு நல்ல தட்டுத் தட்டினா எல்லா உண்மையும் வெளியால வரும்.' என்றான் சங்கர்.

‘ஏனப்பா அவனோட பாட்டியில எதாவது பிரச்சனையே?’ எனப் பதைபதைக்கும் தொனியில் கேட்டாள் வனிதா.

‘நான் எங்க சண்டைபிடிச்சன். அந்த நாய்தான் சண்டைக்கு வந்தான். அவனுக்கு அங்கையே குடுத்து அனுப்பி இருக்கோணும். இவையெல்லாம் அதுக்கு என்னை விடேல்ல. உன்னோட என்ன பேசினவங்கள்?’ என்று வனிதாவைப் பார்த்துக் கேட்டான் சங்கர்.

‘அதையெல்லாம் நான் எப்பிடி வாயால சொல்ல முடியும்? நாக்கப் பிடுங்கிறமாதிரி தூசண வார்த்தை பேசுறாங்கள்? இப்பிடிப் பேச்சு வாங்குறதிலும் செத்துப் போயிடலாம் அப்பா.’ என்றாள் வனிதா. அவளுக்கு அந்தச் சொற்களை உச்சரிக்கும் தயிரியம் இல்லை.

‘அப்பிடி எல்லாம் நினைக்காதீங்க. இப்பிடி நீங்கள் சோர்ந்து போனா பேசினவங்களுக்கு வெற்றி கிடைச்ச மாதிரிப் போயிடும். இதையெல்லாம் அடுத்த கணமே மறந்திட்டு, ஒண்டுமே நடவாதது போலத் திரிய வேணும். அதுதான் அவங்களுக்கு நல்ல பாடமாய் இருக்கும்.’ என்றான் ஹரி.

‘ஹரியண்ண சொல்லுறதுதான் சரியக்கா.’ என்றான் ராமு.

‘அது ஏதோ உண்மைதான் தம்பி. ஆனா ஒரு பெண்பிரசிட்ட இப்பிடிப் பச்சை, பச்சையா ஔிஞ்சிருந்து கேட்கிறவங்கள் எங்களுக்க இருக்கிறதே வெட்கக்கேடாய் இல்லையே? அதிலவேற இவை தமிழற்ற விடுதலைக்கு உதவுகினமாம். இவங்கள் எல்லாம் எங்கட பண்பாட்டை, விழுமியங்களைப் பாதுகாப்பாங்களே? எல்லாமே கேலிக்கூத்து மாதிரி இல்லையே தம்பி?’ என்றாள் வனிதா.

‘அதுதானே அவையின்ர ஆட்டம் முடிஞ்சு போச்சுது. நீ கவலைப்படாத வனிதா. இவங்கள் இன்னும் சுருட்டுகிறதை விடேல்லை. ஏற்கனவே கொள்ளையடிச்சதில மிச்சமா இருக்கிறதை சுருட்டுகிறதுக்கு இன்னும் கொஞ்சக் காலத்துக்கு அடிபட்டுத் திரிவாங்கள். சுருட்டி முடிஞ்சாப் பிறகு வேற எங்க சுருட்டலாம் எண்டு பாப்பாங்கள்.’ என்றான் சங்கர்.

‘சுருட்டுகிறத்துக்கா வழியில்லை?’ என்றான் ஹரி.

‘வேற என்னத்துக்கு இழுத்துப் போட்டுக்கொண்டு திரியிறவை? அந்த மாய நாடகத்தை அப்பாவியளால புரிய முடியாது. மனச்சாட்சி உள்ளவனுக்கு மனமே கோயிலா இருக்கும். அவனேன் கோயிலைத் தேடி ஒடவேணும்? செய்யிற பாவமெல்லாம் செய்து போட்டுத் திருப்பதி, பழனியெண்டு அலைஞ்சா தன்வினையில இருந்து தப்பிவிட முடியுமே? களவெடுக்கிறவன் அதில கொஞ்சம் உண்டியல்ல போட்டா எல்லாப்பாவமும் தீர்ந்து போயிடுமே? அந்தக் கள்ளக் காசை வேண்டுகிற கடவுளும் இவையப் புனிதராக்கி விடுவாரே? அப்பிடிச் செய்தா அவருக்கு என்ன பெயர்? கள்ளனுக்கு… மனச்சாட்சி இல்லாதவனுக்கு… கண்டவையின்ர வயித்தில அடிக்கிறவனுக்கு…

பாவப்பட்ட கடவுளின்ர பாவமன்னிப்பு தேவைப்படுகுது. அது இல்லாதவைக்கு என்ன பயம்? இவங்கள் கும்பிடுகிற கடவுள்தான் சுத்தமான அந்த மனிசர்களைப் பார்த்துப் பயப்பிடோணும். நான் சொல்லுகிறது சரியே?' என்றான் ராமு.

'வாவ்' என்று ஹரி கைதட்டினான். பின்பு,

'டே நீ பிரசங்கம் செய்யப் பயிற்சி செய்யலாம். பிறகு உனக்குப் பின்னால ஆயிரம் பக்தையர் அலையத் தொடங்குவினம். கோகுலத்துக் கண்ணன் மாதிரி பிரபலமாய்ச் சுத்தித் திரியலாம். வேணும் எண்டா நித்தியானந்தா மாதிரி ராமானந்தாவா பெயரை மாற்லாம்.' என்றான் ஹரி.

'ஏன் அவன் நல்ல பிள்ளையா இருக்கிறது உங்களுக்குப் பிடிக்கேல்லையே?' என்றாள் வனிதா.

'இல்லையக்கா, இப்ப நல்ல பிள்ளையா இருந்து என்ன பிரயோசனம்? ஏதாவது நரிமூளையோட திட்டம் போட்டுச் சுருட்டுறவன் சுருட்டுறான். அவங்கட ஆட்டமும், நடப்பும் தானே இங்கையும் ஆட்டிப்படைக்குது. நேர்மை, நீதி எண்டுறவனுக்கு விலாசம் இல்லாத வாழ்க்கைதானே மிச்சமாயிருக்குது?' என்றான் ராமு.

'அப்பிடி இல்ல. நிம்மதி யாரிட்ட இருக்கும் எண்டு பார்க்கோணும். நாங்களும் நல்ல நிம்மதியாய் இருந்திருக்கலாம். எல்லாத்தையும் கடைசி நேரம் காசக் குடுத்து வினையை வாங்கி நிம்மதியைத் தேவை இல்லாமல் துலைச்சுப் போட்டு நிக்கிறம்.' என்றாள் வனிதா.

'உங்க சிவகரன்ர முடிவைப் பாருங்கோ. அவனிட்ட நிறையக் காசு இருந்திருக்கும். ஆனா நிம்மதி இருந்திருக்குமே?' என்றான் ராமு.

'அது சரி ராமு. என்னைப் பூமணியக்கா தேடப் போறா. நான் போகவேணும்.' என்றான் ஹரி.

'ஐயோ நான் கதையோட நிண்டிட்டன். ரீ போடுறன் குடிச்சிட்டுப் போங்கோ.' என்று படபடத்தாள் வனிதா.

'அதெல்லாம் ஒண்டும் இப்ப வேண்டாம். இன்னொரு நாளைக்குப் பாப்பம். நீங்கள் கவனமாக் கதவைப் பூட்டிப்போட்டுப் படுங்கோ.' என்று கூறிய வண்ணம் ஹரி புறப்பட ராமுவும் அவனோடு புறப்பட்டான்.

## அத்தியாயம் 14 அக்கினி ஏவல்

உறக்கத்தின் ஆழத்தில் மனித மிருகங்களின் மூளையில் பதிந்த நினைவுகளின் இரை மீட்பாய் விரியும் காட்சிகளால் விசாரணை நடத்தும் அதிகாலைப் பொழுதாம் நான்குமணி. ஹரி ஆழ்ந்த உறக்கத்தில்… சில ஆத்ம விசாரணைகள் அவன் மூளையில் கனவாக… அதையெல்லாம் குழப்புவதாக அலைபேசி சிணுங்கியது. அற்புதம் அல்லது

ஆத்ம விசாரணை கலைந்தது, அவலமாக அது இரைந்தது. ஹரி அதை எடுக்க மனதில்லாது படுக்கையில் புரண்டான். மூன்று முறையோடு அலைபேசி ஓய்ந்துவிட்டால் அப்படியே படுப்பதென அவன் முடிவு செய்தான். அது இரண்டாந்தரம் ஒலிக்க அதை முறைத்தான். அது மூன்று முறை ஒலித்தும் நிற்கவில்லை. என்னவாக இருக்கும் என்கின்ற கேள்வி சலிப்பாகப் பொங்கியது. மனதிற்குள் அலைபேசியைச் சபித்த வண்ணம் அதைப் பாய்ந்து எடுத்தான். அடுத்த முனையில் சங்கர் பதைபதைப்போடும், சோகத்தோடும் கதைத்தான். அது எதற்காக என்கின்ற காரணத்தை அறிந்தபோது ஹரிக்கு அதிர்ச்சியாகிற்று. ஹரி துள்ளி எழுந்து அவசரமாக உடுப்பு மாற்றினான். ராமுவுக்குப் அலைபேசியில் தொடர்புகொண்டு வீட்டுக்கு வருமாறு கூறினான். இதைப் பார்த்த பூமணி…

'ஏனப்பா இந்த நடுராத்திரியில நீங்கள் வெளிக்கிடுறியள்?' என்றாள்.

'சங்கற்ர வீடு எரியுதாம். நான் ஒருக்காப் போய்ப்பாத்திட்டு வாறன்.'

'என்ன?' அவள் அதிர்ந்து போனாள்.

'அவன் படபடப்பில விபரமாக ஒண்டும் சொல்லேல்ல. ஆரோ வீட்டுக்கு மண்ணெண்ணெய்க் குண்டால ஏறிஞ்சு போட்டாங்களாம்.'

'ஐயோ அப்பிடியும் யாரும் இங்க செய்வினமே?'

'ம் இன்னும் இப்பிடி எத்தின நடக்கும். ஒரு காலத்தில தமிழரும் சிங்களவரும் அடிபடுகிறதா வியாபாரம் நடந்திச்சுது. இப்பவும் அது தொடர்ந்து நடந்தாலும், அதைவிட இப்ப தமிழர் தமிழருக்கேயும், சிங்களவர் சிங்களவருக்கேயும் கொத்துப்படத் தொடங்கியாச்சுது. அது இலங்கையில மாத்திரம் நில்லாமல், எல்லா இடத்திலையும் நடக்குது. அதுகின்ர ஒரு கட்டம்தான் சங்கரோட நடக்கிறதும்.' என்றான்.

'என்னவோ எல்லாம் சொல்லுறியள். அவைக்கு ஒண்டும் காயம் இல்லையாமே?'

'அது நில மட்டத்தோட இருக்கிற வீடு. அவை மற்றப் பக்கத்தால வெளிய வந்திருப்பினம். இனி அங்க போனாத்தான் மிச்சம் அறியலாம்.' என்றான் ஹரி.

'ரீ போடவே? குடிச்சிட்டுப் போறீங்களே?'

'ரீ குடிச்சிட்டுப் போன நல்லாத்தான் இருக்கும். ஆனா அதுக்கு இப்ப நேரம் இல்லை. வந்து குடிக்கிறன்.' என்று கூறிய ஹரி, மேற்கொண்டு சுணங்காது நித்திரைத் தூக்கம் முறியாத மயக்கத்தில் வாகனத்தை நோக்கி ஓடினான். அவன் கராஜ்யை அடையமுதல் ராமுவின் கார் வந்துவிட்டது. அதைப் பார்த்த ஹரி தனது காரை எடுக்காது, அவனது காரில் ஏறியமர்ந்தான்.

சங்கர் வீட்டிற்குக் ஹரி சென்ற போது அங்கே நிறைய ஆட்கள் கூடிவிட்டார்கள். நீலம் மின்னும் கோலம் எங்கும். அழிவைத் தடுக்கும் உதவிப் படையின் மொத்த ஆக்கிரமிப்பு அங்கே. அம்புலன்ஸ், தீயணைப்புப்படை, காவல் ஆகிய பிரிவுகளாக

அவற்றின் பிரசன்னம். அவலத்தைப் பார்க்க அங்கு கூடிய அனுதாபிகள், விடுப்பு நேசிகள், செய்தி திரட்டிகளென மனிதக் கூட்டத்தின் அலைமோதல்.
சங்கரின் வீட்டு வாசலின் அருகே ஹரி சென்றான். மிகவும் அருகே செல்லாதவாறு பொலிசார் அவனைத் தடுத்தார்கள். அவனுக்குக் அருகே போக முடியாததில் சற்று ஏமாற்றம் உண்டானது. அவன் அந்த இடத்தில் நின்று வாசலைப் பார்த்தான். ராமு தூரத்தே நின்றான். அவனது நித்திரையைக் குழப்பிய குற்ற உணர்வு ஹரிக்கு.
எறிந்த மண்ணெண்ணெய்ப் போத்தல் வெடித்து எரிபொருள் பூமியில் கொட்டிக் கிடந்தது. போத்தல் வெடித்து ஒரு பகுதி எரிபொருள் மரச் சுவரில் பட்டிருக்கிறது. அது பெரிதாகப் பற்ற முதல் வீட்டில் இருந்தவர்கள் கண்டிருக்க வேண்டும். உள்ளே இருந்து யாரோ தீயணைப்புத்துகள் அடித்திருக்கிறார்கள். அதன் பின்பு தீயணைப்புப்படை வந்து நுரை அடித்து முற்றுமாய் அணைத்திருக்கின்றனர். ஐம்பதாயிரம் குரோணர்கள் என்றாலும் இதைத் திருத்துவதற்குச் செலவு செய்யவேண்டும். அதைப்பற்றிச் சங்கர் கவலைப்பட வேண்டியதில்லை. அதைக் காப்புறுதி நிறுவனமே செய்யும் என்கின்ற ஆறுதல் எல்லோருக்கும் உண்டு. அதற்குத்தானே ஒவ்வொரு வருடமும் அவர்களுக்குக் படியளப்பது? என்றாலும் இதனால் சொல்லப்பட்ட செய்தி என்ன? அதன் அச்சுறுத்தல் என்ன? என்பதின் தாக்கத்தை எண்ணும் போது ஹரிக்குக் கவலை வந்தது. இனியும் தங்களின் வன்முறைப் பாதையில் இருந்து அவர்கள் விலகப் போவதில்லை என்பதான ஒரு தலைக்கு மேல் தொங்கும் இரும்புச் சுத்தியலான அச்சுறுத்தல் அதில் துருத்துவது அவனுக்குப் புரிந்தது. அந்த அச்சுறுத்தல் தங்களை ஒருகாலத்தில் ஆதரித்தவர்கள் மேலேயே இப்போது கண்மூடித்தனமாய் பாய்கிறது. அது ஹரிக்கு தாங்கமுடியாத வேதனையைத் தந்தது. சங்கரைப் போன்றவர்கள் தொடர்ந்தும் வாய்பொத்திப் பேசா மடந்தையாக இருப்பதே உயிர்வாழும் யுத்தியென அது கோடிட்டுக் காட்டுவதாய் புரிந்திற்று.

'இன்னும் வெட்டுப்பட்டுத் துடிக்கும் வால்களின் ஆட்டம் நிற்கவில்லை. வெட்டப்பட்ட கணவாய்த் துண்டுகள் துடிப்பது போலத் தான் அழிந்ததே தெரியாது ஒரு இனம் மாயையில் வாழ்வது மாகா சோகம். அது எங்கள் இனமாய் இருப்பது அதைவிடச் சோகம். இனி எங்கள் வேலிச் சண்டைகள் எங்கும் தொடரும். ஆதியற்ற மொழி, அவர்கள்தம் கலாசாரம் மனித வரலாற்றின் பாதியில் அழிந்த போகும் காலமும் ஈழத்தில் முதலில் வந்திடுமா?' என்பதான ஒரு கசப்பான எண்ணம் ஹரியின் சிந்தையில் ஓடியது.
'என்ன ஹரியண்ண யோசிச்சுக்கொண்டு நிக்கிறியள்? கிட்டப்போய் வாசலைப் பார்க்கலாம் எண்டாலும் பொலிஸ் விடமாட்டாங்கள் போல இருக்குது. நாங்கள் இங்க நிண்டும் ஒண்டும் பெரிசாச் செய்யேலாது போல இருக்குது.' என்றான் பக்கத்தில் வந்த ராமு.

நித்திரை கொள்ளாத அலுப்பில் ராமு படுப்பதற்கு அவதிப்படுகிறான் என்பது ஹரிக்குப் புரிந்தது. சங்கர் இவர்களின் பின்னால் சத்தமில்லாது வந்து கையைப் பிடித்த போதுதான் அவன் அங்கு வந்ததை உணர்ந்தவர்களாக, அவனைப் பார்த்தனர். பின்பு,

'உங்களுக்கு ஒண்டும் காயம் இல்லையே?' என்றான் ஹரி.

'ஏற்கனவே வெருட்டின பயத்தில வனிதாவுக்கு நித்திரை வரேல்ல. நான் கொஞ்சம் மயக்கத்தில போயிட்டன். அங்க வேற போட்டிட்டு வந்தது தானே? அது என்னை மயக்கிப் போட்டுது. தீடீரெண்டு ஏதோ விழுந்து வெடிச்சோண்ணை பயந்து எழும்பினவள் ஓடிவந்து என்னையும் எழுப்பிப் போட்டாள். நான் பிறகு விழுந்தடிச்சு வெளிய வந்து என்னெண்டு கதவைத் திறக்கவே எனக்கு விளங்கிப் போச்சுது. உடன வனிதாவைத் தீயணைப்புப் படைக்குப் போன் பண்ணச் சொல்லிப் போட்டுப் பவுடரை எடுத்து வந்து அடிச்சன். அதுக்கு நெருப்பு முழுசா அடங்க மாட்டன் எண்டிட்டுது. பவுடரை எப்பிடி அடிக்கோணு எண்டுற விசயமும் எங்களுக்குச் சரியாத் தெரியாதுதானே? நெருப்பை ஓரளவுக்கு கட்டுப்படுத்தி வைச்சிருந்தன். பிறகு உவங்கள் வந்திட்டாங்கள். நல்ல வேளை பெரிய அளவில எரியேல்ல.' என்றான் சங்கர்.

'உங்களுக்கு அதிஷ்ரம் எண்டுதான் சொல்ல வேணும். ஒழுங்கா நெருப்புப் பத்தினா வெளியாலேயே வரமுடியாமல் எல்லே அந்தரிக்கோணும். நிலத்தோட வீடு இருக்கிறது இப்பிடியான சந்தர்பங்களில வெளிய வாறதுக்குப் பெரிய வசதிதான். மிஞ்சிப் போனால் யன்னலத் திறந்தாவது வெளியால வந்திடலாம். இல்லாட்டிப் பின்கதவு எண்டாலும் உதவும். மாடி வீடெண்டாக் கதையே வேறமாதிரி இருந்திருக்கும்.' என்றான் ஹரி.

'ம்… நீங்கள் சொல்லுறதும் உண்மைதான். எறிஞ்சிருக்கிற விதத்தைப் பார்க்க சிலவேளை அவங்கள் வெருட்டுறத்துக்காகச் செய்த மாதிரி இருக்குது. யன்னலே இல்லாத, நெருப்பு லேசில பிடிக்காத, முன்பக்கமாப் பார்த்து எறிஞ்சிருக்குது. யன்னல் கண்ணாடிய ஊடறுத்து ஏறிஞ்சிருந்தா போத்தில் உடைச்சுக்கொண்டு உள்ளுக்கு வந்திருந்திருக்கும். அப்பிடியெண்டாப் பெரிய கஸ்ரப்பட்டிருப்பியள். எனக்கு இது ஏதோ வெருட்டுறத்துக்குச் செய்தமாதிரி இருக்குது. இல்லாட்டித் திட்டம் இல்லாமல் வந்திருக்கோணும்.' என்றான் ராமு.

'நீ சொல்லுறதிலையும் விசயம் இருக்குது ராமு. முழுசா எரிக்க நினைச்சா யன்னல் கண்ணாடிய ஊடறுத்து, இல்லாட்டி உடைச்சுப் போட்டு ஏறிஞ்சு இருக்கலாம்தான். இது ஏதோ பயமுறுத்தச் செய்த மாதிரித்தான் எனக்கும் படுகுது.' எனக் ஹரியும் அதை ஒப்புக்கொண்டான்.

'அப்ப அந்தக் குகன் என்ன வெருட்டுறத்துக்குச் செய்திருக்கிறான் எண்டுறியள்? அவருக்கு இப்ப அவ்வளவு துணிவு வந்திட்டுது?' சங்கர் கோபமாக கைகளைப் பிசைந்த வண்ணம் கதைத்தான். துரியோதன கர்ண நட்பாய் இருந்து துரியோதன வீமப் பகையாய் மாறியது விதியா? ஹிட்லரைக் கற்க எண்ணிய நாங்கள் மாகா

பாரதத்தை பகவத்கீதையைப் புரிந்துகொள்ளாத மடமையா? புரட்சி என்பதே மாயையில் சிக்கிய மனித குலத்தின் கற்பிதமா?

'யார் என்ன செய்தினம் எண்டுறதைக் கண்டு பிடிக்கிறது பொலிசின்ர வேலையண்ண. வீட்டைத் திருத்திறதும் இன்சூரன்ஸ் கொம்பனியின்ர பொறுப்பு. நீங்கள் எதுக்கு இப்ப தேவையில்லாமல் கோவப்படுறியள்? பேசாமல் இருங்க. என்ன செய்யிறாங்கள்? யாரைப் பிடிக்கிறாங்கள் எண்டு எல்லாத்தையும் ஆறுதலா இருந்து பாப்பம்.' என்றான் ஹரி.

'நீ சொல்லுறது சரி. ஆனா... உன்ன மாதிரி என்னால பொறுமையாக இருக்க முடியிறேல்ல. சிலவேளை மண்டைக்க ஒரு குரல் ஏதாவது செய்யெண்டு சாட்டைய வீசி வீசிச் சொல்லுற மாதிரி இருக்குது. அப்ப கைகால் எல்லாம் நடுக்கமெடுத்து அந்தரமாய் இருக்கும். நான் சும்மா இருப்பம் எண்டா இவனொருத்தன் வலிய வந்து என்னோடை கொழுவுறான். அவனொருத்தன் பாலும் தேனுமாப் பேசி வீட்டின்ர லோனை ஏத்திப் போட்டு, மற்றவைய ஏமாத்தின வினைக்கு, மண்டையையும் போட்டிட்டான். சும்மா இருக்கோணும் எண்டு நினைச்சாலும் என்னை விடுகிறாங்கள் இல்லைக் ஹரி.' என்றான் சங்கர் மீண்டும்.

'அது சரி... அநியாயமும், ஏமாத்தும் செய்யிறவை கனகாலம் வாழமாட்டினம். அது உள்ளங்கை நெல்லிக்கனி? உவன் சிவகரனுக்கு நடந்ததே நல்ல உதாரணம். நீங்கள் எதுக்கும் அமைதியா இருக்கிறது உங்களுக்கு நல்லது அண்ணை. ஏலும் எண்டா டொக்ரரிட்ட ஒருக்காப் போட்டு வாங்க. ஏதாவது தருவாங்கள்.' என்றான் ராமு.

இருவரும் கூறியவற்றைக் கேட்டுச் சங்கர் சற்று அமைதியாகினான். தீயணைப்புப் படையினர் எல்லாவற்றையும் பரிசோதித்து முடித்தனர். பின்பு அவர்கள் யன்னல்களைத் திறந்து காற்றோட்டத்தில் புகைமணம் தணிய விட்டனர். சிறிது நேரத்தில் சங்கரிடம் வந்து வீட்டிற்குள் செல்லலாம் என்பதை அவனுக்குக் கூறினர். அதன் பின்பு அவர்கள் வேலை முடிந்ததால் அந்த வண்டிகள் சத்தமில்லாது அங்கிருந்து நகரத் தொடங்கின. பொலிஸார் இப்போது சங்கரையும், வனிதாவையும் துருவித் துருவி கேள்விகள் கேட்டார்கள். முதலில் மிரட்டற் தொலைபேசி வந்தது. பின்பு வீட்டிற்குத் தீவைக்கப் பட்டிருக்கிறது. இவையெல்லாம் ஏதோ தற்செயலாய் நடந்த காரியம் இல்லையென்பது அவர்களுக்குத் தெள்ளத் தெளிவாகிற்று. பொலிசின் கேள்விக்கு அதிகநேரம் சங்கரால்த் தாக்குப் பிடிக்க முடியவில்லை. அவன் அன்று இரவு பாட்டியில் என்ன நடந்தது என்பதை உளறத் தொடங்கினான். அது அவர்களுக்கு இந்தப் பிரச்சனையில் அதிக அக்கறையை ஏற்படுத்தியது. அங்கு யார் யார் இருந்தார்கள் என்று அவர்கள் கேட்டதிற்கு ஹரியைச் சங்கர் கைகாட்டிவிட்டான். அதனால் ஒரு பெண் பொலிஸ் அதிகாரி ஹரியை நோக்கி வந்தாள்.

அவள் ஆறடியை மிஞ்சிய உயரம். மெல்லிய உறுதியான உடம்பு. ஸ்கண்டிநேவியருக்கே உரிய பொன்னாய்த் தகதகத்த மெல்லிய அலையான கூந்தல். வைரமாய் மின்னும் நீலக் கண்கள். அதன் மனதைக் காந்தும் மன்மதப் பார்வை.

மெல்லிய கொவ்வை பழமாகத் துடிக்கும் செவ்விதழ்கள். அதில் எப்போதும் தடவிய இடையறாத புன்சிரிப்பு. நீல அங்கியில் நிமிர்ந்த அழகியாக, சிறு முலைகள் முன்னே சிற்பத்தைப் போல தள்ள, விறைப்போடு அவள் வந்து, ஹரியின் முன்பு நின்றாள். பின்பு ஹரியைப் பார்த்து,

'நீங்கதானே ஹரி?' என்ற வண்ணம் அவனுக்குக் கையைக் கொடுத்துத் தன்னை அறிமுகம் செய்தாள். அப்படி அறிமுகம் செய்யும் போது தனது பெயர் 'றாண்டி' எனக் கூறினாள். ஹரியும் பதிலுக்குக் கையைக் கொடுத்தான். பெயர் அவளுக்குத் தெரியும் என்பதால் பெயரை மீண்டும் கூறாது அறிமுகமாகச் சிரித்தான். பின்பு,

'நான் ஏதாவது உதவி செய்ய வேணுமா?' என்று கேட்டான்.

'ம்… இரவு நடந்த பாட்டிக்கு நீங்களும் போயிருந்தீங்களாமே? உங்களோட நான் இப்ப கதைக்க ஏலுமா?'

'தாராளமா.' என்றான் ஹரி.

'அந்தப் பார்ட்டியில இவருக்கும் குகன் என்பவருக்கும் இடையில என்ன நடந்திச்சுது?'

'பெரிசா ஒண்டும் வன்முறையா நடக்கேல்ல. நாங்கள் பலர் இருந்ததால அப்பிடி நடக்க விடேல்ல. சும்மா பேச்சுப்பட்டவை.'

'அதுக்கு என்ன காரணம்?'

'கருத்து முரண்பாட்டால வந்த வாக்கு வாதம் எண்டு வைச்சுக்கொள்ளலாம்.'

'எதைப்பற்றி?'

'நாட்டுப் பிரச்சனை… அதுக்காகச் சேர்த்த பணம் பற்றின பிரச்சனை.'

'அதில இவர்கள் இரண்டு பேருக்கும் தொடர்பு இருக்கா?'

'ம்… இருக்குது.'

'எப்பிடி?'

'சங்கர் காசு கொடுத்தவர். குகன் காசு சேர்த்தவர்.'

'ஓ அப்பிடியா? நீங்களும் கொடுத்திருக்கிறியளா?'

'ம்… ம்…'

'ஏன் சிரிக்கிறியள்?'

'நான் வானவேடிக்கை பார்க்கிற குழந்தைப் பிள்ளை இல்லை. எனக்கு வன்முறையில எந்த நம்பிக்கையும் கிடையாது. அகிம்சை என்பதைப் போராடும் ஆயுதமாக அல்லது யுக்தியாய்ப் பாவிக்க எவ்வளவு தியாகம் செய்யவேணும் எண்டதை ஓரளவுக்கு விளங்கி வைச்சிருக்கிறன். அதுக்கு உதாரணமாக நெல்சன் மண்டேலாவைச் சொல்லலாம். சுயநலம் இல்லாத அகிம்சை அது. மண்டேலா போன்ற அரசியல் வாதிகள் எங்களிடம்

இல்லாததால் அகிம்சையே தோற்றுவிட்டது என்பது ஒரு பிழையான கருத்து. ஆயுதம் தூக்கிறவைக்குப் பின்னால போற அளவுக்கோ, அல்லது அவைக்கு உதவி செய்யிற அளவுக்கோ நான் இப்ப இல்லை. இராணுவ வெற்றி தோல்விக்காகக் கைதட்டிப், பின்பு கவலைப்படும் சாமானியனும் அல்ல நான். அந்த வெற்றிக்காக ஆயிரம் ஆயிரமாய் அள்ளிக் கொடுத்து, அப்பாவிகளைப் பலி கொடுப்பது எனக்கு அறவே பிடிக்காது. அதால நான் யாருக்கும் காசு குடுக்கிறதே இல்லை.' என்றான் ஹரி.

அவளின் முகத்தில் நல்லதொரு விளக்கம் கேட்ட திருப்தி இருப்பதாய் பக்கத்தில் நின்ற ராமுவுக்குத் தோன்றியது.

'ஓ நீங்கள் தெளிவாகத்தான் இருக்கிறீர்கள். எனக்கும் உங்கள் கருத்துப் பிடித்திருக்கிறது.' என்றாள் அவள்.

'நோர்வே மக்கள் பொதுவாக வன்முறையை விரும்புவதில்லை. பிரச்சனைகளைத் தீர்த்துக் கொள்வதற்கு அதை ஒரு மார்க்கமாகப் பாவிப்பதில்லை. அப்படியானவர்களுக்கு இந்த நிலை நன்கு பிடிக்கும்.' என்பதாக ராமு எண்ணினான். அதற்காக நோர்வே மக்கள் எல்லோரும் சாதுக்கள் இல்லை என்பதும் ராமுவுக்குத் தெரியும்.

அந்தப் பெண் பொலிஸ் அதிகாரி ராமுவைப் பார்த்துச் சினேகமாகப் புன்னகைத்தாள். ராமுவுக்கு அது பிடித்திருந்தது. அவனும் பதிலுக்குப் புன்னகைத்தான். அவளைப் பார்த்த போது இப்போதுதான் பொலிஸ் கல்லூரி முடித்திருக்க வேண்டும் போல அவனுக்குத் தோன்றியது. பின்பு தொடர்ந்தும் ஹரியிடம் அவள் விசாரித்துத் தகவல்களை எழுதி எடுத்துக்கொண்டு திரும்பிச் சென்றாள். சிறிது நேரத்தில் பொலிஸார் புறப்பட்டுச் செல்லச் சங்கர் இவர்களை நோக்கி வந்தான்.

'என்னவாம் பொலிஸ்காரர்?' என்று ஹரி அவனைப் பார்த்துக் கேட்டான்.

'அவங்கள் யாரில உங்களுக்குச் சந்தேகமெண்டு கிண்டுறாங்கள். நான் என்ன சொல்ல முடியும்? குகனோட சும்மாய் வாய்த் தற்கப்பட முதலே போன் பண்ணிப் பெண்பிரசுகளோட பேசக்கூடாத பேச்செல்லாம் பேசியிருக்கினம். அது போதாதெண்டு வீட்டுக்கும் நெருப்பு வைக்கிறான். இவ்வளவு நாளும் இங்க இருந்திருக்கிறம் யாரும் போன் பண்ணேல்ல. யாரும் வீட்டுக்கு நெருப்பு வைக்கேல்ல. அவரோட பேச்சுப்பட்டோண்ண மட்டும் எல்லாம் நடக்குதெண்டா என்ன அர்த்தம்? நான் அவனைச் சந்தேகப்பட இன்னும் காரணம் தேவையே?' என்றான் சங்கர்.

'ம்… நீர் சொல்லுறதும் நியாயம்தான். வேற யாருக்குத் திடீரெண்டு உன்மேல இவ்வளவு கோபம் வரும். அதுவும் ஒரே இரவில எல்லா அலுவலையும் செய்யிற அளவுக்குக் கண்மூடித்தனமான கோபம் வரும்? நம்ப முடியாமல்தான் இருக்குது.' என்றான் ஹரி.

பின்பு எல்லோரும் பின்பக்கக் கதவு வழியாக உள்ளே சென்றார்கள். வனிதா சோபாவைத் துடைத்துப் பார்த்தாள். தூசோ புகையோ அதில் இருப்பதாய் அவளுக்குத் தெரியவில்லை. எல்லோரும் அதில் இருந்தனர்.

சற்று நேரத்தில் வனிதா சொல்லாமல் கொள்ளாமல் தேநீரோடு வந்து நின்றாள். பின்பு எல்லோரும் தேநீர் அருந்திய வண்ணம் கதைத்தனர். கதையில் நேரம் மாயமாகக் கரைந்து போயிற்று. பொழுது மெல்லப் பிரசவத்தை நோக்கிப் பயணித்தது. இருளின் பிடியில் இருந்து விடுபட முடியாது விடியல் அவஸ்தையோடு திமிறியது. ஹரியும் ராமுவும் விடை பெற்றுக் கொண்டு தங்கள் வீட்டிற்குப் புறப்பட்டார்கள்.

கனவுகள் கலையும் நேரம் வந்தாலும், அதிலிருந்து விடுபட விரும்பாத மனிதர்களை எண்ணக் ஹரிக்குப் பரிதாபமாகிற்று. அவன் ராமுவோடு காரை நோக்கிச் சென்றான்.

## அத்தியாயம் 15 வஞ்சகம்

வார்டோவில் சில காலங்களுக்கு முன்பு...

அன்று திருவும் ஹரியும் ஆழ்ந்த சிந்தனையோடு அந்தக் கூட்டத்திற்குச் சென்றார்கள். வானொலிக்குப் பொறுப்பானவரும், துணையதிகாரியும் கூட்டம் நடப்பதற்கான அறையில் குழுமியிருந்தனர். குடிப்பதற்குக் கோப்பி, தேநீர் தயாரிப்பதற்கு வெந்நீர், வகை வகையான தேயிலை, சீனிக்கட்டி, பால், கரண்டிகள், சாப்பிடுவதற்கு பிஸ்கட் ஆகியன அங்கு வைக்கப்பட்டிருந்தன. வார்த்தைகளை வீரியமாய்ப் பிரசவிப்பதற்காய் மௌனத்தில் உறைந்து, வலுத் தேடும் தவத்தின் தொடர்ச்சி அங்கே. தவத்தில் இருந்து விடுபடமுடியாத இக்கட்டில் சத்திரசிகிச்சை மூலம் உருவான கோடுகளான புன்னகை. சிறிது நேரம் அமைதியாக இருந்த 'யாளவின்' முகத்தில் மீண்டும் ஒரு புன்னகையின் மெல்லிய நெளிவு. அதில் 'நான்கு தமிழர்கள் இருந்தே ஒற்றுமையாக இருக்க முடியவில்லையே? நீங்கள் வானொலி நடத்தி என்ன செய்யப் போகிறீர்கள்?' என்பதாகக் ஹரியைப் பார்த்துக் கேட்பதான கேலியின் ஒளிவு. யாள சிலவேளை புரியாதவாறு சிலேடை பேசுவான். இரட்டை அர்த்தத்தில் பேசுவது என்றால் சிலருக்குக் குசி. பலருக்கு அதைப் புரிந்து கொள்வதில் சங்கடம். வேற்று மொழியில் இரட்டை அர்த்தத்தில் பேசினால் சிலவேளை ஹரிக்கு வெறுப்பு வரும். இன்று என்ன சொல்லப் போகிறான் என்பது தெரியாது. நல்ல வேளையாக யாளவுக்கு அதிகம் கதைக்கும் சந்தர்ப்பத்தைக் குனுத் வழங்கமாட்டார். குனுத் பழமொழி சொல்லுவார் என்றாலும் நேரடியாகப் பேசுவார். வெளிப்படையாகத் தனது முடிவுகளைச் சொல்லுவார்.

அமைதிக்குச் செருமல் மூலம் விடை கொடுத்து குனுத் கதைக்கத் தொடங்கினார். 'நான் நேரடியாகவே விசயத்துக்கு வாறன். அண்டைக்கு ஸ்ரூடியோவில நடந்த சண்டைக்குப் பிறகு நிச்சயம் ஒரு சந்திப்பு வைக்க வேண்டியது கட்டாயமாகப் போயிட்டுது. அந்தச் சம்பவம் நாங்கள் எதிர்பார்க்காதது. அதனால எங்களுக்குக்

கொஞ்சம் கடுமையான அதிர்ச்சியாக இருந்தது. அது எங்களுக்குப் பொருட் சேதத்தோடு பல சிரமங்களையும் உண்டுபண்ணி இருக்கிறது. அந்தச் சம்பவத்தை நீங்களாக ஏற்படுத்தவில்லை என்பது எங்களுக்குத் தெரியும். ஆறுதலாக உங்களோட அதைப்பற்றிக் கதைக்கலாமென நினைத்தோம். திடீரெனப் போன கிழமை மகேன் என்பவர் ஸ்ரூடியோவுக்கு வந்து என்னுடன் கதைத்தார். நீங்கள் இங்கே இருக்கிற அதிகமான தமிழ் மக்களின் கருத்திற்கு மதிப்பளிக்காமல், உங்களைச் சார்ந்த சில அமைப்புக்குச் சார்பாக வானொலி நடத்துவதாக அவர் குற்றம்சாட்டினார். அதன் காரணமாகத்தான் அந்தச் சண்டை ஏற்பட்டது என்றும் அவர் சொன்னார். இந்த விடயங்கள் எங்களுக்குச் சற்று அதிர்ச்சியைத் தந்தன. அத்தோடு அவர் இனிமேல் இங்கு சண்டை வராமல் இருப்பதற்கு நாங்கள்தான் ஏதாவது ஒழுங்கு செய்ய வேண்டும் என்பதாகவும் வாதாடினார்' என்று கூறி நிறுத்திய குனுத் திருவோ, ஹரியோ ஏதாவது சொல்வார்களோ என்பது போலப் பார்த்தார். அதைப் புரிந்த ஹரி,

'நீங்கள் அதை நம்புகிறீர்களா?' என்று மட்டும் கேட்டான்.

'எந்தப் பகுதியைச் சொல்ல வாறீர்?' என்றார் குனுத்.

'நாங்கள் ஒரு குறிப்பிட்ட அமைப்புக்குச் சார்பாக நிகழ்ச்சிகள் நடத்துகிறோம் என்று அவர்கள் கூறியது பற்றிக் கேட்கிறேன்.' என்றான் ஹரி. குனுத் திருவைப் பார்த்து,

'திரு! நீங்கள் என்னுடன் இதைப் பற்றி ஏற்கனவே கதைத்து இருக்கிறீர்கள். இந்த வானொலியை எந்தவித அரசியிற் கலப்பும் இல்லாமல் நடத்துவதே உங்கள் நோக்கமென்று பல முறை கூறியிருக்கிறீர்கள். அதனால் அவர்கள் சொல்வதை அப்படியே நான் முழுமையாக நம்பவில்லை.' என்றார் குனுத்.

'சந்தோசம். நாங்கள் இப்பொழுதும் எந்த அரசியற் கலப்பும் இந்த வானொலிக்குள் வரக்கூடாது என்கின்ற நிலமையிலிருந்து இம்மிய அளவும் மாறவில்லை. இதைச் சகிக்க முடியாமல் நடந்ததுதான் அன்றைய அந்தச் சம்பவம். அந்தச் சம்பவத்தில் பாதிக்கப்பட்டதும் வானொலியை நடத்தும் நாங்கள் தான்.' என்றான் திரு.

'சொறி... எனக்கும் அந்தச் சம்பவத்தை எண்ணினால் வருத்தமாக உள்ளது. நான் அவரோடு அதைப்பற்றிச் சிறிது கடுமையாகக் கதைத்தேன். அது ஒரு பொலிஸ் கேஸ் என்பதால் மேற்கொண்டு அதைப்பற்றி அதிகம் கதைக்கவில்லை. என்றாலும் ஒரு விடயத்தை மட்டும் பரிசீலிப்பது நல்லதென நான் எண்ணுகிறேன்.' என்றார் குனுத்.

'ம்... சொல்லுங்க.' என்றான் திரு.

'இந்தச் சுற்றிவளைப்புக் கடைசியில் எங்கள் தலையில் சம்மட்டியால் அடிப்பதற்கே.' என்பதாகக் ஹரி எண்ணினான். இவர்களின் பழக்கம் அப்படியாக இருந்தது. எந்த விடயத்தையும் வாழைப் பழத்தில் ஊசியேற்றுவது போலச் சொல்லுவார்கள்.

'இது ஒரு ஜனநாயக நாடு. இங்கு ஒரு கருத்தில் பிரச்சனை வந்தால் இரகசிய வாக்கெடுப்பு வைத்து, அதில் எவருக்குப் பெரும்பான்மை வருகிறதோ அவர்களின்

விருப்பம் செயற்படுத்தப்படும். இப்பொழுது இருக்கும் பெரும்பான்மையின் மூலமாக ஒரு புதிய நிர்வாகம் தெரியப்பட்டு, அவர்கள் நிகழ்ச்சியை நடத்தலாம் என்பது அவருடைய கருத்து. அந்தக் கருத்தை நாங்கள் புறக்கணிக்க முடியாது. அதனால் அப்பிடி ஒரு வாக்கெடுப்பை நீங்கள் நடத்த வேண்டும். அந்த முடிவுக்கு நீங்கள் கட்டுப்பட வேண்டும். அதுதான் எங்கள் விருப்பம்.' என்றார் குனுத்.

'நீங்கள் கூறினால் நாங்கள் அப்பிடியே செய்கிறோம். எங்களுக்கு இதில் மறு தெரிவுகள் இல்லை. ஆனால் ஒரு உண்மையை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். இந்த ஜனநாயகம் இனி நடக்கின்ற வானொலிக்குள் அரசியலையும் ஒரு பக்கச்சார்பான கருத்தையும் திணிப்பதற்கு உதவப் போகிறது. அதுதான் அவர்கள் நோக்கமும் எங்கள் ஆதங்கமும். உங்களுக்குத் தமிழ் விளங்கி இருந்தால் நாங்கள் இங்கு வந்திருக்கவே தேவையில்லை.' என்றான் திரு.

'பெரும்பான்மை எதை விரும்புகிறதோ அதுக்குக் கட்டுப்படுவதுதானே ஜனநாயக விதி. இல்லையா? உண்மை உங்கள் மொழி புரியாதவரை நாங்கள் உங்களைப் புரிந்து கொள்வது சிரமம்தான்.' என்றார் குனுத் வேதனையாகச் சிரித்தவண்ணம். எங்கள் மொழி புரிந்தாலும் எங்களைப் புரிந்து கொள்ள முடியாது என்று ஹரிக்குத் தோன்றியது.

'உண்மை. யூதரைக் கொலை செய்வதைப் பெரும்பான்மை ஜெர்மானியர்கள் எதிர்க்கவில்லை. அல்லது தமக்குத் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ளவில்லை. அது மறைமுகமாக ஆதரவு தெரிவித்தார்கள் என்பதாகிறது. இலங்கையரசு செய்ததைப் பெரும்பகுதிச் சிங்கள மக்கள் எதிர்க்காததால் அவர்களும் அந்த வரலாற்றுத் தவற்றைச் செய்தார்கள். இலங்கையின் வடக்கில் நாங்களும் அதே வரலாற்றுத் தவற்றைச் செய்தோம். ஜனநாயகப்படி அது அப்போது அங்கே அங்கீகரிக்கப்பட்ட ஒன்று அல்லவா? ஜனநாயகம் என்பது சிறுபான்மையின் கருத்துக்களையும், உரிமையையும் மதியாத போது சர்வாதிகாரமாகும். அது உண்மையான ஜனநாயகம் அல்ல. அது மனிதாபிமானம் கொண்ட தலைவர்களால் கடைப்பிடிக்கப்படும் பொழுது, சிறுபான்மைக்கு உரிமையும், சுதந்திரமும் கிடைக்கும் பொழுது உண்மை ஜனநாயகம் ஆகும். அப்போது அது மனிதத்தைக் காட்டும். சிறுபான்மையை மதிக்கும் ஜனநாயகத்தை உண்மையான ஜனநாயகம் என்று சொல்லலாம். அதற்கு எதிரான பெரும்பான்மை ஜனநாயகத்தின் குரூரமான பக்கங்களை எங்கள் வாழ்பனுபவமாய்க் கொண்டவர்கள் நாங்கள். வரலாறுகள் மறக்கப்படும் போது அந்தத் துன்பியல் மீண்டும் நடந்தேறும். அது புதிய வரலாறாகப் பதியப்படும். சிறுபான்மையை மதிக்கும் ஆரோக்கியமான முறையாக ஜனநாயகத்தை நாங்கள் எதிர்பார்க்கிறோம். உங்களுக்கு அதற்கான கதவை மூடும் நோக்கம் இல்லாவிட்டாலும் அவர்கள் நிச்சயமாக மூடிவிடுவார்கள்.' என்றான் ஹரி.

அங்கே சிறிது நேரம் திடீர் அமைதி நிலவியது. பின்பு குனுத்...

‘அவர்களுக்குக் கொடுக்கப்படும் ஜனநாயக உரிமையைக் கோணல் பார்வையோடு நோக்கமாட்டார்கள் என்று நான் எண்ணுகிறேன்.’ என்றார்.

‘உங்கள் நம்பிக்கை வாழட்டும்.’ என்றான் ஹரி. அவன் வேதனையாகச் சிரித்தான்.

‘ஹரி உங்களால் அவர்களை நம்ப முடியவில்லையா?’ என வினாவினார் குனுத்.

‘காலம்தான் இதற்குப் பதில் சொல்ல வேண்டும். அத்தோடு அவர்கள் ஜனநாயகத்தை மதிக்க வேண்டும் என்று நான் பிரார்த்திக்கிறேன்.’ என்றான் ஹரி.

ஏனோ மௌனமாக இருந்த யாள ஹரியைப் பார்த்துச் சிரித்தான். அதன் அர்த்தம் புரியாது ஹரி தவித்தான்.

சிறிது நேரத்தில் அங்கிருந்து விடை பெற்று வெளியே வந்த போது வெளியே காற்றுப் பலமாக வீசியது. குளிர் மேனியின் திறந்த பகுதிகளை அரத்தாளாய்த் தேய்த்துச் சென்றது. ஹரி அவசரமாகக் காரை இயக்கிக் கீற்ரரைத் திறந்துவிட்டான். திரு பொறுக்க முடியாதவனாய்,

‘என்ன ஹரி இப்பிடிச் சொல்லுறாங்கள்? அவங்களிட்ட வானொலி போனா… அதுக்கு பிறகு நாங்கள் அங்க கால் வைக்கவே முடியாது.’

‘ம்… சில நேரங்களில வரலாற்றுப் பிழைகள் இப்பிடித்தான் வரும். அப்படி வருகின்ற வரலாற்றுப் பிழைகள் மனித சமுதாயத்திற்கு எது சரி எது பிழை எண்டுறதைக் கற்றுத்தரும். வரலாற்றின் பதிவுகளில் குரூரங்கள் விடுபட்டால், அதன் வேதனை கண்ணீராலும் இரத்தத்தாலும் எழுதப்படாது விடுபட்டால், மனிதத்தின் மதிப்பு என்னவென்பது தெரியாமல் போய்விடும் அல்லவா? அப்படித்தான் இதுவும்.’ என்றான் ஹரி.

‘எவ்வளவு கஸ்ரப்பட்டு எடுத்து நடத்தினதை… ச்…’ என்றான் திரு.

‘என்ன செய்யிறது? நாங்கள் காட்டிலையா இருக்கிறம். அதைவிடக் கொடுமையான மனித மிருகங்களோடு நாட்டில் வாழ்றம். அவர்கள் மூளைகள் விசித்திரமானவை. அவர்களிடம் சட்டம் உண்டு. அவர்களிடம் ஜனநாயகம் என்கின்ற பெரும்பான்மையின் அதிகார மேலாண்மை உண்டு. என்ன செய்ய முடியும் சொல்லும்?’

‘ஒண்டும் செய்ய முடியாதா?’ என்றான் திரு பரிதாபமாக.

‘சனிக்கிழமை கூட்டத்தைக் கூட்டுவம்.’

‘சனிக்கிழமை வானொலியைக் குடுக்கச் சொல்லுறியள்?’

‘அது அப்பிடித்தான் அமையும் எண்டா நாங்கள் என்ன செய்யமுடியும்? ஏற்றுக் கொள்வதே பண்பு. எல்லாம் நன்மைக்கே என்பதாகச் சமாதானம் அடைவோம். பாறாங்கல் என்பது தெரிந்த பின்பும் தலையை அதில் மோதுவது ஒன்றும் புத்திசாலித்தனம் இல்லையே?’

‘இல்லை. இழப்புக்கள் இரணம்தான். என்றாலும் ஏற்பதைத் தவிர வேறு வழி இல்லை. என்ர செல்லக் குழந்தையாக எண்ணிய வானொலி… அதை இளக்கும் நிலை வரும் என்று நான் கனவிலும் நினைக்கேல்லை. இப்ப பைத்தியம் பிடிக்குது.’ என்றான் திரு.

‘இதை உன்ர சொந்த விசயமாக எடுத்துக் கவலைப்படாத. உனக்கு வாழ்க்கையில் இன்னும் ஆயிரம் பிரச்சனைகள் வரும். அதையெல்லாம் சமாளிக்க சக்தி வேணும். எதுக்காக எங்கட கையைவிட்டுப் போகிற பிரச்சனைக்காக நாங்கள் அதீத சக்தியை விரயம் செய்ய வேணும்?’ என்றான் ஹரி.

‘சரி அப்ப சனிக்கிழமை பின்னேரம் நடத்தப்படும் கூட்டம் பற்றியும், புதிய நிர்வாகத் தெரிவு பற்றியும் அறிவிச்சு விடுவம்.’

‘அதுதான் சரி. எல்லாரையும் வரச் சொல்ல வேணும். இயலுமானவரை போராடிப் பார்ப்போம். அதுக்கு மேல நாங்கள் எதுவும் செய்ய முடியாது.’

‘நீங்கள் சொல்லுகிறது சரி. இயலுமானவரை நானும் ஆட்களை வரச்சொல்லிக் கேட்டுப் பார்க்கிறன்.’

‘நானும் தெரிஞ்சவையக் கேட்டுப் பார்க்கிறன்.’ என்றான் ஹரி.

## அத்தியாயம் 16 மர்மம்

அன்று ஹரி வேலையால் வந்து சாப்பிட்ட பின்பு படம் பார்க்க எண்ணினான். அதற்காகப் பூமணியும் சோபாவில் வந்து அவனோடு அமர்ந்தாள். ஹரி இராவணன் பட டீவீடியை டீவீடிப்பிளையர்க்குள் திணித்தான். அப்போது அலைபேசி சிணுங்கியது. யாராய் இருக்குமெனப் பார்த்தான். அது ராமுவின் எண்களைக் காட்டியது. என்னவாக இருக்கும் என்கின்ற யோசனையோடு அதைக் ஹரி எடுத்து,

‘கலோ… என்ன ராமு? என்ன விசயம்?’ என்றான்.

‘உங்களுக்குத் தெரியுமே? குகனை அரஸ்ட் பண்ணிப் போட்டாங்களாம்.’ என்றான் ராமு.

‘எப்ப?’

‘இண்டைக்குப் பின்னேரம் தான். இரண்டு மணிபோல அரஸ்ட் செய்தவங்களாம்.’

‘அது எல்லாரும் அவனுக்கு எதிராக் கையைக் காட்டினா அரஸ்ட் செய்வாங்கள்தானே. இனி விசாரிச்சு என்ன முடிவுக்கு வாராங்களோ தெரியாது. இவங்கள் விசாரிச்சுப் போட்டு இரண்டு நாளில விடுவாங்கள் ராமு.’ என்றான் ஹரி.

‘ஓ வேற என்ன செய்யப் போகினம்? சரி அப்ப நான் வைக்கிறன் அண்ண.’ என்று கூறிய ராமு போனை வைத்து விட்டான்.

ஹரிக்கு அலுப்படித்தது. அவன் இராவணன் படத்தைப் பார்க்கத் தொடங்கினான். பழைய இராமாயணத்தை புதிய இராமாயணமாக்கும் மணிரத்தினத்தின் கதையது. எங்கள் நாட்டில் ஒரு புதிய இராமாயணம் நடந்து முடிந்தது. ராமன் இல்லாத இராமாயணம். ஆரிய வம்சத்தினரும் ஒற்றைத்தலை இராவணரும் மோதிக் கொண்டனர். இலங்கை இராவண தேசம். தமிழர்கள் இராவண வம்சமா தெரியாது. சிங்களவர் வட இந்திய ஆரியர்கள். ஆரியராய் இருந்தாலும் ஆரிய குணம் கொண்டவர்களா? இன்றும் அவர்களுக்கு வட இந்திய ஆரியர்கள் ஆலோசனை கூறுகின்றனர். ஓ தென்னிந்தியர் குரங்குக் கூட்டமல்லவோ? இம்முறை உகூ உகூ என்று கடலுக்கு அப்பால் நின்று சத்தமிட்டனர். பல வேளை பட்சணத்திலும், காட்சிகளிலும் புலனைச் செலுத்தினர். பல வேளை சத்தமிடக்கூட மறந்து போயினர். குட்டி செத்த பின்னும் காவும் இனம் கோடம்பாக்கம் என்னும் கனவில் தொலைந்து போயிற்று. எத்தனை வளர்ச்சி வந்தாலும் தாங்கள் குரங்குகள் என்று மீண்டும் நிரூபித்தனர்.

இராவணர்களும், ஆரியர்களும் எல்லா வம்சத்தையும் இரக்கமின்றி அழித்தார்கள். மக்களை நடுவில் வைத்து வீரமாக மோதினார்கள். புதிய இராவணர்கள் வில்லை இழந்து நின்றார்கள். அப்போது மீசையுள்ள ஆரியன் இன்றுபோய் நாளைவா என்று மன்னிப்புக் கொடுக்கவில்லை. மனுநீதி பார்க்கவில்லை. அரக்க குணத்தோடு இத்தோடு ஒளிந்து போங்கள் எனப் புதுவேதம் ஓதி நின்றான். கொலையான தமிழர்களின் குருதியாறு நந்திக்கடலில் கலந்திற்று. உயிரோடு பிடிபட்டவர் பலர் நரமாமிசமாகினர். ஆரியர்கள் மாமிசம் உண்டு சோம பானம் அருந்தும் இனத்தவர். உண்டார்கள். அருந்தினார்கள். வென்றதாக மார்பு தட்டினார்கள். எஞ்சிய சுவடுகளையும் இரகசியமாக அழித்தனர். அழிக்கப்பட்ட இடங்களில் போகத்தைத் துறந்த போதிதர்மனின் பௌத்த விகாரைகள் வெறியோடு எழலாயிற்று. பிச்சை ஓட்டைத் தனது சொத்தாகக்கொண்ட புத்தனின் பெயரைச் சொல்லும் மனிதமற்ற, பித்தம் பிடித்த இனம் ஒன்று தங்களை இலங்கையில் பௌத்தர்கள் என்கிறது. காவியுடைக்குள் வன்முறையைப் பதுக்கியவர்கள் அதற்குக் காவலாக நிற்கிறார்கள். ஏன் என்கின்ற கேள்வியற்ற ஜனநாயக மறுப்பைத் தமிழர்கள் ஒரு காலத்தில் ஒற்றைத் தலை இராவணர்களுக்குப் பயந்து நியாயப்படுத்தியதற்குப் பதிலாக அவர்களுக்குக் கிடைத்த பரிசு இப்படியாகிற்று. உலக வரலாற்றுப் பாடத்தில் மறக்க முடியாத சில பக்கங்கள் செதுக்கப்படலாகிற்று. இதுதான் ஈழத்தில் நடந்த புதிய இராமாயணம் பற்றிய ஹரியின் புரிதல். அது புரிந்தபோது அவன் மனது வலித்தது.

*

படம் பார்த்து முடியும் போது பொலிஸ் காரொன்று வந்து ஹரியின் வீட்டின் முன்பு நின்றது. அதிலிருந்து இரு அதிகாரிகள் இறங்கி வீட்டிற்கு உள்ளே வந்தார்கள். அவர்கள் இருவரும் ஆறடி உயரத்தில் நோர்வே பொலிசின் சீருடையில்

கம்பீரம்காட்டினர். அவர்கள் வதனத்தில் புன்னகை தவண்டது. எந்த அவசரமும் அவர்களிடம் இல்லை. என்றாலும் எதற்காக வருகிறார்கள் என்பது புரியாது ஹரி தவித்தான்.

அவர்கள் தங்களை 'கென்றிக், ஊலா' வென அறிமுகம் செய்தார்கள். ஹரியும் தன்னை அறிமுகம் செய்தான்.

வீட்டிற்குள்ளே வந்து சோபாவில் அமர்ந்த ஊலா கதைக்கத் தொடங்கினார்.

'நாங்கள் சிவகரனின் கொலையை விசாரிக்கும் அதிகாரிகள். எங்களுக்குத் தமிழ் ஆட்களிடம் இருந்து அதிகமான தகவல் ஒன்றும் கிடைக்கவில்லை. அதற்காகச் சிலரது வீட்டிற்குச் சென்று தகவல் சேகரித்து வருகிறோம். அந்தப் பட்டியலில் உங்கள் பெயரும் அடங்கி இருக்கிறது. உங்களோடு நாங்கள் கதைக்கலாமா?'

'ஓ… தாராளமாய்க் கதைக்கலாம்.'

'இது தகவல் சேகரிப்பு மட்டுமே.'

'எனக்கு விளங்குது. விசாரணையாக இருந்தாலும் பருவாய் இல்லை. நான் தெரிந்ததைச் சொல்லுவேன்.'

பின்பு அவர்கள் ஹரியுடன் நீண்ட நேரமாக்கக் கதைத்தார்கள். புறப்பட்டுச் சென்ற போது அவர்கள் மனத்திருப்தி இல்லாது செல்வது போல அவனுக்குத் தோன்றியது.

மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடுகிறார்களா என்கின்ற கேள்வி ஹரியிடம் எழுந்தது. அவனுக்கு அவர்களை எண்ணிச் சிரிப்பு வந்தது. அவன் தன்னை மறந்து வாய்விட்டுச் சிரித்தான். பூமணி தனிமையில் நின்று சிரிக்கும் ஹரியை விநோதமாகப் பார்த்தாள்.

'உங்களை லுசு எண்டு சொல்லப் போறங்கள்.' என்றாள்.

## அத்தியாயம் 17 வானொலி

வார்டோவில் சில காலங்களுக்கு முன்பு…

சனிக்கிழமை மாலை ஐந்து மணிக்குக் கூட்டம் நடத்துவதாக வார்டோவில் வசிக்கின்ற தமிழருக்கு அறிவிக்கப்பட்டிருந்தது. ஐந்து மணியென்றாலும் அமாவாசை இரவாக இருட்டிவிட்ட கோலத்தில் மின்னொளியை நம்பி இயங்கிய வார்டோ நகரம். காற்றுக்கு அமைதியைத் தாரைவார்த்துக் கொடுத்ததாக நகரமே உச்ச ஸ்தாயில் ஒப்பாரி வைத்தது. இருள் எத்தனை சூரியன் வந்தாலும் நகரமாட்டேன் என்கின்ற வீராப்போடு அவுணனாக அதிகாரம் பண்ணியது. குளிர் குண்டூசி நுழைய முடியாத இடங்களையும் தேடிப்பிடித்து அதன் வழி உள்ளே சென்று, தனது இம்சையைத் தொடர்ந்தது. நவீன தொழில்நுட்பத்தால் கதகதப்பை உற்பத்தி செய்ய முடியாது போனால் மனிதரற்ற

பனிக்காடாக இருந்திருக்கும் பூமியிது. இப்போது மரமான மனதுடைய மனிதர்கள் மட்டும் இருக்கிறார்கள். இங்கு உயிர்வாழ வெப்பம், உடை, உணவு, என்று தேவைகளின் சிகரத்தின் குழம்பிய அடுக்கே பொருத்தமாய் இருக்கும். உள்ளே இன்று மனிதச் சொற்களால் மண்டபம் கொதிக்கும். மின்சாரத்தால் உற்பத்தியாகும் வெப்பத்தோடு மனித வெப்பமும், நாற்றமும் சேர்ந்து அனல் கக்கும். மனிதர்களால் வீசப்படும் நச்சு வார்த்தைகளின் மணம் இப்போதே பரவிவிட்டதான அவஸ்தையில் ஹரி ஒரு கதிரையில் இருந்து நெளிந்தான். நியாயமான கருத்துக்கள் நசிக்கப்படும் போது... அதை வெல்ல முடியாத உணர்வு வந்து கூத்தாடும் போது... எங்கேயாவது தொலைந்து போய்விடுதல் விடுதலையாகிறது. இன்றும் இந்தக் கூட்டத்தில் இருந்து தொலைந்து போய்விட்டால் என்கின்ற எண்ணம் அவனிடம் வலுத்தது.

திரு காதலியைப் பறிகொடுப்பதான கவலையோடு நின்றான். பெரும்பான்மை ஜனநாயகத்தில் தனது கருத்து தோற்கும் என்பது அவனுக்குத் தெரியும். அந்தத் தோல்வி பற்றிய நினைவு அவனைக் கொல்லும் வலியாகியது. தனது செல்லக் குழந்தையான, அன்புக் காதலியான வானொலி கைவிட்டுப் போகும் நாள் வருமென்று அவன் கனவிலும் நினைக்கவில்லை. இன்று அது நேரே வந்து இழப்பு என்னும் கோர முகத்தைக் காட்டியது. என்ன செய்வது என்பது புரியாத கவலை அவன் மனதெல்லாம் நிறைந்து, பின்பு அது முகத்தில் சோகமாக வழிந்தது. தானெடுத்த வானொலி தன்கையைவிட்டு நழுவும் காலம் வந்ததைப் பொறுக்க முடியாது அவன் தவித்தான். நான்குபேர் சொற் கேட்டு அநியாயத்திற்குப் பணிய வேண்டிய கட்டாயம் அவனை உந்தித் தள்ளியது. மொழியை விளங்கிக் கொள்வதால் சிலவேளை அவஸ்தை உண்டாகிறது. கட்டளைகளை ஏற்க வேண்டியது கட்டாயமாகிறது. கவலைக்கு அது காரணமாகிறது.

வானொலியைக் கைப்பற்ற வேண்டும். கைப்பற்றிய பின்பு அது தங்கள் விருப்பிற்கு ஏற்ப நடக்க வேண்டும் என்கின்ற திட்டத்தோடு அவர்கள் அணிசேர்ந்து கும்பல் கும்பலாக வந்தார்கள். மாற்றுக் கருத்தாளர்கள் பலரிடம் அந்த அக்கறை இருக்கவில்லை. தங்கள் உரிமைகள் பறிபோன போதும் அவர்கள் பொங்கியெழவில்லை. ராமன் ஆண்டால் என்ன? இராவணன் ஆண்டால் என்ன? கூடவந்த குற்றத்திற்குக் குரங்கு ஆண்டால் என்ன? என்கின்ற மனப்பான்மையில் வீட்டிற்கு உள்ளே பதுங்கியதாகக் ஹரிக்குத் தோன்றியது. இங்கு உள்ள வால்களோடு மோதுவதால் ஊரில் உள்ள தங்களின் குடும்பம் பாதிக்கப்படலாம் என்கின்ற பயமாகவும் இருக்கலாம் என்பதும் அவனுக்கு விளங்கியது. இதுவே எதிர்கால இலங்கைப் பயணங்களுக்கு இடையூறாக வரலாம் என்பதைத் தவிர்க்கும் தந்திரமாகப் பலருக்குத் தோன்றியிருக்கலாம். பொது நலம் சுயநலத்திற்காய்ப் பலியிடப்படுவது விளங்கியது. ஹரி அதை எண்ணிப் புழுங்கினான்.

இழப்புகள் என்கின்ற பெயரில் கொலைகளை நியாயப்படுத்துவதே எங்கள் போராட்டம். 'நாங்கள் பணத்தையும் கொடுத்து, உழைப்பையும் இயக்கத்துக்கு அர்ப்பணிக்கிறோம். இவர்கள் எதிர்த்துக் கதைப்பதோடு, பணமும் தர மறுக்கிறார்கள்.' என்கின்ற இந்த யதார்த்தத்தை அவர்களால் தாங்க முடியவில்லை என்பதைத் திருவால் உணரமுடிந்தது. என்றாலும் இலக்கு இல்லாத பயணத்திற்கு... உலகைப் புரிந்து கொள்ளாத வழிகாட்டலுக்கு... விளைவைப் புரிந்து கொள்ளாத செயல்களுக்கு... கண்ணை மூடிக்கொண்டு உதவி செய்வதும் வரலாற்றுத் தப்பு அல்லவா? அதை நான் ஏன் செய்ய வேண்டுமென அவன் மனது அதற்கு எதிராக வாதிட்டது.
கோலிற்குள் ஆட்கள் அதிகரிக்க அதிகரிக்கத் திருவுக்கும், ஹரிக்கும் கவலையாகிற்று. கூட்டத்திற்கு வராமல் விடுவது என்பது இந்தப் பிரச்சனைக்கு ஒரு தீர்வாகமாட்டாது. பூச்சியங்கள் தனியே பெறுமானத்தைக் கொண்டுவர முடியாது. அதைத்தான் இன்று பலர் தீர்வாக்கினர். அவர்கள் தங்கள் உரிமைகள் பறிபோவது பற்றிக் கவலைப்படாமல் இருப்பது ஹரிக்கு வேதனையைத் தந்தது. அதே வேளை எதிரானவர்களுக்கு அது சந்தோஷமாகிற்று. தங்கள் கையில் அதிகாரம் வருவது நிச்சயமாகிவிட்ட களிப்பில் அவர்கள் குதுகலித்தனர்.

குசுகுசுப்புக்களாகத் தொடங்கிய விவாதங்கள் கொதி நிலை காணுமளவிற்குச் சூடுபிடித்தன. அது ஒரு சிலரின் குரலை உச்சத்திற்கு உயர்த்திற்று.
'ஐந்து சதமும் உதவி செய்யாமல் இயக்கத்தைப் பற்றியும், எங்கட தலைவரைப் பற்றியும் குறை சொல்லிக்கொண்டு இருக்கினம். இவங்களை எல்லாம் எப்பிடித் தமிழரெண்டு சொல்லுகிறது? ஆர்குத்தினாலும் அரிசியாகோணும் எண்டுற மனப்பான்மையே இல்லாதவங்கள். இப்பிடியானவங்களை மண்டையில போடுறதில என்ன தப்பு?' இவ்வாறாக மூர்த்தி கத்தினான்.

'இவர்கள் பணத்தால் விடுதலை வாங்கப்படுமென எண்ணுகிறார்களா? அல்லது எதற்கும் கொலைதான் பதில் என்று எண்ணுகிறார்களா?' என்பதாக நினைத்த ஹரி, இது போதும் என்பது போலத் திருவைப் பார்த்தான். திரு மெதுவாக முன்னுக்கு இருந்த மேசைக்குச் செல்ல, கணேஸ், ஞானப்பிரகாசம், சுமன் ஆகியோர் துணையாக எழுந்து அவனோடு சென்று முன்னுக்கு இருந்த கதிரைகளில் அமர்ந்தனர். திருவை அடுத்துக் ஹரியும் போய்த் திருவோடு அமர்ந்தான். சிறிது நேரத்தில் திரு தன்னைத் தயார் செய்தவனாய்,
'எல்லாரும் அமைதியாக இருந்தியள் எண்டாத்தான் பின்னுக்கு இருக்கிறவைக்கும் நாங்கள் என்ன சொல்லுறம் எண்டு கேட்கும்.' எனக்கூறி நிறுத்தினான். சூ... சூ... என்கின்ற சத்தத்தோடு அமைதி அங்கு வலோக்காரமாக இழுத்துவரப்பட்டது.

'நாங்கள் எல்லாரும் இங்கே எதற்குக் கூடியிருக்கிறம் எண்டது உங்களுக்கு மிகத் தெளிவாகத் தெரியும் எண்டு நினைக்கிறன். இருந்தாலும் அதை முறைப்படி கூறி இந்தக் கூட்டத்தை ஆரம்பித்து வைக்க வேண்டியது என்னுடைய பொறுப்பு. நான் வந்த தொடக்கத்தில ஒரு பொழுது போக்காக இருக்கிறதோட, தமிழில ஏதாவது செய்யிறதா இருக்கக்கூடிய ஒரு விடயமாத்தான் இந்த வானொலியை ஆரம்பித்தேன். அதுக்குத் துணையாகப் பிறகு நிறைய ஆட்கள் உதவி செய்தார்கள். அதிகமாகவே ஒத்துழைப்புத் தந்தார்கள். குறிப்பாகக் ஹரி, கணேஸ், மாலதி, சுமன் என இன்னும் பலபேரின் உழைப்பில இண்டைக்கு வார்டோவிலையும், நோர்வேயின்ர மற்றப் பாகங்களிலேயும் எங்களுடைய வானொலிக்கு இரசிகர்கள் இருக்கிறார்கள். அதோட வேற சில இடங்களில இருக்கிற தமிழ் வானொலிகள் எங்களுடைய சில நிகழ்ச்சிகளைக் கடனாகப் பெற்று மறு ஒலிபரப்புச் செய்து வருகிறார்கள்.

இந்த வானொலி எந்த அரசியல் கலப்பும் இல்லாமல் எங்களால் நடத்தப்பட்டது. அது எவ்வளவு பயனுள்ள தகவல்களை இங்கு வசிக்கும் தமிழருக்குக் கொடுக்க முடியுமோ அவ்வளவு தகவல்களையும் அள்ளித் தந்தது. அத்தோடு தமிழ்க் கவிதைகள், நல்ல பாட்டுக்கள், நாடகங்கள், பயனுள்ள கட்டுரைகளென யாரையும் நோகடிக்காத ஒரு வானொலியாக நடத்தப்பட்டது. எந்த அரசியல் கலப்பும் இருக்கக்கூடாது என்பதை மனதில் வாங்கி நாங்கள் கவனமாக செயற்பட்டோம். இப்பொழுது வார்டோவில் நிலமை மாறிவிட்டது. அதிகமான ஆட்கள் வந்து விட்டார்கள். அவர்களோடு பல வித்தியாசமான கருத்துக்களும் வந்திருக்கின்றன. எல்லாக் கருத்துக்களுக்கும் இடம் இருக்க வேண்டும் என்பதுதான் பலரது விருப்பமும். அது எல்லோராலும் மதிக்கப்பட வேண்டும். மற்றவர்களின் கருத்தை மதிக்கும் தன்மை எங்களில் சிலருக்கு இருப்பதில்லை. அதையே தங்களுடைய சொந்த விசயமாக எடுத்துக் கொள்ளும் எதிர்மாறான நடத்தையைக் காணமுடியும். அப்பிடியான சிலரால் தேவையில்லாத பகையும் வெறுப்பும் ஒட்டுமொத்தத் தமிழருக்குள்ளும் ஏற்படாமல் இருப்பதற்கே நாங்கள் அரசியலையும் வானொலியையும் கவனமாகப் பிரித்து வைத்திருந்தோம். இப்பொழுது அப்பிடி நடுநிலையாக இருக்க முடியாத அளவுக்கு எங்கள் மேல் அழுத்தங்கள் கூடியிருக்கின்றன. அதை எங்களால் மனரீதியாகவும், உடல்ரீதியாகவும் உணர முடிகிறது.'

சிலரிடம் சிறு நகை தோன்றி மறைந்தது. திரு தொடர்ந்தான்.

'என்னைப் பொறுத்தவரை இங்கு பலவிதமான கருத்துக்களைக் கொண்டவர்களும் இருப்பதால் நாங்கள் இப்பொழுது நடத்திவருவது போல அரசியற் கலப்பில்லாமல் தொடர்ந்தும் வானொலியை நடத்துவதுதான் பொருத்தமாக இருக்கும். சரி அதை

இனித் தெரிவு செய்யப்படும் நிர்வாகம் முடிவு செய்யட்டும். இப்பொழுது முதலில் நிர்வாகத்தைத் தெரிவு செய்ய வேண்டும்.' என்றான் திரு.

குகன் எழுந்தான். 'நீங்கள் கதைக்கிறதைக் கதைச்சிட்டியள். நாங்களும் கதைக்க வேணும்.' என்றான்.

'நான் ஒரு அறிமுகம்தான் கொடுத்தேன். இங்கு எல்லோரும் கதைப்பதற்கு நேரம் இல்லை. நிர்வாகத்தைத் தெரிவு செய்யலாம். பின்பு அவர்கள் வானொலியை எப்படி நடத்த விரும்புகிறார்களோ அப்படி நடத்தட்டும். எல்லோரும் இப்போது கருத்துச் சொன்னால் நேரம்தான் வீணாகும். ஒரு முடிவுக்கு இலகுவில் வந்துவிட முடியாது.' என்றான் திரு.

'அப்பிடியில்ல. நாங்களும் வானொலியில் ஏன் அரசியல் கதைக்கோணும் எண்டதைப் பற்றி நிர்வாகம் தெரிவு செய்யிறதுக்கு முதல்ல விளக்கம் கொடுக்க வேணும். அப்பதான் எங்கடபக்க நியாயம் சனத்துக்கு விளங்கும். எத்தினையோ அநியாயம் நாட்டில நடக்குது. எல்லாத்தையும் அரசாங்கம் மூடிமறைக்குது. அவங்கட ஊடகங்கள் தமிழருக்கு எதிரா உலகெல்லாம் பிரச்சாரம் செய்யுது. அப்படி கதையிருக்க, தமிழரா இருந்தும் அங்க நடக்கிற இருட்டடிப்பை நாங்கள் வெளி உலகுக்குக் கொண்டுவராததை எண்ணி வெட்கப்படவேணும். அவமானப்படவேணும். அதுகின்ர நியாயத்தைக் கதைக்க இப்ப எனக்கு நேரம் வேணும்.' என்றான் குகன்.

திரு இப்போது பதில் அழிக்காமல் ஹரியைப் பார்த்தான். ஹரி அதைப்புரிந்து கொண்டு, 'திரு ஒரு சிறிய அறிமுகம்தான் தந்தவர். இல்லை அது அறிமுகத்தைவிட அதிகம் எண்டு நினைச்சா உங்களில ஒராள் வந்து சுருக்கமாகக் கதையிங்கோ. நிர்வாகத்தைத் தெரிவு செய்த பிறகு, அவர்கள் ஆழமாக இதைப்பற்றிக் கதைக்கட்டும். யார் இப்ப கதைக்கிறியள்?'

'குகன் கதைக்கட்டும்.' எனப் பல குரல்கள் அவனுக்கு ஆதரவாக ஒலித்தன. அவன் அதில் பெருமிதம் அடைந்தான். அவனுக்கான ஆதரவும், அவன் பெருமிதமும் வன்முறையின்பால் பற்றுக் கொண்டதால் ஹரியின் மனது இரணமானது.

குகன் பேசத் தொடங்கினான்.

'வார்டோவுக்கு வந்தது தொடக்கம் நான் ஒருவித அதிர்ச்சியில் இங்கு நிம்மதி இல்லாது அலைகிறேன். ஒரு பகுதி சனம் மாத்திரம் எங்களுடைய விடுதலைப் போராட்டத்தை ஆதரிக்க, மற்றொரு பகுதி சனம் கடுமையாக அதற்கு எதிர்ப்பைக் காட்டிக்கொண்டு, விதண்டாவாதம் பேசுகிறார்கள். போராட்டம் என்றால் பிழைகள், இழப்புக்கள் இல்லாமல் நடைபெறமுடியுமா? இழப்புகள் அற்ற போராட்டம் சாத்தியம் இல்லை என்பது எல்லோருக்கும் தெரியும். தெரிந்தும் விதண்டாவாதம் செய்கிறார்கள். எமது போராளிகள் மறவர்களாய் அங்கு செய்யும் தியாகத்துக்கு இம்மிய அளவுகூட மரியாதை செலுத்தாமல், அவர்களை விமர்சிப்பதையும், அவர்களுக்கு எதிராகக்

கதைப்பதையும் வாடிக்கையாக்கிய சனத்தைக் காணும் போது எனக்கு அதிசயமாகவும், அந்தரமாகவும், கோபமாகவும் இருக்கிறது. இப்பிடியும் தமிழர்கள் இருக்க முடியுமா? சொந்த இனம் கொலைசெய்யப்படும் போது சகோதரப் பிரச்சனைகளைப் பெரிது பண்ணிக்கொண்டு சொந்த இனத்திற்கு எதிராகச் செயற்பட மனம் வருமா? எதிரி தன்னிடம் இருக்கிற அனைத்து அமைப்புக்களையும் பிரயோகித்து எங்கள் போராட்டத்திற்கு எதிராகக் கரி பூசும் போது, நாங்கள் நடத்தும் வானொலிக்குள் அரசியல் புகுந்து விடக்கூடாது என்பதாய் மௌனம் சாதிப்பது எங்கள் இனத்திற்குச் செய்கின்ற துரோகம் ஆகாதா? நாங்கள் செய்யும் ஒவ்வொரு காரியமும் எங்கள் விடுதலைக்காகப் பயன்பட வேண்டும். இங்கு இருக்கும் ஒரு சிலருக்கு இயக்கத்தோடு தனிப்பட்ட பகை உண்டு. அதற்காக எங்கள் இனத்தின் ஒட்டுமொத்த விடுதலைக்காகப் பாடுபடுபவர்களுக்கு குரல் கொடுக்காமல் இருக்க முடியாது. இருக்கக் கூடாது. அதை நாங்கள் ஒரு போதும் அனுமதிக்க முடியாது. இந்த வானொலியில் நாங்கள் எங்கள் போராட்டத்தின் நியாயத்தை எடுத்துச் சொல்ல வேண்டும். அதற்காக உறுதியாகப் போராடும் இயக்கத்தை ஆதரிக்க வேண்டும். அதன் அளப்பரிய தியாகங்கள் மதிக்கப்பட வேண்டும். அதை உறுதி செய்யக் கூடிய ஒரு நிர்வாகத்தை நாங்கள் இன்று தெரிவு செய்வோம். வானொலி என்பது திருவின் சொந்தச் சொத்து இல்லை. அது எல்லோருக்குமான ஒரு பொதுவான ஊடகம். அதில் எங்கள் இனத்தின் அவலம் கதைக்கப்படாமல் இருட்டடிப்பு செய்யப்பட்டால், அது இருந்து என்ன இலாபம்? எங்கள் விடுதலையை நாங்களே ஆதரிக்கவில்லை என்றால் வேறு யார் அதை ஆதரிப்பார்கள்? எங்கள் மறவரின் வீரத்திற்கு, தியாகத்திற்கு நாங்களே மதிப்பளிக்கவில்லை என்றால் வேறு யார் மதிப்பளிப்பார்கள்? இன்றுவரை இருந்து வந்த நிலை வேறாக இருக்கலாம். இனி நாங்கள் இயலுமானவரை உதவி செய்யவேண்டும். அதற்காக எதையும் நாங்கள் உபயோகப்படுத்தத் தயங்கக் கூடாது. அதற்கு இந்த வானொலி மிகவும் நல்ல உதாரணம். அதன் மூலம் எங்களால் இயன்றதை எங்கள் தாய் நாட்டிற்காய்ச் செய்தாக வேண்டும். அப்படியான நிர்வாகம் ஒன்றை இங்கு இன்று தெரிவு செய்யவேண்டும். நிச்சயம் தெரிவு செய்வோம் என்று கூறி விடை பெறுகிறேன்.'

கர கோசம் கோலைப் பிளந்தது பின்பு வானைப் பிளந்தது. அந்த இரைச்சல் அடங்க முதல் சங்கர் எழுந்தான். 'நான் குகனை நிர்வாகத்தின் தலைவராகத் தெரிவு செய்கிறேன். அவரைப் போன்றவர்களின் உழைப்பால் எங்கள் இனம் விடுதலை அடையும்.' என்றான்.

'சரி. இப்பிடியே ஒவ்வொருத்தரும் கருத்துச் சொல்லப் போனால் விடிஞ்சாலும் வீட்டிற்குப் போக முடியாது. நிர்வாகத்தில் இருக்க விருப்பமானவர்கள் எழுந்து நிற்கட்டும். அவர்களின் பெயர்களை எழுதி எடுத்துக் கொள்ளுங்கள். பின்பு வாக்களிப்புச்

செய்ய விடுவோம். அதில் வெல்லுபவர்கள் நிர்வாகப் பொறுப்பை ஏற்கட்டும்.' என்றான் ஹரி.

'நாலுபேர் இன்னும் நாலு கருத்தை அடிச்சுச் சென்னாத்தானே அதிக பெரும்பான்மையோட வெல்லலாம். அதுக்கு கதைக்க விடவேணும். அதுதான் முறை.' என்றான் சங்கர்.

'இப்பவே இறுதிப் பெரும்பான்மை எங்களுக்குத்தான் எண்டுறது உறுதி. நீங்கள் பயப்பிடாமல் தயிரியமாக இருங்கோ சங்கர்.' என்றான் வன்னியசிங்கம் என்பவன். இதற்கிடையில் சனங்கள் தங்களுக்குள் கதைக்கத் தொடங்கியதில் அங்கு குட்டிச் சந்தையே உருவாகியது. திரு ஏதோ சொல்ல முயல 'கொஞ்ச நேரம் கதைக்கட்டும். பிறகு நிப்பாட்டிப் பட்டியல் தயாரிப்பம்.' என அவனைக் ஹரி தடுத்தான்.

பின்பு ஹரி ஏதோ யோசித்தவனாய் 'பட்டியல் போடப் பேப்பர் வேணும். கணேஸ் ஓடிப்போய் ஓபீசில பேப்பர் எடுத்து வாரும்?' என்றான்.

'ஓ அதுக்கென்ன நான் போய் எடுத்தாறன்.' என்று கூறியவன் திருவைப் பார்த்து 'திறப்பைத் தாறியளே?' எனக் கேட்டுத் திறப்பை வாங்கிக்கொண்டு வேகமாக அலுவலகத்தை நோக்கிச் சென்றான்.

'இஞ்ச எட்டப்பர் கூட்டம்தான் நிறைய இருக்குது போல?' எனப் பலத்துச் சங்கர் வன்னியசிங்கத்திடம் கூறியது ஹரிக்கும் தெளிவாகக் கேட்டது. எட்டிப் போய்ச் சட்டையைப் பிடிக்க வேண்டும் எனக் ஹரிக்கு முதலில் கோபம் வந்தாலும் அது தன் இயல்பு இல்லை என்பதாக அவன் அதை அடக்கிய வண்ணம் பேசாது இருந்தான். திருவும் ஹரியைப் பார்த்து மௌனமானான். சுமன் அடக்க முடியாதவனாய்,

'என்ன அண்ண வந்து நாலு நாள் ஆகேல்ல எட்டப்பன் கட்டப்பொம்மன் எண்டு எதுகை மோனை கதைக்கிறான்?' என்றான்.

'பானையில உள்ளதுதானே அகப்பையில வரும். நாங்கள் அதுக்கு என்ன செய்யமுடியம்? அவன் தனக்குத் தெரிஞ்ச தமிழ் கதைக்கிறான். கதைக்கட்டும்.' என்றான் ஹரி.

'இல்லையண்ண இதை முளையிலேயே கிள்ளவேணும். அப்பதான் சரியா இருக்கும். இவங்கள் பிழைப்புத் தேடி ஒடி வந்த ஒரு வகையான சுயநலக் கூட்டம். எங்களைப் பார்த்து கதைக்க என்ன அருகதை இருக்குது இவைக்கு? சொல்லுங்கோ பாப்பம்? அப்பிடி அவை கதைக்கவும் நாங்கள் பொறுமை காத்தா எங்களைக் பொன்னையங்கள் எண்டு நினைப்பாங்கள்.'

'அதுக்காக நாய் கடிச்சா நாங்களும் விழுந்து கடிக்கிறதே? ம்... நாங்கள்தான் யாரோட என்ன கதைக்கிறம் எண்டதைப் விளங்கிக் கதைக்கோணும்.' என்றான் ஹரி.

'நீங்கள் இதையே சொல்லி எங்களை மடக்கிப் போடுங்கோ.' என்றான் சுமன்.

'அப்பிடி இல்ல. அடிபடுகிறது ஐஞ்சு நிமிஷ வேலை. மரியாதை போனாப் பிறகு அது திரும்பி வராது. அப்பிடி நடக்காமல் கூடியமட்டும் பார்க்கவேணும். நொஸ்குகளைப் பார்த்தியே? கத்துவாங்கள். கூத்தாடுவாங்கள். கண்டதையும் போட்டு உடைப்பாங்கள். ஆனா ஆள்மேல கை வைக்கமாட்டாங்கள். அதுதான் முக்கியம். மனிசருக்கும் விலங்கிற்குமான வித்தியாசம் அங்கதான் இருக்குதெண்டு நான் நினைக்கிறன். என்னோட திரியிற நீங்கள் அடிபடப் போறதே? நான் அதைப் பொறுப்பனே?' என்றான் ஹரி.

'ம் சரி நாய் கத்திப்போட்டு இருக்கட்டும்.' என்றான் சுமன்.

'அதுதான் நல்லது. நாங்கள் பேசாமல் எங்கட அலுவலைப் பாப்பம்.' என்றான் ஹரி. இதற்கிடையில் பேப்பர் எடுத்துவரப் போன கணேஸ் வந்துவிடவும் திருவைக் ஹரி அர்த்தத்தோடு பார்த்தான். அதை உணர்ந்த திரு எழுந்தான். பின்பு கையைப் பலமாக தட்டிக் கலோ என்ற போது சத்தம் மெதுவாக அடங்கத் தொடங்கியது.

'சரி இப்ப யார் யார் நிர்வாகத்திற்கு வர விரும்பிறியளோ அவர்கள் எழும்பி நில்லுங்கோ.' என்றான். பின்பு கணேசைப் பார்த்து,

'நீ போய் அவையின்ர பெயரை எழுதியா.' என்றான். கணேஸ் பேப்பரோடும் பேனாவோடும் கீழே சென்றான்.

அவர்களில் எந்தத் தயக்கமும் இருக்கவில்லை. ஏற்கனவே பேசிப்பறைந்து வந்தது போல ஐந்து ஆட்கள் எழுந்து நின்றார்கள்.

பின்பு ஹரியும் தங்களில் ஐந்து நபர்களை ஏற்கனவே கதைத்து வைத்தது போல எழுதினான். கணேஸ் அந்தப் பெயர்களை அகர வரிசைப்படி ஒழுங்குபடுத்தி எழுதினான். அதைப் பிரதி எடுப்பதற்கு மீண்டும் அவன் அலுவலகத்தை நோக்கி ஓடினான். வாக்கெடுப்பு விளங்கப்படுத்தியது போன்று நடைபெற்றது. பின்பு சபையில் இருந்து எதேர்ச்சியாகத் தெரிவு செய்யப்பட்ட நான்கு பேர் அதை எண்ணினார்கள். அதைத் தொடர்ந்து அதி கூடிய வாக்குகள் பெற்றவர்களை வரிசையாக்கி எழுதினார்கள். முடிவில் ஹரியின் அணி படுதோல்வியைத் தழுவிக்கொண்டது முடிவாகிற்று. அதைக் கவலையோடு திரு அறிவித்தான். சந்தோஷத்தில் எதிரானவர்கள் கூக்காட்டினார்கள். எழுந்து கூத்தாடினார்கள். ஹரி இந்த முடிவை எதிர்பார்த்தான்.

முதலாவதாக அவர்கள் அணிதிரண்டு வந்தனர். இரண்டாவதாக இவர்களுக்கு ஆதரவு தருவோரும் அதன் முக்கியத்துவத்தை உணராது அன்று வரவில்லை. இரண்டும் சேர்ந்து இவர்களைப் படுதோல்வி என்னும் பாதாளத்தில் தள்ளிவிட்டது. சிலகணங்கள் இவர்களுக்குத் திகைப்பாகிற்று. பின்பு திரு தன்னைச் சமாளித்த வண்ணம் மீண்டும் கைதட்டிக், கலோ சொல்லிப் பேசினான்.

‘இன்றைய தேர்தலின் முடிவை நாங்கள் எல்லோரும் ஏற்று அதை நடைமுறைப் படுத்துவதில் அக்கறையாக இருக்கிறோம். வருகின்ற கிழமை வானொலியின் அனைத்துப் பொறுப்புக்களையும் நாங்கள் கையளிப்பதற்குத் தயாராக உள்ளோம். நீங்கள் உங்களுக்கு எப்பொழுது வசதியாக உள்ளதோ அதைப் பொறுத்து எங்களிடம் தொடர்பு கொள்ளலாம். வேறு இதில் அதிகமாக நான் சொல்வதற்கு ஒன்றும் இல்லை. வெற்றி பெற்றவர்களுக்கு எனது மனமார்ந்த வாழ்த்துக்கள்.’ என்றான்.

‘ஏன் அந்தத் திறப்பை இப்ப குடுக்கேலாதே?’ என்று சங்கர் கேட்டான்.

‘அடி செருப்பால…’ சத்தமாகக் கத்திக்கொண்டு பல்லைக் கடித்த வண்ணம் இதுவரையும் பொறுமையாக இருந்த சுமன் துள்ளி எழுந்தான்.

ஹரி அவனை எட்டி இறுக்கிப் பிடித்தான்.

‘சுமன் கடைசி நேரத்தில குழப்பிறேல்ல.’ என்றான் கடுமையாக.

‘நானே அண்ண குழப்பிறன். அவங்கள் எல்லே திமிர் காட்டுறாங்கள்.’ என்றான் சுமன்.

‘ஏய் என்ன பெரிசாச் சத்தம் போட்டா நாங்கள் பயந்து ஓடிடுவமே? ஏலுமெண்டா வாடா பாப்பம். சும்மா நெஞ்ச நிமிர்த்தினாச் சரியே? இஞ்ச எவ்வளவுபேர் இருக்கிறம் தெரியுமே? இயக்கத்துக்குப் போட்டு வந்திட்டா உங்களுக்கு எல்லாம் கொம்பு முளைச்சதா நினைப்பே? நீங்கள் எல்லாம் இயக்கத்துக்குப் போய் என்ன கிளிச்சியள்? சோத்துப் பார்சல் சேர்த்தியளாக்கும்? சேர்த்த சோத்தைத் திண்டியளாக்கும். அங்க உயிரோட போய் குதிக்கிறாங்கள். அவங்கள் வீரன்கள். இவையும் இவையின்ர இயக்கங்களும்…’ என்றான் சங்கர்.

‘விடுங்கண்ண அந்த நாய்க்கு…’ என்று சுமன் மீண்டும் திமிறினான்.

ஹரி அவனை இன்னும் அதிகமாக இறுக்கிப் பிடித்தான். தமிழர்கள் வன்முறையாளர்கள் என்பதான எண்ணம் நோர்வே மக்களிடம் வருவதை ஒருபோதும் அவன் விரும்பவில்லை. விரும்பியோ விரும்பாமலோ சிலவேளை அவர்கள் காட்டிக் கொடுத்துவிடுகிறார்கள் என்பதாய் அவனுக்குத் தோன்றியது.

திரு வென்றவர்களை அழைத்தான். அவர்கள் வர ‘நீங்கள் என்ன நினைக்கிறியள்? இப்பவே திறப்புத் தரவேணுமா?’ என்றான்.

‘தாறதில ஏதும் பிரச்சனையா?’ என்று அவர்களிடம் இருந்து கேள்வி வந்தது.

‘பெரிசா ஒண்டும் இல்ல. எங்கட பொருட்கள், உடுப்புகள் ஒபீசில இருக்குது. அதையெல்லாம் வந்து இப்ப எடுக்கோணும்.’

‘அதுக்கென்ன நாங்கள் வெயிற் பண்ணுறம். நீங்கள் எடுத்த பிறகு திறப்பைத் தாங்க.’ என்றனர். திருவுக்குத் துளி கருணையும் காட்டப்படவில்லை.

அதன் பின்பு எல்லோரும் கலைந்து போக மண்டபக் கதவைப் பூட்டிவிட்டு வெளியே வந்த போது சங்கர் இவர்களைப் பார்த்து விசிலடித்தான். சுமன் பாய்ந்து சென்று அவனை ஒரே மூச்சாக நெஞ்சில் கைவைத்துத் தள்ளிவிட்டான். இதை எதிர்பாராத சங்கர் நிலத்தில் பிடரி அடிபட விழுந்தான்.

'நாய் மண்டை கலங்கிச் சாகவேணும்.' என்றான் சுமன் கோபமாக.

பின்பு சங்கர் எழுந்திருந்து 'ஐயோ, ஐயோ' என்று கத்தினான். யாரோ இருவர் அங்கு வருவது தெரிந்தது. ஹரி சுமனைப் பிடித்து இழுத்துக்கொண்டு காருக்குச் சென்றான். மற்றவர்கள் தங்களது பொருட்களை எடுப்பதற்கு அலுவலகத்திற்குச் சென்றனர்.

'றேடியோ ஸ்ரேசனுக்க புகுந்து இவங்களுக்கு அடிச்சமாதிரி இன்னுமொருக்காப் போட்டாத்தான் திருந்துவாங்கள். வரட்டும் சந்தர்ப்பம்.' வந்தவர்களில் யாரோ கோபத்தோடு கத்துவது கேட்டது.

## அத்தியாயம் 18 மனநோய்

மெல்லிய காற்றையும் அதனோடு ஒட்டி உறவாடிய தூறலையும் அடித்து விரட்டிய வீராப்போடு எங்கும் நிறைந்த சூரியனின் இதம் தரும் பொன் கதிர்கள். இச்சையோடு அவன் பூமியைத் தழுவி உச்சம் காணும் தாம்பத்திய உறவின் தொடக்கம். வெளியே சென்றால் இந்தக் கதகதப்பை அனுபவிப்பதோடு, உடலுக்குத் தேவையான விற்றமீன் டீ சத்தையும் ஆதவனிடம் இருந்து இலவசமாய்ப் பெறலாம் என்பது ஹரியின் புரிதலாயிற்று. வெம்மை கொண்டுவரும் ஆதவக் கதிர்களை அனுபவிப்பது இந்த நாட்டில் அலாதியான இன்பம். வெயில் கண்டு ஓடும் நாட்டில் பிறந்தவர்களும் இங்கே ஆதவக் கற்பழிப்பை ஆசையோடு எதிர்பார்க்கும் விந்தை. இடமும் காலமும் ஆதவனுக்குக் கொடுத்த அதீத அந்தரங்க உரிமை ஹரிக்குப் புரிந்தது.

திடீரெனச் சங்கரை நினைத்தவனுக்கு அவனைப் போய்ப் பார்க்க வேண்டும் என்கின்ற எண்ணம் எழுந்தது. பின்பு அவ்வெண்ணமே இடைவிடாது அடிநெஞ்சைப் பூனை போலப் பிறாண்டியது. எதிரியிடமும் அன்பு காட்டவேண்டும் என்பது ஹரியின் கொள்கை. சங்கரை அவன் ஒருபோதும் எதிரியாகவே எண்ணியதில்லை. அவரவர் நியாயங்கள் அவர்கள் நிற்கும் அரசியல், சமுகத் தளங்களைப் பொறுத்து மாறு படுகின்றன என்பதைக் ஹரி அனுபவத்தில் நன்கு அறிந்திருந்தான். சங்கரின் சமூக, அரசியல் தளம் நிச்சயம் வித்தியாசமாய் இருந்திருக்கும். அவனுக்கு எது சரியாகப் பட்டதோ அதே விடயம் ஹரிக்குப் பிழையாகத் தோன்றியது. ஹரியின் சமூக, அரசியல் தளம் வேறு ஒருவிதமான கருத்தை அவனுள் நிலை நிறுத்தியிருந்தது. இருந்தும் மனித மூளைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு மாதிரியே செயற்படுகின்றன. எது எப்படி இருந்தாலும், அடிப்படை மனிதத்தையாவது எல்லோரும் மதிக்க வேண்டும் என்பது

ஹரியின் விருப்பம். அதுவே மீறப்படும் போது அவனால் அதைப் பொறுக்க முடிவதில்லை. இருந்தும் ஒருவனது கருத்தை மட்டுமே வெறுக்கலாம் என்பதில் ஹரிக்கு மிகவும் தெளிவு உண்டு.

ஹரி சங்கரின் வீட்டிற்குச் சென்றான். வீடு திருத்தப்பட்டுப் புதிய பெயின்ற் பூசப்பட்ட மினுமினுப்போடு மிளிர்ந்தது. சங்கரின் மகனுக்குப் பதினெட்டு வயசு ஆகிவிட்டதால் அவன் இராணுவப் பயிற்சிக்குச் சென்றுவிட்டான். இப்பொழுது சங்கரும், வனிதாவும் தனித்து விடப்பட்ட ஒருவித தவிப்பில் வாழ்கிறார்கள். அந்தத் தவிப்பு ஹரிக்கு விளங்கும். ஹரி அழைப்பு மணிக்கான பொத்தானை அழுத்தினான். சில கணங்கள் எடுத்த பின்பு வனிதா வந்து கதவைத் திறந்தாள். கதவைத் திறந்தவள் ஹரியைக் கண்டதும் மலர்ந்த முகத்தோடு,

'வாங்க... உள்ள வாங்க.' என்றாள்.

'நல்ல வெதர். வெளியால வெளிக்கிடுவம் எண்டு நினைச்சோண்ண சங்கரை ஒருக்காப் பார்த்தா நல்லாயிருக்கும் எண்டு இருந்திச்சுது... அதுதான்...' என்றான் ஹரி.

'ஒஸ்லோவில உதுக்கெல்லாம் யாருக்கு இப்ப நேரம் இருக்குது? பக்கத்து வீட்டுக்கே ஆறுமாத்திற்கு ஒருதரம் தானே விசிற் பண்ண முடியுது.' என்றாள்.

'அதெண்டா உண்மை. சங்கர் எங்க?' என்றான் ஹரி.

'நீங்கள் முதல்ல சோபாவில இருங்க. நான் குடிக்க ஏதாவது கொண்டாறன்.' என்று கூறிய அக்கா மறைந்து குடிப்பதற்கு கோலாவோடு திரும்பிய பின்பு மீண்டும் சம்பாஷனை தொடங்கியது.

'ம்... அவர நினைக்க எனக்கு இப்ப நிம்மதியே இல்லைக் ஹரி. நான் என்ன செய்வன். காசக் குடுத்து வம்பை விலைக்கு வாங்கின மாதிரிப் போச்சுது எங்கட கதை. சரி போனது போகட்டுமெண்டு இருக்காமல் அதை நினைச்சே அவர் பைத்தியமாப் போனார். அப்பிடிக் கழுவி உழைச்சு மிச்சம் பிடிச்ச காசெல்லோ? தன்னை ஏமாற்றினதை நினைச்சு நினைச்சு, அவங்களைக் கொலை செய்யோனும் எண்டு பிசத்தித் திரியிறார். அவரை இப்ப பார்க்கவே பரிதாபமாய்க் கிடக்குது. நான் சொல்லுகிறது எதையும் கேட்கிறார் இல்லை. குளிப்பு, தோய்ப்பு எதுவும் கிடையாது. நான் ஏதும் சொன்னால் அதைக் கேட்க முதல் அவருக்குக் கோபம் வருகுது. எப்பவும் தலையிடியில இருக்கிற மாதிரித் தலையைப் பிடிச்சுக்கொண்டு இருப்பார். தன்ர மூளைக்கே ஒரு குரல் கொல்லு கொல்லு எண்டு சத்தம் போடுதெண்டும், தான் யாரையாவது கொலை செய்யப் போறன் எண்டும் சொல்லுவார். எல்லாம் நான் செய்த ஊழ் வினையா இருக்கோணும்.' என்று கூறினாள் வனிதா.

அதைத் தொடர்ந்து வனிதாவின் குரல் உடைய இமைகளின் ஓரங்களில் வைரக் கோடுகள் சட்டென வேகமாக இறங்கிற்று. அது பின்பு பாம்பாக வளைந்து கழுத்தைத் தாண்டி கீழே இறங்கியது. ஹரிக்கு மனம் இரணமாக வலித்தது. கண்கள் திரையிட்டுக் கொண்டன. அவளைப் பார்க்கப் பரிதாபமாகிற்று.

'இவ்வளவு பிரச்சனையா இருந்தா அவரை ஒரு மனோதத்துவ டொக்ரரிட்டை கூட்டிக்கொண்டு போகலாம் தானே?' என்றான்.

'போகத்தான் வேணும். ஆனா ஒண்டு இவர் வரமாட்டார். இரண்டாவது அவங்கள் ரைம் தாறத்துக்கு நிறையக் காலம் பிடிக்கும்.' என்றாள் வனிதா.

'ச் நீங்கள் முதல்ல ரைம் எடுங்க. பிறகு எனக்கு அதைச் சொல்லுங்கோ. நானும் உங்களோட வாறன். நானும் வந்தால் சங்கரை எப்பிடியும் கூட்டிக் கொண்டு போகலாம். இப்பிடியே நெடுக விடுகிறது அவருக்கும் கூடாது. உங்களுக்கும் கஸ்ரம். சங்கர் அதீதமாய் எல்லாத்தையும் நம்பியிருந்தார். அதால வந்த வில்லங்கம் இது.' என்றான் ஹரி.

'உண்மை ஹரி. எல்லாரிட்டையும் நம்பி ஏமாறுகிற இரகம் இவர். எப்பவும் ஏதோ நினைச்சுக்கொண்டு… தனக்குத் தானே ஏதோ கதைச்சுக்கொண்டு… இப்பிடியெல்லாம் அவர் மாறுவாரெண்டு நான் கனவிலும் நினைக்கேல்லை.'

இவர்கள் கதைத்துக்கொண்டு இருக்கும் போது சங்கர் அவசரமாக உள்ளே வந்தான். மாப்பிள்ளை வேடத்தில் திரிந்தவன் பிச்சைக்காரன் வேடத்திற்கு மாறியதான சங்கரின் கோலம் ஹரியைக் கதி கலங்க வைத்தது. தாறுமாறாய் நான்கு திசையையும் பார்க்கும் ஒழுங்கற்ற மீசை, வாரப்படாத கேசம், வழிக்கப்படாத வெள்ளை முடிகள் ஆட்டுத் தாடியாக உருவெடுத்துத் தொங்கும் கோலம், குறிஞ்சாய்க் கழியைக் கண்ணில் அப்பியது போலப் பூளை வடிந்த கண்கள். அது சிறுத்துப் போனதால் கூசிய பார்வை. அழுக்கு ஏற இடமில்லாத மேற்ச்சட்டையும், கீழ்ச்சட்டையும். சகிக்க முடியாத ஒரு நாற்றத்தின் பின்தொடரல்…

சங்கர் ஹரியைக் கண்டவுடன்,

'என்ன ஹரி… உந்த வாலன்கள் ஏதும் பிரச்சனை செய்யிறாங்களே? அப்பிடிச் செய்தா என்னிட்டச் சொல்லு ஹரி. இவங்களை எல்லாம் துடிக்கத் துடிக்க வெட்டவேணும். அதுவும் ஓடவிட்டு வெட்டோணும்.' என்றான். அவன் கண்கள் சிவந்து கோபத்தில் உதடுகள் துடித்தன.

'ச்… அதையெல்லாம் விட்டிட்டு நீங்கள் உங்கட உடம்பையும், மனசையும் பாருங்க.' என்றான் ஹரி.

'என்ர உடம்புக்கு என்ன? மனசுதான் ஏமாத்தினவங்களைக் கொல்லு கொல்லு எண்டு அடிக்கடி சொல்லுது.' என்றான் சங்கர்.

‘அப்பிடி இல்லச் சங்கர். பொருள் வரும்… போகும்… அது நிலையில்லாதது. அதுக்காகக் கொலை செய்ய முடியுமோ? உயிர் போனாத் திரும்பி வருமோ? கொலை செய்த பிறகு தண்டனையில இருந்தும், சமுதாயத்தின்ர வெறுப்பில இருந்தும் தப்பிக்க முடியுமோ? கொல்லப்படுகிறவன் அனுபவிக்கிற துன்பத்திலும், கொல்கிறவன் அனுபவிக்கிற துன்பம்தானே அதிகமாக இருக்கும். ஆயுள் பூராகவும் அது தொடருமல்லோ? மற்றவர்களுக்குத் தண்டனை கொடுக்கிறதா எண்ணி நாங்களே எங்களுக்குத் தண்டனை வாங்குகிறதா அது முடியும். கொலை செய்யிறது பிரச்சனைக்கு முடிவு இல்லைச் சங்கர். அதை இனியாவது நாங்கள் விளங்கிக் கொள்ள வேணும். நீங்கள் உங்கட உடம்பைக் கவனியுங்க. அதுதான் இப்ப முக்கியம்.’ என்றான் ஹரி.

‘என்ர தலைக்குள்ள கொல்லு கொல்லு எண்டு ஒரு குரல் சொல்லுதே ஹரி?’ என்றான் அவன்.

ஹரிக்குப் பரிதாபமாகிற்று. ஒரு கணம் என்ன சொல்வது என்று விளங்கவில்லை. பின்பும் தன்னைச் சமாளித்த வண்ணம்,

‘இது உண்மையிலேயே ஒருவகை வருத்தம் சங்கர். நாங்கள் ஒரு நாளைக்கு டொக்ரரிட்டை போவமே?’ என்றான்.

‘அப்ப என்னப் பைத்தியக்காரன் எண்டுறியா ஹரி?’ என்று சங்கர் கேட்டான்.

‘மனநோய் யாருக்கும் வரும் சங்கர். செல்மங்கன வொண்டவீக்கிற்கு வந்தது உனக்குத் தெரியாதே? எத்தினைதரம் அதைப்பற்றிக் கதைச்சிருப்பாங்கள். அப்ப அவர் இந்த நாட்டிற்கே பிரதம மந்திரியா இருந்தவர். அப்பிடியும் அவர் வைத்தியம் செய்யாமல் ஒழிஞ்சு கொள்ளேல்லை. வைத்தியம் செய்தார். ஓய்வு எடுத்தார். தன்னுடைய வருத்தத்தை வெளிப்படையாகக் கூறினார். மனவருத்தம் யாருக்கும் வரலாம். அதுக்காக வைத்தியம் செய்யாமல் விடமுடியுமோ? பைத்தியம் எண்டு ஒழிஞ்சு கொள்ளலாமோ? நாங்கள் டொக்ரரிட்டைப் போகோணும் சங்கர். நீங்கள் வனிதா அக்காவைப் பற்றியும் கொஞ்சம் யோசிச்சுப் பார்க்கோணும். அதோட உங்கட மகனைப் பற்றியும் யோசிக்கோணும். உங்கட வருத்தம் உங்களுக்கு மாத்திரம் கஸ்ரம் தாறதில்லை. உங்களைச் சுற்றி இருக்கிறவைக்கும் அது கஸ்ரமாய்த்தான் இருக்கும். மனநோய் வாறதைப் பற்றியோ அதுக்கு வைத்தியம் செய்யிறதைப் பற்றியோ இந்த நாட்டில யாரும் வெட்கப்படுறேல்ல. ஏன் எண்டா அது நோய். அதுக்கு வெட்கப்படத் தேவையும் இல்லை. எதுக்கும் டொக்ரரிட்டைப் போறதைவிடச் சிறந்த வழி இருக்கிறதா எனக்குத் தெரியேல்ல சங்கர்.’ என்றான் ஹரி.

‘சரி இந்த மண்டைக்க இருக்கிற குரலோட வாழுகிறதும் கஸ்ரமாத்தான் இருக்குது. அப்ப ஒரு நாளைக்குப் போயிட்டு வந்திடுவம்.’ எனச் சங்கர் அதற்கு ஒப்புக்கொண்டான்.

## அத்தியாயம் 19 கத்தியோடு

அன்று இரவுச் சாப்பாட்டை முடித்த பின்பு பூமணியும், ஹரியும் தமிழ்ப்படம் ஒன்று பார்த்துக்கொண்டு இருந்தார்கள். அப்பொழுது அலைபேசி திடீரெனச் சிணுங்கியது. ஹரி படம் பார்ப்பதற்கும் அலைபேசி சிணுங்குவதற்கும் பூர்வஜென்மத் தொடர்பு உண்டு என்பதாக அவன் அலுத்துக்கொண்டான். சில வசதிகள் பல நேரங்களில் கழுத்தறுப்பாய் மாறிவிடுவது உண்டு. அதில் இதுவும் ஒன்றென எண்ணிய ஹரி அலைபேசியை எடுத்துப் பார்த்தான். அந்த அழைப்பு சங்கர் வீட்டில் இருந்து வந்தது. அதைப் பார்த்ததும் ஹரி பரபரப்பானான். அடுத்த முனையில் வனிதா பதற்றத்தோடு அழுதாள்.

'ஹரி! இங்க ஒருக்கா ஓடியா தம்பி. அவர் கத்தியையும் எடுத்துக்கொண்டு வெளியால போகப் போறன் எண்டு நிக்கிறார். நான் அம்புலன்ஸ்சுக்குப் போன் பண்ணிச் சொல்லிப் போட்டன். எனக்கு இப்ப கையும் ஓடுதில்லைக், காலும் ஓடுதில்லை. அம்புலன்ஸ் வாறத்துக்கு இடையில இவர் எங்கையும் ஓடிப் போயிடுவாரோ எண்டு பயமா இருக்குது தம்பி. பிறகு உங்க அவங்கள் யாரையும் கண்டா குத்தினாலும் குத்திப் போடுவார் எண்டு பயமா இருக்குது ஹரி.' என்றாள்.

ஹரி இதை எதிர்பார்க்கவில்லை. என்றாலும் தன்னைச் சமாளித்த வண்ணம்,

'சரியக்கா நான் இப்ப வாறன்.' என்றான்.
பின்பு அவன் பூமணியோடு அவசரமாகச் சங்கர் வீட்டிற்குச் சென்றான். இவர்கள் போன போது அம்புலன்ஸ்சும், பொலிஸ்சும் வந்துவிட்டன. பொலிஸின் உதவியோடு சங்கரை அம்புலன்ஸ்சுக்குள் ஏற்றி அவனைக் கட்டிலோடு பட்டியால் பிணைத்து, அவனது ஆக்ரோஷத்தைக் குறைப்பதற்கு ஊசி ஏற்றியிருந்தார்கள்.
'நீயும் இப்பிடிச் செய்து போட்டியேடி வனிதா. நீயும் இப்பிடிச் செய்து போட்டியேடி?' என அரற்றிய சங்கர், பின்பு அப்படியே மயங்கிப்போனான்.

பூமணியையும், ஹரியையும் கண்டவுடன் ஓடி வந்த வனிதா, பூமணியைக் கட்டிப்பிடித்து அழுதாள். ஹரிக்கு அதைப் பார்க்கப் பெரும் சங்கடமாய் இருந்தது. சிறிது நேரத்தில் பொலிசும், அம்புலன்ஸ்சும் போய்விட, அவர்கள் எல்லோரும் வீட்டிற்குள் சென்றார்கள். வனிதா தொடர்ந்தும் அழுதாள். பின்பு தடுக்கவும் கேளாது தேநீர் தயாரித்துக் கொடுத்தாள். அதில் சிறிது தானும் பருகினாள்.

## அத்தியாயம் 20 தமிழ்ச்சங்கம்

வார்டோவில் சில காலங்களுக்கு முன்பு…

வானொலியும், தமிழ்ச்சங்கமும் வார்டோவில் தமிழை நேசிப்போரின் இரட்டைப் பிள்ளைகள். ஒன்றைக் கதறக்கதற இழுத்துச் சென்று தங்கள் கட்டுப்பாட்டிற்குள் வைத்துக்கொண்டார்கள். பின்பு அதன் ஆத்மாவைக் கொன்று பிரச்சாரப் பீரங்கி ஆக்கினார்கள். அதை யாராலும் தடுக்க முடியவில்லை. ஹரிக்கும், அவனது கூட்டாளிகளுக்கும் அது ஜீரணிக்க முடியாத கவலையாகியது. பெரும்பான்மை ஜனநாயகத்தை மதிக்க வேண்டும் என்கின்ற கட்டுப்பாட்டிற்கும், வன்முறையை வளர்ப்பதில் அர்த்தம் இல்லை என்கின்ற கோட்பாட்டிற்குமாய் அந்த வேதனையை மென்று விழுங்கினர்.

ஒரு பிள்ளையின் ஆத்மா சிதைந்த கையோடு, மறு பிள்ளையின் ஆத்மாவும் சிதைக்கப்படும் சம்பவம் ஆரம்பமாகியது. இவ்வளவு விரைவாக இது நடைபெறுமெனக் ஹரி எண்ணவில்லை. அந்தக் கணங்கள் திடீரென வந்துவிட்டன. இனி இதில் இருந்து தப்பிக்க முடியாது என்பது புரிந்தது. இரண்டு காலும், நச்சுப் பொருட்களை நரம்பில் ஏற்றி மின்சாரத் துளிர்களால் இயங்கும் ஒரு மூளையும் கொண்ட, விஷ ஜந்துக்களான மனித மிருகங்கள் வெறிகொண்டவர்களாகக், குதறித் தள்ளுவதற்குத் தயாராக நிற்பதாய் ஹரிக்குத் தோன்றியது.

தமிழ்ச்சங்கம் தொடங்கும் போது பத்து நபர்கள் வார்டோவில் வசித்தார்கள். அந்தத் தொகை இப்போது பத்து மடங்காகப் பெருகிவிட்டது. அதையே அவர்கள் சாட்டாக வைத்து அதன் ஆத்மாவை, அதன் கற்பைச் சூறையாடப் போகிறார்கள். அதற்கான வாக்குப் பலம் அவர்களிடம் இருக்கிறது. அதை வைத்தே அரசியல் நடத்தும் ஆர்வம் அவர்களிடம் எப்போதும் வீரிட்டுப் பாய்கிறது. ஹரியும், அவனது நண்பர்களும் எதுவுமே வேண்டாம் என்று நாட்டைவிட்டு வந்திருக்கும் கூட்டத்தில் ஒரு பகுதி. அவர்கள் விரும்பியது நிம்மதி மட்டுமே. எந்தவித அரசியல் நடத்தும் சாணக்கியத்தோடும் அவர்கள் இங்கு வரவில்லை. உரிமைகளை இழப்பதே அவர்கள் வாழ்பனுபவமாக மாறிப் போய்விட்டது. இங்கும் உரிமைகள் ஜனநாயகத்தைச் சாட்டாக வைத்து வலோற்கராமாய் பிடுங்கப்படுகின்றது. அழகான தத்துவங்களால் அதற்கு விளக்கம் அழிக்கப்படுகிறது. எங்கு சென்றாலும் இழப்பவனுக்கு இரண வலிதான் மிச்சமாகிறது. இன்று வலி தரும் நாள். ஹரியின் இதயம் அதையறிந்து கனத்தது. வெடிப்பதாகக் குமுறியது. அதனால் அவன் மூச்சுவிட முடியாது திணறினான். கூட்டம் தொடங்கியது.

தமிழ்ச்சங்கத் தலைவராகச் செல்வரத்தினம் பணியாற்றினான். அவன் எந்தப் பக்கம் தனது கருத்து இருக்கும் என்பதைத் தெளிவு இல்லாமல் வைத்துக் கொள்வான். அதுதான் தனது பதவிக்கு மதிப்பு என்பதான எண்ணம் அவனிடம். அவன் தனக்கு

ஆதரவு கொடுக்கக் கூடிய இடங்களில் மழுப்பலாகக் கதைப்பான். இப்போது அவன் உரையாற்ற எத்தனிக்கவும் குகன் எழுந்தான்.

'எதுக்குச் சும்மா சுத்தி வளைச்சுக் கதைச்சுக் கதைச்சு நேரத்தை இப்ப வீணடிக்கோணும். இந்த நிர்வாகம் பத்து ஆட்கள் இருக்கேக்க தெரிவு செய்யப்பட்டது. இப்ப வார்டோவில நுற்றிப்பதின்நான்கு தமிழ் ஆட்கள் இருக்கிறார்கள். இவ்வளவு பேருடைய விருப்பத்தையும் பிரதிபலிக்கிறதாப் பத்துப் பேரால உருவாக்கப்பட்ட நிர்வாகம் இருக்க முடியாது. நாங்கள் இப்ப நேரத்தை மினக்கெடுத்தாமல் புது நிர்வாகத்தைத் தெரிவு செய்யவேணும். அதில ஆருக்கும் ஆட்சேபணையெண்டா வாக்கெடுப்பு வைச்சுப் பாத்திடுவம்.' என்று அன்று கதைத்ததுக்கு முரணாக இன்று அவன் கதைத்தான்.

அவன் பேச்சில் அதீத நம்பிக்கையும், சீண்டும் கேலியும் இழையோடியது. அதற்கான வாக்குப் பலம் அவர்களிடம் இப்போது இருக்கும் துணிவின் வெளிப்பாடு அது. அவனது பேச்சு சுமனைக் கொதி கொள்ள வைத்தது. அவன் திடீரெனப் பாய்ந்து எழுந்தான்.

'ஓ… குகன் சொல்லுற அந்தப் பத்துப்பேர்கூட ஓரேயடியாக வார்டோவுக்கு வரேல்லை. ஒரு சிலர்தான் முதல்ல இங்க வந்தவை. அவையெல்லாம் தாங்களும் தங்கடபாடுமெண்டு இருந்திருந்தா இந்தத் தமிழ்ச்சங்கத்தை உருவாக்கின பத்துப்பேர்கூட இங்க வந்திருக்கேலாது. முதல்ல வந்தவை காகம்மாதிரிக் கரைஞ்சதாலதான் மீதிப்பேர் இங்க மோப்பம் பிடிச்சு வந்தவை. அந்தப் பத்துப்பேரும் மற்றவைக்கு உதவி செய்யோணுமெண்டு நினைச்சிருக்காட்டிப் பத்து நுறாகியிருக்க முடியாது. முதல் வந்த பத்துப்பேரில ஒரு சிலர் மாத்திரம்தான் கொடிபிடிச்சவை. அது அவர்களுடைய உரிமை என்பதாக எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. அதைக் காரணமாக வைத்து நாங்கள் இங்கு வருபவர்களுக்கு உதவி செய்யாமல் விடவில்லை. ஆனா, இப்ப நிலைமை மாறீட்டுது. ஏறிவந்த படிக்கட்டையே எள்ளி நகையாடுகிறது எங்கட இனத்திற்குப் புதிய விசயம் இல்லை. உங்கட காரியத்தைச் சாதிக்கோணுமெண்டு இப்ப வரிஞ்சுகட்டி நிக்கிறியள். அதுக்கு ஒரு நொண்டிச் சாட்டும் சொல்லத் தேவையில்ல. ஓ… பத்துப்பேர் உருவாக்கின நிர்வாகத்தால தமிழ்ச்சங்கம் நடத்தேலாதெண்டு புல்டாவிடத் தேவையில்லை.' எனச் சுமன் கதைத்து முடிக்கவும் குகன் எழுந்தான்.

'சுமன் கதைக்கிறது ஜனநாயக விரோதம். எது எப்பிடியிருந்தாலும் எங்களுக்கு இப்ப புது நிர்வாகம் வேணும். அதை யாரும் தடுக்கேலாது. பிரச்சனை எண்டு நினைச்சா வாக்கெடுப்பு வைச்சுப் பாத்திடுவம். பிரச்சனை அதோட முடிஞ்சிடும்.' என்று குகன் முடிக்கவும் சங்கர் எழுந்து,

‘எங்கையும் பெரும்பான்மைக்கு மதிப்புக் கொடுக்கிறதுதான் ஜனநாயகம். இங்கையும் பெரும்பான்மை எது சொல்லுதோ அப்பிடிச் செய்வம். சும்மா நேரத்தை மினக்கெடுத்திறதில பிரயோசனம் இல்லை.’ எனக் கூறிமுடித்தான்.
சுமன் வெறுப்போடு சிரித்துக்கொண்டு கைதட்டினான். பின்பு இருந்த வண்ணமே,
‘இந்தப் பெரும்பான்மை ஜனநாயகத்தைத்தானே சிங்கள அரசும் நடைமுறைப்படுத்தினது. அப்ப அதை ஒத்துக்கொண்டு பேசாமல் இருந்திருக்கலாம்தானே? பிறகேன் இங்கை ஓடியந்து ஒழிஞ்சு கொண்டு, வால் பிடிக்கிறியள்? பெரும்பாண்மை ஜனநாயகம் சரி எண்டா ஏன் இவ்வளவு சனத்தை அங்க சாகடிக்கோணும்?’ என்றான். அதற்குக் குகன் ஆவேசமாக எழும்பி,
‘நாங்கள் ஒண்டும் ஓடியரேல்ல. நாட்டுப் பிரச்சனையால நாட்டை விட்டுத் தற்காலிகமா வெளியேறி இருக்கிறம். பிரச்சனை முடிஞ்ச அடுத்த கணமே எங்கட நாட்டைக் கட்டியெழுப்ப போயிடுவம். எங்களுக்கு உழைப்பு முக்கியம் இல்லை.’ என்றான்.
‘உவ்… ஓ… இவை எல்லாம் அல்பேர்ட் துரையப்பாவைச் சுட்டுப்போட்டு நாட்டுப் பிரச்சனையால தற்காலிகமாக வெளியேறி இருக்கினம். இல்லைச் சிங்கள அரசு இவைய நாடுகடத்தி இருக்குது. அதுதான் நோர்வேக்கு வந்தவுடன சிவத்தப் பாஸ்போட் தந்து இவையள ராஜமரியாதையோட வரவேற்று வைச்சிருக்கினம்.’ என்றான் சுமன்.
‘அப்ப நீங்கள் எத்தின அரசியல் வாதிகளைச் சுட்ட நீங்கள்? உங்களுக்கு மட்டும் என்ன சிவத்த பாஸ்போட்டே தந்து வைச்சிருக்கிறாங்கள்? நீங்களும் ஓடியந்த எட்டப்பர் கூட்டம்தானே?’ என்றான் குகன்.

சுமன் குகன் மீது பாய்ந்து ‘யாரையடா நாயே எட்டப்பன் எண்டுறா? தமிழ் இனத்தையே ஒட்டுமொத்தமாகக் காட்டிக் குடுக்கிறது நீங்களாடா? நாங்களாடா? அது உன்ர மரமண்டைக்கு விளங்குமாடா?’ என்ற வண்ணம் அவனைத் தள்ளினான். அவன் கதிரைகளின்மேல் விழுந்தான். இரண்டுபேர் எழுந்து சுமனை நோக்கி வந்தார்கள். நிலைமை மோசமாவதை உணர்ந்து ஹரியும், கணேஸ்சும் சுமனைப் பிடித்து வந்து தங்களோடு அமர்த்தினார்கள்.

விசயம் திசைமாறிப் போவதை அறிந்த செல்வரத்தினம் இடையில் குறுக்கிட்டு,
‘முதல்ல எல்லாரும் கொஞ்சம் அமைதியா அந்தந்த இடங்களில இருங்கோ பார்ப்பம். இங்க நாங்கள் சண்டைபிடிக்க வரேல்ல. ஒரு நிர்வாகத்தைத் தெரிஞ்சு போட்டு எங்கட அலுவல்களைப் பார்க்கப் போவம். இப்ப தேவையில்லாமல் வேற திசையில கதைச்சுப் பிரயோசனம் இல்ல. புதிய நிர்வாகத்தைத் தெரிவு செய்வதா? வேண்டாமா? என்று முதல்ல வாக்கெடுப்பு வைப்பம். அதற்குப் பெரும்பான்மை கிடைத்தால் புதிய நிர்வாகத்தைத் தெரிவு செய்வம்.’ என்றான்.

இதற்கிடையில் தன்னைச் சமாளித்துக்கொண்டு எழுந்த குகன் கோபத்தோடு செல்வரத்தினத்தைப் பார்த்து,

'உங்களுக்கு இப்பதானே உந்த அறிவு வந்திருக்குது? உதை முதல்ல செய்திருந்தா இப்ப நாங்கள் போயிருக்கலாம் எல்லே? தமிழ்ச் சங்கத்துக்கு வந்தாக் கண்டவன் எல்லாம் சண்டித்தனத்துக்கு வாறாங்கள். சண்டைபிடிக்கிறதெண்டா நாங்கள் றெடி. அண்டைக்கு வந்த மாதிரிக் கட்டையளோட வந்து அடிபட்டுப் பாப்பம். துணிவிருந்தா வரட்டும். சும்மா இங்க கூட்டுக்க நிண்டு துள்ளுற மாதிரித் துள்ளக்கூடாது.' என்றான். சங்கர் திடீரென என்ன நினைத்தானோ தெரியவில்லை,

'அவருக்குக் கொஞ்சம் கை நீட்டுத்தான். இப்ப முதல் நிர்வாகத் தெரிவு நடக்கட்டும். எங்கட பிரச்சனைகளைப் பிறகு பார்ப்பம். இப்ப வந்து உம்மட இடத்தில இரும் குகன்.' என்றான். அதை ஏற்றுக்கொண்ட குகனும் போய்த் தனது இருக்கையில் அமர்ந்தான். அதன் பின்பு அங்கு சிறிது அமைதி நிலவிற்று.

செல்வரத்தினம் மூன்று பேரை அழைத்துக் கதைத்தான். அவன் மிகவும் எளிய முறையில் இந்த வாக்கெடுப்பை நடாத்தத் திட்டமிட்டான். புதிய நிர்வாகம் தெரிய விரும்புவோர் முதலிலும் அதை எதிர்ப்போர் இரண்டாவதாயும் கைகளை உயர்த்த வேண்டும். அதை எண்ணி எடுத்த பின்பு, எதற்குப் பெரும்பான்மை கிடைக்கிறதோ, அதை நடைமுறைப்படுத்துவதென அவன் முடிவு செய்தான். இங்கு யாருக்குப் பெரும்பான்மை இருக்கிறது என்பது அவனுக்கு நன்கு தெரியும். எப்பிடியென்றாலும் அவர்கள் விருப்பப்படியே எல்லாம் நடக்கப்போகிறது என்பதும் புரியும். பதவி கைவிட்டு நழுவும் போது தேவையில்லாது நேரத்தை ஏன் வீண்ணடிக்க வேண்டுமென அவன் எண்ணினான்.

செல்வரத்தினம் கூறியதை விளங்கிக் கொண்ட அந்த மூவரும் எண்ணுவதற்குத் தயாராக நின்றார்கள். பின்பு செல்வரத்தினம் சபையோருக்கு அதை விளக்கினான். கைகள் உயர்ந்தன. முதலில் ஏழுபத்தைந்து வீதமான கைகள் பிரசன்னமாயிற்று. ஹரிக்கு மனது சோர்ந்து போயிற்று. தங்களின் அடுத்த பொக்கிசமும் பறிபோவது நெஞ்சை வைரம்கொண்டு அறுத்தது. அவன் எதுவும் செய்ய முடியாதவனாய் அப்படியே இருந்தான்.

பின்பு எதிரானவர்களைக் கையுயர்த்தச் சொன்னார்கள். அது அங்கொன்றும் இங்கொன்றுமாய் உயர்ந்தன. சபையில் இருந்த சிலர் அதைப் பார்த்து நகைத்தனர். நிர்வாகம் தெரிவதற்கு பெரும்பான்மை இருக்கிறது என்பதை அறிவித்த செல்வரத்தினம் 'இனி நீங்களே நிர்வாகத்தைத் தெரிவு செய்யுங்கோ. என்ர வேலை இத்தோட முடிஞ்சு போச்சுது.' என்று கூறிய வண்ணம் திடீரென எழுந்து அந்த இடத்தைவிட்டு வெளியேறினான். அவன் அப்படிச் செய்வான் என்று யாரும்

எதிர்பார்க்கவில்லை. அங்கே திடீர் அமைதியும், ஒரு வெறுமையும் சட்டெனத் தாக்கிற்று. சுமனும், கணேஸ்சும் இன்னும் சிலரும் ஹரியைப் பார்த்தார்கள். 'நாங்களும் அப்படி வெளியே சென்று விடுவோமா?' என்று கேட்பது போல அது இருந்தது. ஹரிக்கு அது சற்று அவஸ்தையாக இருந்தாலும் இல்லை என்பதாய் தலையை ஆட்டினான். அவர்கள் சோகமான முகத்தோடு அங்கு நடப்பதிற்குச் சாட்சியாகினர். செல்வரத்தினம் திடீர் என்று போனவுடன் சிறிது நேரம் எல்லோருக்கும் என்ன செய்வதென்று புரியவில்லை. அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி குகன் அதிரடியாக செல்வரத்தினத்தின் இடத்தில் வந்து நின்றான். துணைக்குச் சங்கரையும், இன்னும் ஒருவனையும் அழைத்தான். பின்பு கனைத்துவிட்டு 'அப்ப நாங்கள் நிர்வாகத்தைத் தெரிவு செய்வம்.' என்றான். இவன் வந்ததையும், கதைக்கத் தொடங்கியதையும் பார்த்த சுமன் ஹரியைக்கூட நிமிர்ந்து பாராது அவ்விடத்தைவிட்டு வெளியேறினான். சிறிது நேரத்தில் கார் ஒன்று ஊரே அதிரும்படி இறுமிக்கொண்டு அந்த மண்டபத்தை விட்டுப் புறப்பட்டுச் சென்றது. ஹரிக்கு சுமனின் கோபம் புரிந்தது. 'பலநேரங்களில் சிறுபான்மை பற்றிப் புரிந்து கொள்ளாத பெரும்பான்மை ஜனநாயகம்தான் வெல்கிறது. அதில் சிலருக்கு உரிமைகள் பறிபோகிறது. இதில் ஒரு இடத்தில் ஜனநாயகத்தால் தோற்கடிக்கப்பட்டவர்களே வேறு ஒரு இடத்தில் ஜனநாயகத்தின் மூலம் வெற்றிவாகை சூடுகிறார்கள். அப்போது அவர்களால் சிறுபான்மையின் உரிமைகள், கருத்துக்கள், வலிகள் என்பனவற்றைப் புரிந்து கொள்ள முடியாது போய்விடுகிறது. தனக்குத் தனக்கு என்று வரும்போதுதான் சுளகு படக்குப் படக்கு என்று அடிக்குமாம் என்பது ஜனநாயகத்திற்கும் சரியாகிறது.' எனக் ஹரி எண்ணினான்.

இம்முறை ஹரியோ அவன் ஒத்த கருத்துக் கொண்டவர்களோ நிர்வாகத்திற்குப் போட்டியிடவில்லை. போட்டியிட்டு வாக்கெடுப்பு நடந்தால் வெல்வது கடினம் என்பது அப்பட்டமாய் நிரூபணமாகிவிட்டது. சமூகம் சமூகமாய் வார்டோவில் தமிழரின் பரம்பல் அப்படி இருந்தது. அவர்களில் ஒரு சிலரே மாற்றுக்கருத்தாளர். அதிலும் ஒரு சிலரே இப்படியான கூத்துக்களுக்குச் சமூகம் தந்தார்கள்.

போட்டியே இல்லாது நிர்வாகம் தெரிவு செய்யப்பட்டது. நிர்வாகம் தங்கள் கைக்கு வந்ததில் அவர்களுக்கு இருப்புக் கொள்ளாத புழுகு. அந்தப் புழுகில் அவர்கள் பாட்டுக்குப் பாட்டு போட்டி நிகழ்ச்சி நடத்தினார்கள்.

## அத்தியாயம் 21 பட்ட காலே படும்

சில கிழமைகள் சலசலப்பின்றி நாட்கள் அமைதியாக ஓடின. அன்று வெள்ளியிரவு ஒருமணி இருக்கும். ஹரியின் அலைபேசி மீண்டும் அலறியது. இரவில் இந்த அலறல் இப்பொழுது ஹரிக்குப் பிடிப்பதில்லை. என்றாலும் அவசரங்கள் சொல்லிவிட்டு

வருவதில்லை என்பதாக எப்போதும் அதற்குச் சமாதானம் சொல்கிக்கொள்வான். இன்றும் வழமை போல மூன்று முறை ஓசை எழுப்பிய பின்பு எடுப்பதென முதலில் எண்ணியவன் பின்பு வழமை போல அந்த எண்ணத்தை மாற்றி யாராய் இருக்கும் என்று எட்டிப் பார்த்தான். அது சங்கரிடம் இருந்து வந்தது. இந்த நேரத்தில் ஏன்? ஹரிக்கு அது விளங்கவில்லை.

அன்று சங்கரை அம்புலன்ஸ்சில் ஏற்றிச் சென்றவர்கள் இரண்டு நாட்கள் வைத்தியம் பார்த்துவிட்டு வீட்டிற்குத் திருப்பி அனுப்பிவிட்டார்கள். அவன் வீட்டிற்குத் திரும்பி வந்து வனிதாவோடு கதைக்க மறுத்துச் சில நாட்கள் மௌன விரதம் மேற்கொண்டான். மனைவியும் தன்னை விசரன் என்று எண்ணிவிட்டாள் என்பதாகக் குற்றம் சாட்டினான். பின்பு அந்தக் கோபம் தணிந்து விட்டது. இப்போது அவனை மருந்து பாவிக்கச் சொல்லியிருக்கிறார்கள். இந்த வருத்தக்காரன் எப்படி ஒழுங்காக மருந்து சாப்பிடுவான் என்பது பற்றி மருத்துவர்கள் அதிகம் கவலைப்பட்டதாய்த் தெரியவில்லை. மனநோயால் பாதிக்கப்பட்டவர்கள் மருந்தைக் கிரமமாக உட்கொள்வது முக்கியம். அது சுயமாக நடவாத காரியம். உதவி செய்பவர்களுக்கும் உரிய அறிவு தேவைப்படும். எதிலும் கணக்குப் பார்க்கும் சமுதாயமாக மாறிவிட்ட ஒரு நாட்டில், மனிதர்களின் நலன்கள் கூட்டல் கழித்தலில் பலியாக்கப்படுவது வியப்பில்லை. வனிதா சங்கரைக் கவனமாகப் பார்ப்பாள் என்பது ஹரிக்குத் தெரியும். அவளின் உதவி இன்றிச் சங்கர் அந்த மருந்தைச் சாப்பிடமாட்டான்.

'இப்போது எதற்குப் போன் செய்கிறான். மருந்து எடுத்திருப்பானா?' அலசல்களுக்கு விடை காணும் அவகாசம் இல்லாதவனாய் அலைபேசியை எட்டி எடுத்தான்.
'ஹரி நான் சங்கர் கதைக்கிறன். எனக்கு என்ன செய்யிறதெண்டு தெரியேல்ல. இப்பிடிச் செய்து போட்டாங்கள் ஹரி. உண்மையாவே இப்ப நான் அவங்களைப் போய்க் கொலை செய்யோணும். ஆனா இவளோட நிக்க வேண்டிய கட்டாயம் ஹரி.' என்றான் சங்கர்.
'ஏன் இப்பிடிக் கதைக்கிறா சங்கர்? என்ன விஷயம் எண்டதைப் பதட்டப்படாமல் சொல்லு. என்ன நடந்தது?' என்றான் ஹரி.

'நான் வனிதாவோட இன்னும் சாதுவான கோவத்திலதான் இருக்கிறன் ஹரி. இண்டைக்கும் வழமை போல வெளியால போயிட்டன். எனக்கு வீட்டுக்க இருக்கிறது பிடிக்காது. உனக்குத் தெரியும் தானே அது? இப்ப நான் குரன்லாண்டுக்குப் போறேல்ல. அங்க போனாத்தானே நெடுகச் சண்டை வருகுது. சும்மா வெளிக்கிட்டுத் தெருவால நடந்து போய்ப் பொப்பில ஒரு வியர் குடிச்சிட்டுத் திரும்பி வந்தன். எங்கட வீட்டுக் கதவு திறந்து கிடந்தது. எனக்கு அப்பவே தலைச் சுத்தத் தொடங்கீட்டுது. உள்ள போய்ப் பார்த்தா வனிதாவுக்கு யாரோ அடிச்சுத் தலையில காயம். அவள் மயக்கம் தெளிஞ்சு எழும்பித் தலையைப் பிடிச்சுக் கொண்டு நிலத்தில இருந்தாள். எனக்குப்

பதட்டத்தில என்ன செய்யிறது எண்டு தெரியேல்ல. நான் லேகவத்துக்கு வந்திட்டன். இங்கையும் உள்ளுக்கு எடுக்கக் கனநேரம் செல்லுமாம். பாத்தியே ஹரி? என்னோட நெடுகச் சொறியிறாங்கள். ஒருநாளைக்கு நான் இவைக்கு முறையாகச் செய்வன். ஒருத்தரும் மறக்க முடியாத மாதிரிச் செய்வன். பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்கு வந்த கதையாக என்ர குடும்பத்தையே அழிச்சுப் போட்டாங்கள். பார்த்தியா?' என்றான் சங்கர்.

'பொறுமையா இரு சங்கர். புலியின்ர வாலைப் பிடிச்ச சங்கதிதான் உன்ர நிலை. நீ வனிதா அக்காவோட இரு. அதுதான் அவவுக்கு முக்கியம். நான் வெளிக்கிட்டு அங்க வாறன்.'

ஹரியைவிடச் சங்கருக்குச் சில வயதுகள் கூடுதலாக இருக்கும். ஆனால் சங்கரை ஹரி ஒருபோதும் அப்படி எண்ணியது இல்லை. சங்கரின் உருவமும் செயலும் ஆரம்பத்தில் இருந்தே அதற்கு இடம் கொடுக்கவில்லை. அதனால் ஹரி சங்கரை ஒருமையிலும் அழைப்பான்.

'இல்ல வேண்டாம் ஹரி. நீ இங்க வந்தும் என்ன செய்யப் போறாய்? சும்மாதான் இருக்கோணும். அதிலும் பார்க்க நீ நித்திரை கொள்ளுறது நல்லது. நாளைக்கு மிச்சம் கதைப்பம்.' என்றான் சங்கர்.

'சரி அப்ப கவனமாக மருந்தைக் கட்டிக் கொண்டு வாங்க. நாங்கள் நாளைக்கு கதைப்பம்.' எனக் கூறிவிட்டுக் ஹரி அலைபேசியைத் துண்டித்தான்.

'ஏனப்பா, சங்கரோட கோபம் எண்டா மனுசிக்கும் அடிப்பாங்களே? இதுதான் எங்கட தமிழ் ஆட்களின்ர புது நாகரிகம் போல இருக்குது?' என்றாள் பூமணி.

'இதுக்கு என்ன பதில் சொல்லுறது? பொம்பிளையள அடிக்கிறது எங்கட சமுதாயத்தில நடக்காத ஒண்டா? எம்ஜியார் பாடலைக் கேட்டிட்டு எல்லாரும் அப்பிடியெண்டு நினைச்சா அது யாருடை பிழை? வன்முறையே ஒரு வெறி. அந்த வெறியில போறவனுக்குக் கண்ணும் தெரியாது, பெண்ணும் தெரியாது. எங்கட நாட்டில எத்தினை கொலை செய்திருப்பாங்கள். பொம்பிளையள், குழந்தைகள் எண்டு யாராவது ஈவிரக்கம் காட்டினாங்களா? காட்டுறாங்களா? வெட்டித், தூக்கி, சுட்டு, திருகி, கைக்குண்டைப் பெண்ணுறுப்பில வெடிக்கவைச்சு, மனிதம் வெட்கிக்கும் அநியாயத்தைக்கூட எந்தவித குற்ற உணர்வும் இல்லாமல்தானே எல்லாப் பகுதியும் செய்திச்சு. எங்கட நாட்டில் மனிதர் எண்டு சொல்லும் மிருகங்கள் எப்பவும் உலாவின. இன்றும் உலாவுகின்றன. இனியும் உலாவும். இரண்டு இனங்களுக்குள்ளும் மொழியும், மதமும், சில கலாசார விழுமியங்களும் மட்டும்தானே வித்தியாசம்? எங்கடை தோல்கள் கூட ஒரே நிறம். இந்துவில் இருந்து பௌத்தம் வந்தது. தமிழைத் தழுவிய சிங்களம். இருந்தும் அந்த

இரு இனங்களும் எப்படி வரலாற்றைத் தாண்டி இருக்குது பார்த்தியா? இண்டைக்கும் அவர்கள் வேண்டாப் பெண்டாட்டியாக அங்க வாழுகினம் இல்லையா? அதே கரவோடும், அசிங்கமான குணத்தோடும் அங்கு இருந்து, இங்கு வந்தவங்கள் தானே இவங்களும்? அப்ப இவங்கடை நடத்தை எப்படி இருக்குமென்று எதிர்பார்க்கிறாய்? மனதால் திருந்தாதவரைக்கும் மனிதத்தோல் போர்த்திய கொடிய மிருகங்களின் கதை தொடரத்தான் செய்யும்.' என்றான் ஹரி

'ம்… இலங்கையர் என்று சொல்லிப் பெருமைப்படுகிறதுக்குப் பதிலாக வெட்கப்பட வேண்டியதே எங்கட நாட்டின் வரலாறு எண்டுறியள்.'

'அப்பிடியாக அமையக் கூடாது என்பதுதான் என்ரை பிரார்த்தனை.' என்றான் ஹரி.

## அத்தியாயம் 22 அரசியல்

வார்டோவில் சில காலங்களுக்கு முன்பு…

வார்டோவில் தமிழ்ச்சங்க நிர்வாகம் தெரிவு செய்யப்பட்டு ஒரு மாத காலம் சட்டெனக் கோடைக்காலத்துப் பனி போலக் கரைந்து போயிற்று. அன்றும் ஒரு சனிக்கிழமை. இழப்புகள் வருவதாய் சனியென்னும் நாளின் வருகை வார்டோவில் வெறுப்பைச் சிலருக்குத் தருகிறது. புதிய நிர்வாகத் தெரிவின் பின்பு நடத்தப்படும் இரண்டாவது தமிழ்ச்சங்கக் கூட்டம். கணேஸ் ஹரியின் வீட்டிற்கு காரில் வந்தான். அங்கு தனது காரைத் தெருவின் ஒரு பக்கத்தில் நிறுத்திவிட்டுக் ஹரியின் வீட்டிற்குச் சென்றான். ஹரி அன்று அளவுக்கு அதிகமான சந்தோஷத்தில் மிதந்தான். பூமணிக்கு விசா கிடைத்த செய்தி அறிந்தது தொடக்கம் அவனின் சந்தோஷ வெறியாட்டம் தொடங்கிவிட்டது. போதையில் மிதப்பவனின் புழுகு அவனில். இன்னும் பத்து நாட்களில் நோர்வேக்குப் பூமணி வருவாள் என்கின்ற இருப்புக்கொள்ளாத நினைப்பு. பூமணி வருகிறாள் என்பதற்காகக் ஹரி வீடு வாங்கியாகிற்று. வீடு வாங்குவதோடு அது நின்று விடவில்லை. அதற்குத் தேவையான கட்டில், சோபா, அடுப்பு, பாத்திரமென நிறையப் பொருட்கள் வாங்கினான். அவையெல்லாம் வாங்கி அடுக்கிய பின்பு வீடு இப்பொழுது ஓரளவிற்குப் பொலிவாகக் காட்சி தருகிறது. மேலும் கணேஸ், சுமன் போன்றோரின் உதவியுடன் மெருகூட்டும் வேலைகள் செய்தாயிற்று. இனிப் பூமணி எப்போது வருவாள் என்கின்ற தவனத்தில் ஹரி காலம் தள்ளினான். அதற்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது.

உள்ளே வந்த கணேஸ் ஹரியைப் பார்த்து,

'ம்… இப்ப எல்லாம் றெடி. இனி அக்கா வந்தா எங்களுக்கெல்லாம் காப்புக் கையால சாப்பாடுதான்.' என்றான்.

‘ஓ அதுக்கென்ன? உனக்கு இல்லாத சமையலே. இப்ப என்ர காட்டுக் கையால ரீயொண்டு குடிப்பமே?’ எனக் கூறிய வண்ணம் எழுந்து தேநீர் தயாரிப்பதற்குச் சமையலறையை நோக்கிச் சென்றான்.

கணேசும் ஹரியுடன் சமையலறைக்கு நடந்து வந்தான்.

‘என்னவோ சொல்ல நினைக்கிறாய் போல?’ என்றான் ஹரி கணேசைப் பார்த்த வண்ணம்.

‘ஒண்டும் இல்லை அண்ணை. ச்... எனக்கு அது சரியாகவும் தெரியாது. அதுதான் எப்படிச் சொல்லுறதெண்டு யோசிக்கிறன்.’ என்றான் கணேஸ்.

‘அப்பிடி என்ன தலை போற விஷயம்? நான் நீ சொல்லுறத்துக்கு ஆதாரமே கேட்கிறன்?’ என்றான் ஹரி.

‘தலை போற விஷயம் எல்லாம் இல்ல. ஏற்கனவே போக வேண்டியது எல்லாம் போயிட்டுது. இனி மிச்சம் போக என்ன இருக்குது?’ என்றான் கணேஸ்.

‘சொல்ல வந்த விஷயத்தை இப்ப மறக்கப்போறா.’ என்றான் ஹரி.

‘இவங்கள் ஏதோ தமிழ்ச்சங்கக் காசை எடுத்து அவையின்ர அமைப்புக்குக் குடுக்கப் போறாங்களாம். அதுக்குக் குடுத்தா அது எங்க போகுமெண்டு யாரும் விளக்கம் சொல்லத் தேவையில்லைத்தானே? எங்கட பெயரெல்லாம் சங்கத்தில அங்கத்தவரெண்டு பதிஞ்சு இருக்குது. அப்பிடிப் பதிவு இருக்கிறதாலதான் நோர்வே அரசாங்கம் பணமும் தருகுது. இப்ப எங்கட விருப்பம் இல்லாமலே எங்களுடைய பணத்தை எடுத்து, நாங்கள் விரும்பாத ஒரு செயலுக்கு அனுப்பப் போறாங்கள். அதைத் தடுக்கிறதுக்கு ஒரு வழியும் இல்ல. நாங்கள் சிறுபான்மையா இருக்கிறதால தமிழ்ச் சங்கத்திற்குள்ள எதுவும் செய்ய முடியாது. உங்களுக்கு உந்த விஷயம் தெரியுமே?’ என்றான் கணேஸ்.

‘ஓ... சுமன் ஏற்கனவே ரெலிபோனில கத்தினவன். இப்ப நாங்கள் கத்தி எந்தப் பிரயோசனமும் இல்ல. இண்டைக்கும் எத்தினபேர் எங்கட பக்கம் வருகினமோ தெரியாது. வாறவை வரட்டும். இயன்ற அளவுக்கு நாங்கள் வாதிட்டுப் பார்ப்பம்.’ என்றான் ஹரி.

‘மற்றவை சொல்லுறதைக் கேட்டுப் விளங்கிக் கொள்ளுற ஆட்கள் இல்லை அண்ணை அவங்கள். விருப்பம் இல்லாட்டி நீங்கள் எழும்பி வெளியால போங்கோ எண்டு முகத்தில அடிச்ச மாதிரிச் சொல்லுவாங்கள்.’

‘எனக்கும் அது தெரியும். அப்பிடிச் சொன்னாலும் அதிசயப்பட முடியாது.’

‘அப்பிடி ஒருநிலை வந்தால் என்ன செய்யிறது அண்ண?’

‘வரட்டும். பணத்தை அனுப்பட்டும். அனுப்பினா நாங்கள் அதைச் சும்மா விடேலாது. அப்ப நாங்கள் கட்டாயம் கொமீன்ல (மாநகரசபை) கதைக்க வேணும். அதுக்குப் பிறகும்

உந்தத் தமிழ்ச்சங்கத்தில இருக்கிறது எங்களுக்கு மாறா இழுக்கா இருக்கும்.' என்றான் ஹரி.

'இப்பவே அப்பிடித்தான் அண்ண.' என்றான் கணேஸ்.

'அவதிப்படாத. இண்டைக்கு என்ன நடக்குதெண்டு போய்ப் பார்ப்பம். எவ்வளவில அவையின்ர செயல்பாடு இருக்குது எண்டு நோட்டம் விடுவம்.' என்றான் ஹரி.

'ம்... எனக்கெண்டா ஒரு குறோணர்கூட அவங்கள் இந்தச் சங்கத்தில இருந்து எடுத்து அனுப்பக் கூடாது. அதை தடுக்க இப்ப எங்களால முடியாது.' என்றான் கணேஸ்.

'இப்ப இருக்கிற நிலைமையில அது கஸ்ரம். அதைவிடக் கொமீன்லகூட அவங்கள் அப்பிடி இப்பிடியெண்டு சொல்லி அனுதாப அலைய ஏற்படுத்தி வைச்சிருக்கிறாங்கள். அதால எங்கட கதை அங்கையும் எடுபடாமல்கூடப் போகலாம்.' என்றான் ஹரி.

'அப்பிடி ஒருநிலை வந்தா நாங்கள் புதுசா ஒரு தமிழ்ச்சங்கம் அமைக்காமல் விடக்கூடாது. எங்கட காசையெடுத்து அவங்கள் ஆயுதம் வாங்க அனுமதிக்கக் கூடாது. அப்பிடி அனுமதிச்சா அவங்களால உருவாகிற பக்க விளைவில எங்களுக்கும் பங்கிருக்கும். அதுக்கு எதிராக நாங்கள் எல்லாரும் துணிஞ்சு செயல்படோணும். அதுக்கு நீங்கள் கட்டாயம் முன்னுக்கு நிக்கோணும்.' என்றான் கணேஸ்.

'ரீயக் குடி கணேஸ். எல்லாம் நல்லபடியாக நடக்கும். மீறிப்போன எங்களுக்கும் கொஞ்சம் எண்டாலும் தெரியுமெண்ட வித்தையைக் காட்டுவம். கொஞ்சத் தமிழர் இருந்தும் ஒற்றுமையாக இருக்கிறாங்கள் இல்லையெண்டு நொஸ்குகள் சிலவேளை கதைக்குங்கள். அதுக்கு இனி என்ன செய்யமுடியும்?" என்றான் ஹரி.

'இவங்கள் மனச்சாட்சிய வித்துப்போட்டு, ஓநாய் போலத் திரியிறவங்கள் அண்ண. எது என்ன நடந்தாலும் நாங்கள் ஏமாறக்கூடாது.' என்றான் கணேஸ்.

'உண்மைதான். தாங்கள் செய்யிறதுகள் பெரிய அரசியல் சாணக்கியம். மற்றவையெல்லாம் முட்டாள்கள் என்ற நினைப்பு அவைக்கு. உந்த அகங்காரமே ஒரு நாளைக்கு அவைய தலைகுப்புற விழவைக்கப் போகுது. நீ வேணும் எண்டா இருந்துபார்.' என்றான் ஹரி.

'இதை என்ன இருந்து பார்க்கிறது? நடக்கிறதைப் பார்க்கவே தெரியேல்லையே? வெளிநாட்டில இருந்து கொண்டு தங்கட சுயநலத்தைக் காப்பாற்ற உதவி செய்யிற சனத்தின்ர கண்மூடித்தனமான ஆதரவு அவைக்கு இருக்கிறது எல்லாருக்கும் தெரியும். அதைவிடுவம். நாட்டில எவ்வளவு ஆதரவு இருக்குது எண்டதுதான் போராட்டத்திற்கு முக்கியமானது. கட்டாயத்துக்கு இழுத்துப் போய் விடுதலைக்கனவு காணவைக்க எவ்வளவு காலத்திற்கு முடியும்? அவங்கள்தான் நாளைக்கு முன்னணியில நிண்டு போராட வேண்டியவங்கள். அவங்கள் எல்லாம் அசுரப்பிடியில இருந்து தப்பினாப் போதுமெண்டு இருக்கிறாங்கள். அதைவிட நாட்டைப் பொறுத்தவரையிலும் ஆதரவாக

இருக்கிற சனத்தைவிட எதிராய் இருக்கிற சனம்தான் அதிகமாக இருக்கும். தமிழருக்காய் போராடுகிறம் என்கிற பொய்ப் போர்வையைவிட வேற எந்த ஒரு நல்ல விஷயமும் இவங்களிட்ட இப்ப இல்ல. அந்தப் போர்வையையும் யாரோ ஒருநாள் உருவுவான். அப்ப தெரியும் எல்லா வள்ளலும். சொந்தங்களை மொத்தமாகப் பகைச்சு, ஒரு குழந்தைப் பிள்ளை இராணுவத்தை வலுவில வைச்சு, மற்றொரு நாட்டின்ர இராணுவம் வல்லரசுகளின்ர உதவியோடே படையெடுக்கேக்க, எத்தினகாலம் இவை மக்களைப் பாதுகாப்பினம்? தாக்குதல் இராணுவமாய் இருக்கும் வரைக்கும் வெற்றிதான். கொரில்லாவை அழிக்க முடியாது எண்டுறதும் உண்மை. மரபு இராணுவத்தை? இவை பாதுகாக்கும் இராணுவமாய் மாறினவுடனேயே இவைக்குச் சனியன் பிடிக்கத் தொடங்கீட்டுது. அதுதான் அடிப்படை விதி. அது இனிப் போகப் போகத்தான் தெரியும். அதோட அடிபட்ட பாம்பாக இந்தியா கோபத்தோட அலையுது. சந்தர்ப்பம் கிடைச்சா அது தீண்டாமல் விடமாட்டுது. வெள்ளக் கண்ணகி காலம் பார்த்து சிலம்போட டில்லியில இருக்கிறா. அவ மார்பைத் திருகி றோவிட்டையும், சீபியையிட்டையும் குடுத்து விடுவா. இவைக்கு இன்னுமொருக்கா வங்கம்தந்த பாடத்தை அது சொல்லிக்குடுக்கும். குழப்ப ஆயுதம் தந்தால் நீங்கள் நாடா அமைக்கப் பாக்கிறியள் எண்டுறது இந்தியாவின்ர பார்வை. ஒருநாளைக்கு காட்ஸ்சில கட்டின வீடுமாதிரி எல்லாம் பறந்திடும். அப்ப இந்தக் கூட்டம் அவங்களுக்கு எதிராகக் கதைச்சாலும் அதிசயப்படுகிறதுக்கு ஒண்டும் இல்லை. இலங்கையரசோட இராணுவரீதியாக சவால்விட ஆயிரத்து தொளயிரத்து எண்பத்தி ஏழில ஒரு வரம் எங்களுக்குக் கிடைச்சுது. அதைத் தந்திரமாய்ப் பயன்படுத்த தெரியேல்ல இவைக்கு. இலங்கையரசு அருமையாகப் பயன்படுத்திச்சு. இவையின்ர வங்குரோத்து சுயநல அரசியலை ஆயிரம் வருஷசம் சென்றாலும் வரலாறு மன்னிக்காது.' என்றான் கணேஸ்.

'ம் இப்பிடி ஆயிரம் விஷயங்கள். எல்லாத்திலையும் பிழை விட்டுக் கொண்டு போறதில மாத்திரம் இவங்கள் வலு கெட்டிக்காரங்களடா. இவை தமிழ்ச் சனத்தை மீட்சியே இல்லாத அழிவுக்க தள்ளி விடுவினம் எண்டது மட்டும் நிச்சயம்.'

'அதெண்டா உண்மையண்ண.' எனக் கூறி கணேஸ் வேதனையாகச் சிரித்தான்.

## அத்தியாயம் 23 குலம்

குலைப்பான் பிடித்தது போன்ற நடுக்கம் வாழ்வின் ஒவ்வொரு அசைவிலும் குலத்தை இறுகப் பற்றிற்று. நடுக்கமே சர்வமான சோகத்தில் அவன் நலிந்து போனான். ஒஸ்லோவில் காசு சேர்ப்பதற்கும், அதனை நிருவகிப்பதற்கும் நியமிக்கப்பட்ட முக்கியமானவர்களில் சிலருக்கு என்ன நடந்தது என்பதை அறிய அறிய அவன் நடுக்கம் அதிகமாயிற்று. அதுவும் துறம்சோ என்கின்ற இடத்தில் மிகவும் நட்பாய் இருந்த நண்பர்களில் இருவரில் ஒருவனைக் கொலை செய்துவிட்டார்கள். சிவகரனின் அந்தப் பரிதாபச் சாவை நினைக்கும் போதெல்லாம் முள்ளந்தண்டில் ஏறும் குளிரையும்,

விறைப்பையும் அவனால் தாங்க முடிவதில்லை. 'எவ்வளவு குரூரமாகக் கொன்று இருக்கிறான்? யாராக இருக்கும்? யாராக இருந்தாலும் எதற்குச் செய்கிறான் என்பதை எப்படிச் சொல்ல முடியும்?' எதற்காக என்பது அவனுக்குக் கடுகளவும் விளங்கவில்லை. தாங்கள் மூன்று பேருக்கும் என்ன தொடர்பு இருந்தது என்பதை எப்படிப் பொலிசுக்கு விளங்கப்படுத்துவது என்பதும் அவனுக்கு விளங்கவில்லை. அதற்காக இருக்குமா என்பதிலும் அவனுக்குத் தெளிவில்லை. 'பொலிசிடம் இருந்து ஆயிரம் கேள்விகள் எழலாம். சிலவேளை ஆள் அடையாளத்தை மாற்றவேண்டி வரலாம். பயங்கரவாதி என்கின்ற முத்திரைகூடக் குற்றப்படலாம். வருங்காலத்தில் இவர்கள் என்ன செய்வார்கள் என்பதும் தெரியாது. அந்த அரசியல் தெரியாது மாட்டுவது புத்தியாகாது. இந்தக் காலத்தில் யாரையும் நம்ப முடியாது. உண்மைகளை எவரிடமும் முழுமையாக ஒப்புக்கொள்ள முடியாது.' என அவன் எண்ணினான்.

பாலனை அடித்து முடமாக்கியதில் அவன் இப்போது ஓணான் போலத் தலையை ஆட்டுவதோடு நாக்கைத் தொங்கப் போட்டவண்ணம் சக்கர நாற்காலியில் வலம் வருகிறான். அவன் தலையில்பட்ட அடியின் தாக்கமது. இப்போது பொலிஸால் அடையாளம் மாற்றப்பட்டு, வேறு ஒரு இடத்தில் அவன் வசிக்கிறான். இந்த உண்மைகள் குலத்தை எப்போதும் பயமுறுத்துகின்றன. மூன்றாவது நபர் தான் என்பதும், தனது முறை விரைவில் வரும் என்பதும் அவனுக்கு மட்டும் தெரியும். அதுவே இந்தக் குலைப்பான் நடுக்கத்தை நிறுத்த முடியாத வருத்தமாக்கியது. குலமும் மற்றவர்களைப் போல நாட்டுப் பிரச்சனையைச் சாட்டாக வைத்துப் பொருள்தேடிப், பாதுகாப்புத்தேடி ஐரோப்பா வந்தான். இங்கு வந்த பின்பு உழைப்போடு ஆடம்பரமாய் வாழலாம் என்பது உண்மையென அவனுக்குப் புரிந்தது. அதைவிடவும் வேறு சில உண்மைகளும் அவனுக்குப் புரியலாயிற்று. அதில் ஒன்று அவர்களுக்காக தலையைக் கொடுத்து வேலை செய்தாலும் இங்கு உயிர் போகும் ஆபத்து எதுவும் இல்லை என்பதுதான். இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி தியாகிகளாய் மாறி, வருங்காலத்தில் நல்ல பெயர் எடுப்பதோடு, ஓடும் ஆற்றில் அள்ளித் தெளித்தால் ஊருக்கா நட்டம் என்கின்ற கள்ள எண்ணத்தைப் பின் மூளையிற் செருகினான். அதற்காகக் கடுமையாக வேலை செய்ய ஆரம்பித்தான். தமிழீழம் என்பது அறைந்து அறைந்து பலருக்கும் மூளையில் ஏற்றப்பட்டது. பணம் இருந்தால் இராணுவச் சமநிலையை நிரந்தரமாய்ப் பேணலாமெனத் தப்பு வேதம் ஓதப்பட்டது. நித்தம் அழிக்கும் முடிவற்ற யுத்தத்தையும் மீறி நாடுகட்டி ஆளலாம் என்பதை நம்பி, அந்த நாட்டில் பிரமுகராய் வலம்வரப் போதில் அகமகிழ்ந்து, அகங்காரமாக, அச்சுறுத்திப் பணம் பறித்தான். அதனால் வந்த எதிர்ப்புகள், வன்மங்கள், சிறிது சிறிதாய் திரண்டு, இப்போது தன்னைத் துரத்துவதாய் அந்தரிக்கிறான். அதையும் வாய்விட்டுச் சொல்ல முடியாதவனாய் மனதிற்குள் துடிக்கிறான்.

வன்முறை மீது ஆறாக் காதல் கொண்டவர்களுக்கு வன்முறைப் போராட்டத்தில் தீராத நம்பிக்கை இருக்கும். இதற்கிடையில் குலத்திற்கு ஊரில்த் திருமணம் பேசினர். அவனது சாதியிலேயே பெண்ணெடுத்து அனுப்பி வைத்தனர். அவள் பெயர் சிவகலை. சிவகலை அண்ணனை இழந்தாலும் தனது கூர்மையான கருத்தை இளக்காதவளாய், பிழைகளைப் பிழையெனச் சொல்லும் துணிவோடு நோர்வேக்கு வந்தாள். போராடுவது என்பது நிச்சயம் ஆயுதத்தைத் தூக்குவது மட்டுமல்ல. அழகு இல்லை என்றாலும் நேர்மையும், துணிவும் உள்ளவனாகக் குலம் இருப்பானென அவள் எண்ணினாள். அவளது கற்பனையில் பண்பான ஒரு காருண்ணியனின் வின்பம் ஆசீர்வாதம் செய்து, அன்பு மழை பொழிந்தது.

ஒஸ்லோ விமான நிலையத்தில் வந்து இறங்கிய போது புலிகளையும், அவர்களின் வீரப்பிரதாபங்களைக் குலம் மீண்டும் மீண்டும் கேட்க, அவள் பேசாது நின்றாள். அவளுக்கு மனம் சோர்ந்து போயிற்று. இவனோடு வாழ்ந்தால் சித்தப்பிரமை பிடித்துவிடும் என்பது அவளுக்குப் புரிந்தது. அதற்கு அவள் வாழ்பனுபவம் காரணமாகும். என்ன நடந்தது என்பதைக் குலம் அறிந்திருப்பான். அதை மறந்து தன்னை அவன் அப்படிக் கேட்டது அவளுக்கு வயிற்றைப் பிரட்டியது. அண்ணாவின் நினைவுகள் அவள் மனதை எப்பொழுதும் வாட்டும். அதன் துன்பம் இதயத்தை இரணமாக்கிப் பிழிந்தெடுக்கும். யாழ்நகரில் அவரும் ஒரு பெரிய முதலாளியாக வலம்வந்தார். குடும்பத்தின் ஒரே ஒரு ஆண் வாரிசே அவர்தான். நேர்மை தவறாத அவரிடம் பணம்பணமாய் மிரட்டி வாங்கினார்கள். கொழும்பில் இருந்து அவருக்கு வரும் ஒவ்வொரு பாரஊர்திக்கும் அவர் கப்பம் கட்டினார். அது பொதுவான விதி. அதைவிட நிறையக் கொடுக்க வேண்டும். கணக்குக் காட்ட வேண்டும். கொடு அல்லது உயிரை விடு என்பது அவர்கள் சட்டம். ஒருமுறை உண்மையாகவே பணம் இருப்பில் இல்லாததால் அவர்களின் மிரட்டலைப் பூர்த்தி செய்ய முடியாது போய்விட்டது. 'பணம் தருவதற்கு மறுக்கும் ஒரு வியாபாரியை முதலில் சுட்டால் பயத்தில் மற்றவர்கள் கேட்காமலே பணத்தைக்கொண்டு வந்து கொட்டுவார்கள்.' அசுரனிடம் இருந்து அவுணர்கள் கற்ற தத்துவம். கணக்குப் புத்தகங்களோடு விசாரணைக்கு அழைத்துச் சென்றார்கள். எதையுமே திருப்பிக் கையளிக்கவில்லை. மகனைக் கேட்டுப்போன அப்பாவை எட்டி உதைந்தார்கள். அதில் அப்பாவின் சித்தம் குழம்பிப் போயிற்று. அப்போது சிவகலை இறந்தே பிறந்தாள். தனிநாடு என்கின்ற பேராசையில் அவுணர்களுக்கு வாழ்க்கைப்பட்டதாய் அவள் தினம் தினம் துடித்தாள். அந்த நினைவுகள் அவள் மனதில் இன்றும் பசுமையாக இருக்கின்றன. என்றும் பசுமையாக இருக்கும். அவளை மீண்டும் மீண்டும் வெறுப்பேற்றும் விதமாகக் குலம் அவர்களின் வீரப்பிரதாபங்களைக் காரிற்குள் ஓயாது கேட்டான். அதைப் பொறுக்க முடியாதவளாய்,

‘கொலை காரர்களைப்பற்றி என்னோடு கதையாதீங்க.’ என்று கோபத்தோடு கூறினாள். அடுத்த கணமே அவள் கன்னத்தில் குலத்தின் கையிறங்கக் கண்களில் மின்மினிப் பூச்சிகள் கொள்ளையாகப் பறந்தன. உலகம் ஒரு முறை இருண்டு வெளித்தது. இப்போதே ஊருக்குத் திரும்ப வேண்டும் என்பதாக முதலில் அவள் நினைத்தாள். பின்பு எங்கு போனாலும் இல்லாமல் போவது சுதந்திரம்தானே என்பதை எண்ணி மௌனத்தை மொழியாக்கி, ஊமையாய் வாழக் கற்றாள். அண்ணனைக் கொன்றவர்கள், அப்பாவைச் சித்தசுவாதீனம் ஆக்கியவர்கள், அவர்களைப் போற்றும் கணவன் என்பதான நிரந்தர நரகத்திலிருந்து விடுபட வழி புலப்படாத போதும், மனித மிருகத்தின் உடற் பசிக்கு இரையாகி, அதன் எச்சத்தில் இரு முத்துக்கள் விளைந்திட, அவர்களைக் கொஞ்சுவதில் தனது காலத்தைக் கழித்து வந்தாள். எங்கள் வாழ்வில் மனித உணர்ச்சிகள் எரிந்து போகும் துர்நாற்றம் எப்போதுமே வீசுவதாக அவள் எண்ணினாள். கருத்தில் எதிரியானவனோடு கட்டிலைப் பகிர்ந்து கொள்ளும் தண்டனை அவள் விசித்திர வாழ்க்கையாகத் தொடர்ந்தது. அனாதைகள் என்ன செய்யமுடியும்? வசனங்கள் ம்… ஆ… என்பதோடு முடிய… தொலைக்காட்சி அவர்கள் வாழ்வாகியது.

மூர்க்கமாக உதவி செய்து, முடிந்த மட்டும் பயன் பெற வேண்டும் என்பது குலத்திற்குப் புரிந்த அளவிற்கு, மற்றைய மனிதர்களின் சுதந்திரத்தை மதிக்க வேண்டும் என்பது ஒரு போதும் அவனுக்குப் புரிந்ததில்லை. தனது சொந்த மனைவியின் மனதையே அவன் புரிந்து கொள்ளவில்லை. இப்போது தனக்கு ஏதாவது நடந்துவிட்டால், தனது சொத்துக்களான பிள்ளைகள் என்ன ஆவார்கள் என்கின்ற பயம் அவனை அதிர வைத்தது.

குலம் தனது வருமானத்தைச் சட்டரீதியாக மாற்ற ஒஸ்லோ நகரத்தின் எல்லைக் கோட்டில் இருந்த ஒரு பாடசாலையில் கழுவும் வேலை செய்தான். வேலையை இரண்டு மணிக்குத் தொடங்கி ஏழுமணிக்கு முடிப்பான். பின்பு விரைவாக வீட்டிற்குச் செல்வான். வீட்டில் மனம் விட்டுக் கதைப்பதற்கு மனைவி இல்லாவிட்டாலும் மனம் விட்டுச் சிரிப்பதற்குப் பல தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் இருந்தன.
குலம் இன்று காரில் வந்து இறங்கும் போது நிறைய வாகனங்கள் அந்தத் தரிப்பிடத்தில் நின்றன. அந்த வாகனங்கள் பாடசாலை முடிந்தவுடன் போய்விடும் என்பது அவனுக்குத் தெரியும். குலம் தனது வாகனத்தை நிறுத்திவிட்டு வேலைக்குச் சென்றான். அவன் மனதில் நிம்மதி இருக்கவில்லை.

வேலை முடித்த பின்பு வெளியே குப்பை மூட்டைகளுடன் சென்ற போது இருட்டின் அடர்த்தியை அவனால் உணர முடிந்தது. குளிர் காற்றும் அதன் ஈரலிப்பும் சில்லிட்டு வியர்த்த உடலை இதமாகத் தடவி விட்டதில் வியர்வைத் துளிகள் மாயமாகின. அன்னையின் கைப்பட்ட ஆறுதல் அவனுக்கு அதில் உண்டானது. குப்பை போடும் பெரிய பெட்டிகள் பாடசாலைக்கு வெளியே ஒரு இருட்டான பகுதியில் இருந்தன. அது

குலத்திற்கு அறவே பிடிக்கவில்லை. அதற்கும் வாகனங்கள் தரித்து நிற்கும் இடத்திற்கும் மின் ஒளி பாய்ச்சினால் என்ன என்பது அவன் கேள்வி. இந்தப் பாடசாலை அதனால் நஸ்ரத்திலா தாண்டு போகும் என்பதும் அவனுக்கு விளங்கவில்லை. பாடசாலை நிர்வாகத்தைச் சபித்த வண்ணம் குப்பை மூட்டைகளை இழுத்துக் கொண்டு சென்றான். பாடசாலை நிர்வாகம் மிச்சம் பிடிப்பதில் மட்டும் குறியாக உள்ளது என்பது அவனது ஆதங்கம். தான் கழுவும் இடத்தின் பரப்பளவை அதிகரிக்கப் போவதாக அதிபர் கூறியிருந்தது அவனுக்கு அவர் மேல் வெறுப்பை உண்டாக்கியது. 'உந்த அதிபருக்கு ஒரு நாளைக்கு இருட்டடி போடவேணும்.' என எண்ணினான். அப்படிச் செய்வது ஒன்றும் சாதாரண விஷயம் இல்லை என்பது அவனுக்குத் தெரியும். அதிபர் உடலாலும், உயரத்தாலும் குலத்தைவிட இருமடங்கு என்பது அடிவயிற்றைக் கலக்கும் அவன் அறிந்த உண்மை. அடிப்பது என்றால் அவருக்கு ஏதாவது மயக்க மருந்தைக் கொடுத்துப், பின்பு செத்த பாம்பை அடிப்பது போல அடித்தாற்தான் உண்டு என்பது அவன் எண்ணம்.

குலம் குப்பை மூட்டைகளை அதற்கான பெட்டிகளில் போட்டுவிட்டுத் திரும்பி வந்தான். அப்போது அவன் கவனத்தை அது தட்டிற்று. வாகனத் தரிப்பிடத்தில் இருந்த இருட்டான பகுதியில் ஒரு வாகனம் தரித்து நின்றது. 'சே… இருண்டவன் கண்ணுக்கு மருண்டதெல்லாம் பேய்.' என்று எண்ணிய அவன் பாடசாலையை நோக்கிச் சென்றான். ஒவ்வொரு நாளும் கழுவி முடிந்ததும் அலார்ம் போட்டுவிட்டு வருவது அவன் வழக்கம். அவன் கழுவி முடிக்கும் போது பாடசாலையில் எவரும் இருப்பதில்லை. குலத்திற்கு அந்தத் தனிமை பிடிப்பதில்லை. சின்ன வயதில் இருந்தே பேய்பற்றி அவனுக்குப் பேய்ப்பயம் இருந்தது. எவ்வளவு விரைவாக அந்தப் பாடசாலையிலிருந்து வெளியேற முடியுமோ அவ்வளவு விரைவாக வெளியேறிவிட வேண்டும் என்பதே அவன் குறிக்கோள். வீட்டின் சோபாவில் கிடைக்கும் நிம்மதியும், பாதுகாப்பும் வேறு எங்கும் கிடைப்பதில்லை என்பது அவன் அவிப்பிராயம்.

குலம் ஒவ்வொரு அறையாக மின்விளக்குகளை அணைத்துக் கதவுகள் பூட்டி இருக்கிறதா என்று சரிபார்த்து வந்தான். அனைத்துக் கதவுகளும் மூடப்பட்டு மின்விளக்குகள் அணைக்கப் பட்டிருக்கிறது என்பதை உறுதி செய்தான். அதன் பின்பு பிரதான கதவைப் பூட்டினான். குலம் பிரதான கதவைப் பூட்டியவுடன் அலார்ம் இயங்கத் தொடங்கியது.

மீண்டும் வெளியே வர அடர்ந்த ஈரலிப்பான காற்று காம வீற்றோடு அவனை ஆராத் தழுவியது. ஒருகணம் ஆடை களைந்து அந்தத் தழுவலை நிர்வாணமாக அனுபவிக்க வேண்டும் போல் அவனுக்குள் ஒரு ஆசை எழுந்தது. அடுத்த கணமே விறைப்பூசியாய் குளிர் ஏறும் ஆக்கினை அவனுக்குப் புரிந்தது. வெண்முகில்கள் தாழப் பறந்து

நிலத்தைத் தொடுவது மின்னொளி பாயும் சில இடங்களில் தெளிவாகத் தெரிந்தது. பூலோகத்தில் மேல் லோகம் காணும் இந்த அற்புதங்கள் சில வேளைகளில்தான் நடக்கும். வானமும் பூமியும் முத்தமிடும் காம நர்த்தனம் அப்போது தொடரும். வாகனங்கள் ஓட்ட முடியாது திகைக்கும் கணங்கள் அது. முகில்களைச் சுவாசிக்கும் இதமான குளிர்மைக்கு எந்த விலையும் கொடுக்கலாமென அவனுக்குத் தோன்றும். ஓடி ஓடி அந்த முகில்களைப் பிடித்து அழைய ஆசை எழுந்து கூத்தாடும். பொருளாதார வளத்தை விட்டால் வாழ்வின் சிறிய இன்பங்களை அனுபவிப்பதில் ஏற்படும் பெரிய திருப்தி அலாதியானது என்பதாக அவன் எண்ணுவான்.

குலம் காரை நோக்கி நடந்தான். வீட்டிற்குப் போவதில் இருந்த சந்தோஷத்தில் விசில் அடித்த வண்ணம் தனது காரை பார்த்தவனுக்கு அதிர்ச்சி தாக்கியது. சற்று முன்பு மனப்பிரமை என்று எண்ணிய அதே வடிவிலான கார் தனது காரிற்கு அருகில் நிற்பதை அவனால் நம்ப முடியவில்லை. என்ன செய்வது எனச் சில கணங்கள் அதிலேயே நின்று சிந்தித்தான். பின்பும் அசட்டுத் துணிவில் தனது காரை நோக்கிச் சென்றான். எந்த அசுமாட்டமும் அங்கு இல்லை. பக்கத்தில் நின்ற கரைப் பார்த்தான். உள்ளே எவரும் இருப்பதாய் அவனுக்குத் தெரியவில்லை. சிறிது நேரம் அந்தக் காரைப் பார்த்தவன் பின்பு எண் தகட்டைப் பார்க்க வேண்டுமென எண்ணிக் காரின் பின்பக்கம் போக எத்தனித்தான். அப்போது தனக்குப் பின்புறமாக யாரோ ஓடி வருவது போன்று உணர்ந்தான். அடுத்த கணமே தலையிற்பட்ட அடியில் அவனுக்குக் கண்கள் மின்னின. தலை பம்பரமாகச் சுற்றியது. பூமி அண்டத்தில் பறந்துவிட அவன் மயங்கிக் கீழே பாதாளத்தை நோக்கி விழுந்தான்.

அந்த உருவம் அவனைத் தூக்கி அவனது காரின் டிக்கிக்குள் போட்டது. அவனது கைகால்களை ரேப்பால் சுற்றி இறுக்கியது. பின்பு காரை மெதுவாக இயக்கி மின்விளக்குப் போடாது நகர்த்திச் சென்றது.

இரண்டு மணித்தியாலங்கள் சென்று இருக்கும். குலத்திற்கு அறிவு வந்து பார்த்தபோது அவன் ஒரு கார் டிக்கிக்குள் கிடப்பதை அறிந்தான். அது தனது கார் என்பதையும் அவன் உணர்ந்தான். வாகனம் தொடர்ந்தும் பயணிப்பதைக் குலத்தால் உணர முடிந்தது. கை கால்களில் சுற்றப்பட்ட ரேப்பின் வலுவை அவனாற் சற்றும் அசைக்க முடியவில்லை. தலை வெடிக்கப் போகும் எரிமலையின் ஆக்ரோஷத்தோடு இடித்தது. மூச்சு முட்டிச் செத்துவிடுவேனோ என்கின்ற பயத்தில் அவனுக்கு அலமலக்கம் ஏற்பட்டது. உடம்பெல்லாம் பொட்டுப் பொட்டாக வியர்வை முத்துகள் பொங்கி எழுந்தன. அவன் அவதி அவதியாக மூச்சை இழுத்து விட்டான். என்ன நடக்கும் என்பது தெரியாத மர்மம் அவனைப் பிடித்து அழுத்தியது. அதில் இருந்து விடுபட முடியாதவனாய் அவன் துடித்தான். வாகனம் தொடர்ந்தும் ஏதோ ஒரு திசையில் பயணித்தது.

சிறிது நேரத்தில் வாகனம் அமைதியாகியது. எங்கும் அதீத நிசப்தம். தூரத்தில் ஓநாய் ஒன்று ஊளையிட்டதான சத்தம். அடுத்து என்ன நடக்கப் போகின்றது என்கின்ற சாவின் நடுக்கம் குலத்திற்கு. இருட்டுப் பூதம் நெஞ்சில் அமர்த்திக் கொண்டு இருப்பதான உணர்வு. மூச்சை நன்கு இழுத்துவிட வேண்டும் என்கின்ற அவதி. திடீரென டிக்கி சட்டெனத் திறந்திற்று. இருட்டைக் கிழித்துக் கூர்மையான வெள்ளிக் கதிர்கள் தெரு விளக்கில் இருந்து உள்ளே திடீரெனப் பாய்ந்தன. வெளியே தன்னைப் பார்த்துக்கொண்டு நின்ற இருட்டான அடையாளம் காணமுடியாத உருவத்தை மாத்திரம் அவனால் பார்க்க முடிந்தது. தலை தொடக்கம் பாதம்வரை தன்னை மறைத்த இவன் தன்னை என்ன செய்வான் என்பது குலத்திற்குப் புரியவில்லை. தன்னைக் கொலை செய்து விடுவானோ என்கின்ற பயம் அவன் குரல்வளையை இறுக்கிற்று. அவன் மூச்சு விடமுடியாமல் மீண்டும் திணறினான். அந்த உருவம் வெறியோடு அவனைப் பார்ப்பதாக அவனுக்கு இப்போது தோன்றியது.

அவன் கையில் வீடு திருத்துபவர்கள் வைத்திருக்கும் உடைத்து உடைத்துப் பாவிக்கும் பிளேற்கத்தி ஒன்று இருந்தது. அந்தக் கத்தியால் காப்பெற் போன்ற கடுமையான பொருட்களைக்கூட இலகுவாக வெட்டமுடியும் என்பது குலத்திற்கு நன்கு தெரியும். மனிதவுடலில் எலும்பு வரைக்கும் அந்தக் கத்தியால் பாயமுடியும். குலத்திற்கு அவன் என்ன செய்யப் போகிறான் என்பது விளங்கவில்லை. அவன் கத்தியோடு குனிந்தான். குலத்தின் கால்களை ஒருகையால் பிடித்து இழுத்தான். குலம் முதலில் ஆட்சேபனையாக உடலை அசைக்க நினைத்தான். பின்பு பயத்தில் அந்த எண்ணத்தை மாற்றி அப்படியே அசையாது கிடந்தான். அவன் கத்தியைக் கொடுத்து, கால்களைச் சுற்றியிருந்த ரேப்பை அறுத்தான். பின்பு கத்தியை உள்ளிழுத்து (அந்தக் கத்தி உள்ளே இழுத்து வெளியே தள்ளக்கூடியதாக இருந்தது) பௌத்திரமாகத் தனது பொக்கேற்றுக்குள் வைத்தான். பின்பு குலத்தைத் தூக்கி நிலத்தில் நிறுத்தினான். கதவைத் தெண்டித் திறப்பதற்குப் பயன்படுத்தக்கூடிய சுத்தியல் போன்ற ஆயுதம் ஒன்றைக் கையில் அவன் வைத்திருந்தான். அவனது பொக்கேற்றுக்குள் வொட்கா அரைப் போத்தல் இரண்டு கிடந்து குலுங்கின. அவன் பின்பு ரேப்பையும் ஒரு கையில் எடுத்தான். தொடர்ந்து குலத்தின் கைகளைப் பிடித்துத் தள்ளிய வண்ணம் கித்தையை நோக்கிச் சென்றான். அவனைத் தள்ளிவிட்டு ஓடலாமா என்று குலம் ஒரு கணம் யோசித்தான். அப்படி ஓடும் போது மடக்கிப் பிடித்துக் கொலை செய்தால்? என்கின்ற பயம் உண்டாகியது. உயிர் வாழ்தல் அவனுக்கு முக்கியமாகியது.

கித்தைக்குப் பின்பக்கம் அவன் குலத்தைத் தள்ளிச் சென்றான். நீரைத் தழுவி நின்ற அதன் படியில் குலத்தை ஏற்றிக் கால்களை ரேப்பால் மீண்டும் நன்கு இறுக்கினான். பின்பு தான் கொண்டுவந்த ஆயுதத்தைக் கொடுத்து கதவைத் தெண்டித் திறந்தான். கித்தையை யாரோ துப்பரவு செய்திருந்ததை அவனால் அவதானிக்க முடிந்தது. அதைப்

பற்றி அவன் கவலைப்படவில்லை. உள்ளே குலத்தை இழுத்துச் சென்று சோபா ஒன்றில் தள்ளிவிட்டான். குலம் சோபாவில் விழுந்து, பயத்தில் அசையாது அப்படியே கிடந்தான். அவன் எதுவும் கதைக்கவில்லை. ஒரு சொல்கூட குலத்தைக் கேட்கவில்லை. விழுந்து கிடந்த குலத்தின் பொக்கேற்றை ஒரு முறை அவதானமாகத் தடவிப் பார்த்தான். எதுவும் அவனுக்கு அகப்படவில்லை. தனது பொக்கேற்றில் இருந்த குலத்தின் அலைபேசியை எடுத்தான். பின்பு அதில் ஏதோ ஒரு செய்தி எழுதினான். அலைபேசியை அவதானமாக தொலைக்காட்சிப் பெட்டியில் வைத்த பின்பு, மீண்டும் குலத்திடம் வந்தான்.

குலம் எதிர்பார்க்காத வேளையில் மயிர் பிடுங்கும் வித்தை போல அவன் வாயில் ஒட்டப்பட்டிருந்த ரேப்பைக் கிழித்தான். குலத்திற்கு மீசை போனதான எரிவு. பிடிபட்ட பின்பு முதன் முதல் குலம்,

'தயவு செய்து என்னை ஒண்டும் செய்திடாத. என்னைக் கொண்டிடாத. எனக்கு பிள்ளையள் இருக்கினம்.' என்றான்.

அவன் நின்று குலத்தின் கண்களை உற்றுப் பார்த்தான். பின்பு கோபமாகக் கையை அடித்துக் காட்டினான்.

'பிளீஸ் நான் என்ன வேணுமெண்டாலும் தாறன்.'

அவன் திடீரெனக் குலத்தின் கன்னத்தில் ஓங்கி அறைந்தான். கையில் கிளவுஸ் போட்டிருந்தாலும் அதன் விசை தடையை உடைத்தது போன்று குலத்திற்கு வலித்தது. மீண்டும் கோபத்தில் காலால் எட்டி உதைந்தான். எந்தச் சந்தர்ப்பத்திலும் பேசாதவனோடு என்ன கதைப்பது என்பது குலத்திற்குப் விளங்கவில்லை. ஏன் பேசுகிறான் இல்லை என்பதும் மர்மமாகிற்று. குலம் உயிரோடு தான் திரும்பி வந்தால் செல்வச்சந்நிதி முருகனுக்குக் காவடியெடுப்பதாய் மனதில் மன்றாடினான். இதுதான் அவனது கடைசி ஆசையாக, மன்றாட்டமாக, இருக்கும் என்பதாய் அவன் எண்ணினான்.

திடீரெனப் பாய்ந்த அந்த மனிதன் குலத்தின் நெஞ்சை அமர்த்திக்கொண்டு அவன்மேல் ஏறியிருந்தான். பின்பு வொட்கா அரைப்போத்தல் ஒன்றைத் திறந்து வைத்தான். குலத்தின் மூக்கை இறுக்கிப் பிடித்த வண்ணம் அவனது வாயில் வொட்காவை எடுத்து ஊற்றினான். குலம் மூச்சு எடுப்பதற்கு முடியாத அவஸ்தையில் அதைக் குடித்தான். சிறிது நேரத்தில் விறுவிறுப்பு அவனது உடம்பில் ஏறியது. அதன் பின்பு அவன் எதிர்ப்பு பிச்சை வேண்டாம் நாயைப்பிடி என்பதாகத் தொலைந்து போயிற்று. பசியிலும், வேலைக் களைப்பிலும் ஏற்கனவே அவனது உடல் பலவீனமாக இருந்தது. அது மதுவில் மிக விரைவாக ஆட்டம் கண்டது. அவன் வொட்காவைத் தாராளமாய்ப் பருக்கினான். குலத்திற்குத் தன்னை மையப் புள்ளியாக வைத்து அவனைச் சுற்றி இருந்தவை எல்லாம் பிரபஞ்சத்தோடு சேர்ந்து சுற்றியது. எதுவுமே செய்ய முடியாமல் அசையாது கிடந்தான். சுற்றுவதை மட்டும் அவனால் நிறுத்த முடியவில்லை. இடைக்கிடை உலகத்தை விட்டுப் பறக்கும் உணர்வு அவனுக்கு

வந்தது. குலம் சிரித்தான். வாழ்வில் தான் சந்தித்த தேவதைகளின் நினைவுகள் வந்தன. அவர்கள் பறந்து வருவதாய்த் தோன்றியது. தலையைப் பிடிக்க வேண்டும். அவ்வளவு வேகமாகத் தலை சுற்றியது. கைகள் இல்லை. கட்டுகளின் இறுக்கம் சற்றும் தளரவில்லை.

பின்பு அந்த மனிதன் ஒரு பிளாஸ்ரிக் பையை எடுத்து வந்தான். குலத்தால் எழுந்து கொள்ளவோ அசையவோ முடியவில்லை. எழுந்தாலே சத்தி வரும் போல் இருந்தது. இடையில் பிளாஸ்ரிக் பையால் தலையை மூடிக் கொலை செய்யப் போகிறானோ என்கின்ற எண்ணம் வந்தது. இந்த நிலையில் அப்படிச் செய்தால் எதுவும் தெரியாது என்று எண்ணினான். அது ஆத்மாவிற்கு விடுதலை என்று எண்ணிய போது அவனுக்கு நித்திரை வந்தது.

அந்த மனிதன் குலத்தின் அருகே வந்தான். சுருக்கி வைத்திருந்த கத்தியை எடுத்தான். அதன் கூரை வெளியே தள்ளிக் குலத்தின் கழுத்தை நோக்கிக் கொண்டு போனான். பின்பு திடீரென அதைத் திருப்பிக் கையை நோக்கிக் கொண்டு சென்றான். அவனது கையைப் பிணைத்து இருந்த ரேப்பை அறுத்து அடையாளம் தெரியாதவாறு அகற்றினான். அப்படியே காலைப் பிணைத்து இருந்த ரேப்பையும் அகற்றினான். குலத்தைச் சோபாவில் நீட்டி நிமிரப் படுக்க வைத்தான். குலம் தற்போது நித்திரையாகி விட்டான். அந்த மனிதன் சுற்றியிருந்த இடத்தை மிகவும் நுட்பமாகத் துப்பரவு செய்தான். வந்ததிற்கான எல்லா அடையாளங்களையும் தன்னோடு எடுத்துக் கொண்டான். வொட்காப் போத்தலை மட்டும் துணி ஒன்றால் நன்கு துடைத்த பின்பு திறந்தபடி நிலத்தில் போட்டான். தொலைக்காட்சிப் பெட்டிமேல் இருந்த அலைபேசியை எடுத்துப் பார்த்தான். சாதுவான கவரேச் இருந்தது. இது ஒரு குறுஞ்செய்தி அனுப்பப் போதுமானது என்பதை அறிந்தவனாக ஏற்கனவே எழுதிய செய்தியை அனுப்பினான். அலைபேசியை சோபா மேசையில் வைத்து விட்டு, வேகமாக வெளியேறினான். சிறிது தூரம் நடந்து சென்று தான் ஏற்கனவே முதல் நாள் கொண்டு வந்து நிறுத்தி வைத்திருந்த காரில் ஏறி இருந்தான். அவனின் உதடுகளில் ஒரு நளினமான சிரிப்பு மெல்லத் தவண்டது. விரைவாகச் சென்று தனது மற்றைய காரை எடுக்க வேண்டும் என்கின்ற எண்ணத்தோடு அவன் ஒஸ்லோ நோக்கிப் பயணமானான்.

## அத்தியாயம் 24 நிதி

வார்டோவில் சில காலங்களுக்கு முன்பு...

வார்டோவில் அன்று தமிழ்ச்சங்கக் கூட்டத்திற்காய் மண்டபத்திற்குள் பிரவேசித்த ஹரிக்குப் பிரமிப்பாகிற்று. அங்கு பெண்கள், ஆண்கள், குழந்தைகளென மண்டபம் கொள்ளாத கூட்டம். வார்டோவில் வசிக்கும் தமிழர்கள் மொத்தமாகப் படையெடுத்து

வந்த தோற்றம். இந்தப் படையெடுப்பில் ஒளிந்திருக்கும் அரசியல் அவனுக்குப் புரிந்தது. ஹரியின் பக்கத்தில் வழமை போல எவர் ஆண்டால் எமக்கு என்ன என்பதாகப் பலர் ஒதுங்கிவிட, கடைசிவரையும் என்கின்ற மூச்சோடு வாழும் சிலரின் வரவு மட்டும். சுமன் ஹரியின் பாதுகாவலனாக இன்றும் மண்டபத்தில் நின்றான். அவன் வரவு ஒரு வகையில் பலமாகவும், மறு வகையில் பலவீனமாகவும் அமையும் என்பது ஹரியின் கவலை. சுமன் எப்போது யார்மேல் பாய்வான் என்பது யாருக்கும் புரியாது.
சுமனோடு இன்று இன்னும் ஒருவன் புதிதாக வந்திருந்தான். சுமன் அவனைக் கூட்டி வந்து அறிமுகப்படுத்தும் விதமாக,

'இவர் ராமு. இங்க புதிசா வந்திருக்கிறார். எங்களுக்கும் ஒத்துழைப்பாய் இருப்பார் அண்ண.' என்றான்.

'ஆ… அதுவும் நல்லதுதானே?' என்றான் ஹரி. அவன் முதலில் யாரையும் எடுத்தவுடன் நம்புவதில்லை. ராமுவைப் பார்த்த போது ஒருவித நம்பிக்கை அவனது மனதில் உண்டாகிற்று. எனினும் உடனடியாக எந்த முடிவுக்கும் அவன் வரவில்லை.
மண்டபம் வரவரச் சிறு சந்தையாக மாறிற்று. நிர்வாக உறுப்பினர்கள் அங்குமிங்கும் அலைந்தனர். திருவும் மாலதியும் சில நண்பர்களோடு அரட்டையடித்தனர். இவர்களின் வன்முறையைக் கண்டு பயந்து எல்லோரும் ஓடவில்லை. எனினும் சிலர் ஒதுங்கியது ஹரிக்கு வேதனையைத் தந்தது. இந்த மாற்றங்கள் இங்கு வெகு விரைவாக வந்துவிடுமென எவரும் எதிர்பார்க்கவில்லை. மாற்றம் திடீரென வந்தது. அஸ்திவாரம் போட்டவர்களின் இருப்பையே அது சுனாமியாக அள்ளிச் சென்றது.
ஹரியால் அதற்கு மேல் சிந்திக்க முடியவில்லை. ஒருவாறு கூட்டம் தொடங்கியது. இறந்த தங்கள் அமைப்பின் மாவீரருக்காய் மௌன அஞ்சலி செலுத்த எழுந்தனர். ஹரிக்கு வெளியே போக வேண்டும் போல் அந்தரமாகிற்று. அவன் வெளியே சென்றான். கணேசும் அவனோடு வெளியே வந்தான். சுமன், திரு, மாலதி இன்னும் பலர் தமது கதிரையிலேயே எழாது இருந்தார்கள்.

மௌன அஞ்சலி முடியக் ஹரியும், கணேசும் உள்ளே வந்தார்கள். நாட்டிற்காகப் போராடி உயிர்நீத்த தியாகச்சுடர்களில் ஒரு பகுதியை மாவீரர் என்றும் மறு பகுதியைத் துரோகிகள் என்றும் வரைந்தால் அதற்குத் தலை வணங்க முடியாது என்பது ஹரியின் முடிவு. இவற்றை அவதானித்த புதிய தலைவர்,

'மௌன அஞ்சலி செலுத்தும் போது எல்லோரும் எழுந்து நின்று அஞ்சலி செலுத்துவதுதானே சபை ஒழுக்கம்? மரியாதை? மனிதப் பண்பு? அந்த அடிப்படை ஒழுக்கமே இல்லாது சிலர் நடப்பது வேதனையைத் தருகிறது.' என்று கூறவும் அர்ச்சுனன் விட்ட அம்பாய்ச் சுமன் துள்ளி எழுந்தான்.

'யாருக்கு மௌன அஞ்சலி செய்தீர்கள்? இறந்த புலிகளுக்கு மட்டும் இல்லையா?' என்றான்.

'போரிலே இறந்த புலிகளுக்கும் மக்களுக்கும்.' என்று தலைவரிடம் இருந்து திருத்திய பதில் வந்தது.

'ஈழத்திற்காகப் போராடியது புலிகள் என்கிற ஒரு இயக்கம் மாத்திரம் அல்ல. அவர்களைவிட நிறையப் போராளிகள் ஈழம் என்கின்ற கனவுக்காக தங்கள் உயிரைக் கொடுத்துப் போராடினார்கள். விடுதலைக்காய் மடிவதாய் எண்ணி வீரத்தோடு மடிந்தார்கள். மௌன அஞ்சலிகள், மாவீரர்தினங்கள் அவர்கள் எல்லோரையும் உள்ளடக்கியதாக இருக்க வேண்டும். அதில்லாது ஒற்றுமை, சமாதானம் பற்றி பேசுவதில் அர்த்தம் இல்லை. உங்கள் வசதிக்கு ஏற்ப துரோகிகள் என்று அவர்களுக்குப் பட்டம் கொடுப்பது அதைவிட அதர்மமானது. அதில் உங்கள் இயலாமையிலும், வெறுப்பிலும் உதிர்க்கப்படும் சொற்களைத் தவிர வேறொன்றும் இல்லை. தமிழர்களிடம் ஒற்றுமை பற்றி பேசுபவர்கள் சமதர்மத்தை முதலில் மாவீரர்களுக்கான அஞ்சலியில் பிரயோகிக்க வேண்டும். அந்தளவு பரந்த மனம் இருந்தால் தமிழினம் இன்று உலகை ஆண்டிருக்கும்.

புலிகளும் மாற்று இயக்கங்களும் விடுதலைக்காகப் போராடியது மட்டுமல்லாது பல அப்பாவிகளைக் கொலை செய்தார்கள். சகபோராளிகளை அதிகாரப் போட்டியிலே உள்ளும், வெளியும் பலியெடுத்தார்கள். தியாகம் செய்த சில வீரர்களோடு கொலைகாரர்களுக்கும் இங்கு மௌன அஞ்சலி செலுத்தப்படுகிறது. அதேவேளை உண்மையான தியாகிகளுக்கு மௌன அஞ்சலி செலுத்தாது தவிர்க்கப்பட்டு துரோகிகளாகப் பார்க்கப்படுகிறது.

சரி... எல்லோருக்கும் சேர்த்து மௌன அஞ்சலி செலுத்துங்கள். அப்பொழுது நாங்கள் தாராளமாக எழுந்து நிற்கிறோம். தனிப்பட்ட நபர்களின் தப்புக்களை மறந்தால்... உயிரைத் துச்சமாக நினைத்து, நாட்டுக்காகப் புறப்பட்ட ஒவ்வொரு இளைஞனின் தியாகமும் அளப்பரியது. மதிப்பு அளிக்கப்பட வேண்டியது. அது எப்போது சமனாக எல்லோருக்கும் கிடைக்கிறதோ அப்போது நாங்கள் மௌன அஞ்சலி செலுத்துகிறோம். எங்களுக்கும் சபை ஒழுக்கம் தெரியும். மற்றவரின் தியாகங்களை நீங்கள் முதலில் மதிக்கப் பழகுங்கள். அப்போது நாங்களும் சபை ஒழுக்கத்திற்கு மதிப்புத் தருகிறோம். தியாகங்களைப் போற்றுகிறோம்.' எனக் கூறிவிட்டுச் சுமன் இருந்தான்.

'நாங்கள் இப்போது இறந்தவர்களுக்கு மட்டும் மௌன அஞ்சலி செலுத்துகிறோம். சரித்திரமாய்ப் போனவர்களுக்கு அல்ல.' எனத் தலைவரிடம் இருந்து பதில் வந்தது.

'ஓ... உங்கள் அகராதியில் சில காலத்திற்கு முன்பு நாட்டிற்காகப் போராடியவர்கள் சரித்திரமாகி விட்டார்களா? அவர்கள் தியாகம் மதிக்கப்படத் தேவையில்லையா? அப்படியென்றால் இக்கணம் வரைக்கும் இறந்தவர்கள் எங்களைப் பொறுத்தவரையில் சரித்திரமாய் போனவர்கள். அவர்களுக்காய் எழுந்து நிற்கத் தேவையில்லை. இனி

இறப்பவர்களுக்காய் வேண்டும் என்றால் இப்போதே மௌன அஞ்சலி செய்வோம். எழுந்து கொள்ளவா?' என்று கேட்டவண்ணம் சுமன் எழுந்தான்.

பின்வரிசையில் இருந்தவர்களும், ஹரியோடு இருந்த சிலரும் சிரித்துவிடச் சில சிறுவர்களும் அர்த்தம் தெரியாது சேர்ந்து சிரித்தார்கள். பொதுவான சிலரும் தங்களைக் கட்டுப்படுத்த முடியாது சிரித்தார்கள். தலைவர் கொஞ்சம் நிறமாய் இருந்ததால் அவரின் முகம் குங்குமமாய்ச் சிவந்ததைச் சுமன் வெகுவாக இரசித்தான். பலருக்குத் தொடக்கமே அதிர்ச்சியாய்ப் போயிற்று. சிலர் வெகு கோபத்தோடு சிரித்தவர்களைப் பார்த்து முறைத்தார்கள். நிர்வாகத்தில் இருந்தவர்களுக்கு ஆரம்பமே அபசகுனமாயிற்று. தலைவர் சிறிது நேரத்தில் தன்னைச் சமாளித்துக்கொண்டு எதுவும் நடவாத தோரணையில், 'நாங்கள் நேரத்தை வீணடிக்காமல் விடயத்திற்கு வருவோம். தேவையில்லாத விடயங்களுக்குப் பதில் சொல்லி நேரத்தை விரயமாக்க எங்களுக்கு அவகாசம் இல்லை.' என்றார்.

'ஐயா, மௌன அஞ்சலியே இப்போது தேவையில்லாத விஷயமாய் போச்சுதா? நல்ல முன்னேற்றம்தான்.' எனச் சுமன் கத்தினான்.

'சுமன் நீங்கள் இப்படிக் குழப்பினால் உங்களை மண்டபத்தை விட்டு வெளியேற்ற வேண்டி வரும்.' என்று தலைவர் எச்சரித்தார்.

'நீங்கள் செய்யும் செயலில் ஒற்றுமையும், பொது நோக்கும் இருக்க வேணும். தேவையில்லாமற் தனிப்பட்ட விதத்தில் தாக்கிக் கதைக்காமல் இருக்கிறதும் முக்கியம்.' என்றான் சுமன்.

'சரி நாங்கள் விஷயத்துக்கு வருவம்.' என்றபடி தலைவர் தொடங்கினார். ஹரி சுமனுக்கு அமைதியாக இருக்குமாறு கண் ஜாடை காட்டினான். சுமன் கதிரையில் நன்கு சாய்ந்து இருந்தான். சுமனைப் பார்த்த ஹரி 'என்றாலும் இவனுக்கு அதீத துணிவுதான்.' என மனதிற்குள் எண்ணினான்.

தலைவர் ஒரு சில விசயங்களைக் கதைத்தார். சில மேதாவிகள் எழுந்து அப்படிச் செய்யலாம் இப்படிச் செய்யலாம் என்று வாதப் பிரதி வாதங்கள் செய்தார்கள். ஹரிக்குத் தலைவர் ஏதோ ஒரு விசயத்தைச் சொல்ல நினைப்பதும், பின்பு அதற்குப் பின்னடிப்பதுமாய் அவஸ்தைப்படுவது புரிந்தது. ஏதோ ஒரு விசயம் இல்லை அது என்ன விசயமாக இருக்கும் என்பதை ஹரி ஓரளவிற்கு ஊகித்தான். அவர் வாயில் இருந்து வரும்வரை பொறுமையாக இருப்போமென அவன் முடிவு செய்தான். தலைவரின் இழுத்தடிப்பும், அதை விளங்காத மேதாவிகளின் பெரு விளக்கங்களும் பலருக்கும் சலிப்பைத் தந்தன. சுமனின் கால்கள் அத்தால் அதிவேகத்தில் புயலைக் கண்ட காற்றாடியாய் ஆடின. அதை வைத்து அவன் மனநிலையைக் ஹரி புரிந்தான்.

திடீரெனத் தலைவர் முடிவு செய்தவராய்க் கதைக்கத் தொடங்கினார்.

'பழைய நிர்வாகத்திடம் இருந்து தமிழ்ச்சங்கத்தை நாங்கள் பொறுப்பேற்கும் போது ஐம்பத்து நான்கு ஆயிரத்து அறுநூறு ரூபாய் சொறி குரோணர் இருப்பில் இருந்தது. இவ்வளவு பெரிய தொகை இங்கு வங்கியில் உறங்குவதில் யாருக்கும் எந்தப் பிரயோசனமும் இல்லை. அதை நாங்கள் ஏதாவது ஒரு நல்ல காரியத்திற்கு உபயோகிப்பதென எண்ணி இருக்கிறோம். இப்போது நாட்டில் நடக்கும் பிரச்சனையால் அவதியுறும் மக்களை எண்ணி எப்பொழுதும் துடிக்கும் நாங்கள், அவர்களின் சில துன்பங்களையாவது துடைக்க முயற்சிக்கலாமென எண்ணுகிறோம். அந்த வகையில் இந்தப் பணத்தை பிரயோசனப்படுத்த வேண்டும் என்று ஆசைப்படுகிறோம். அதற்கு எல்லோரும் ஒத்துழைப்பார்கள் என்பதில் எங்களுக்கு நல்ல நம்பிக்கை உண்டு. நாங்கள் இந்த உதவியை எங்கள் அமைப்பின் மூலம் செய்யவே உத்தேசித்து உள்ளோம். இனி உங்கள் கருத்தைச் சொல்லலாம்.' என்றார்.

சுமன் துள்ளி எழுந்தான்.

'அடியடா சக்கை எண்டானாம். அதுதானே பார்த்தன். சுத்திச் சுத்தி உங்கட திட்டம் எங்க போகுது எண்டு இப்ப எங்களுக்கு வெளிச்சமாகீட்டுது. நீங்கள் உங்கட அமைப்புக்குக் குடுக்கிறதெண்ட பெயரில ஆயுதம் வாங்க உந்தக் காசை அனுப்பப் போறியள். இதுகூட எங்களுக்கு விளங்காதே? இந்தக் காசு அங்க பட்டினி கிடக்கிற சனத்துக்குச் சோறாகப் போறேல்ல. சன்னங்களாய்த்தான் போய் இறங்கப் போகுது. சன்னங்களை ஒருவராலும் சந்தோஷமாகச் சாப்பிடேலாது. அது தைக்கிறதில அப்பாவி சனங்களின்ர இரத்தம்தான் ஆறா ஓடும். இதுக்கு நாங்களும் சிந்திக்காமல் ஒத்துழைப்புக் குடுக்கோணுமே? சங்கத்தின்ர நிர்வாகத்தைப் பிடிக்கிறதுக்கு நீங்கள் அலைஞ்ச அலைச்சலிலேயே இப்பிடி ஏதாவது திட்டம் உங்களிட்ட இருக்குமெண்டு எங்களுக்கு ஒரு அனுமானம் இருந்திச்சு. இப்ப அது வெட்ட வெளிச்சமாகீட்டுது. சனத்துக்கு அனுப்போணும் எண்டா றெட்குறோஸ் இருக்குது... இல்லாட்டி பொரூட் இருக்குது. அதில ஏதாவது ஒண்டுக்குக் குடுங்கோ. இல்லாட்டி நாங்களே நேர போவம். உந்த உங்கடை அமைப்புப் பம்மாத்து மாத்திரம் இங்க வேண்டாம்.' என்றான் சுமன். இதைக் கேட்ட குகன் முறைத்துக்கொண்டு அவசரமாக எழுந்தான்.

'என்ன இவன் நெடுகப் பிரசங்கம் செய்யிறான்? நீங்களும் அதை அனுமதிக்கிறியள்?' எனத் தலைவரைப் பார்த்துக் கோபமாகக் கேட்டான். அதற்கிடையில்,

'இவன் அவன் எண்டா எலும்பு முறிஞ்சிடும்.' என்றான் சுமன்.

'ஏலுமெண்டாத் தொடடா பாப்பம்.' எனக் குகன் கூறவும்,

சுமன் பாய்ந்து குகனை நோக்கி ஓடினான். திடீரெனக் குகனைப் பாதுகாக்க மூவர் முன்னே வந்தார்கள். அந்தத் திடீர் திருப்பம் சுமனின் வேகத்தைச் சிறிது குறைத்தது. அதற்கிடையில் ஹரியும் கணேசும் சுமனைப் பாய்ந்து பிடித்தார்கள். பின்பு அவனைச்

சமாதானம் செய்து அவனது இடத்தில் இருத்தினார்கள். இவன் ஒரு வீம அவதாரம். சிலவேளை மட்டும் அர்ச்சுனன் போல என்று ஹரி எண்ணினான்.
சற்று அமைதியானதைத் தொடர்ந்து தலைவர் மீண்டும் பேசினார்.

'இப்ப நாங்கள் சண்டை பிடிக்க இங்க வரேல்ல. சண்டை பிடிச்சு ஒரு நல்ல காரியத்தைக் குளப்பிறதும் நல்லதில்லை. தயவு செய்து எல்லாரும் அமைதியாக இருங்கோ. நாங்கள் இதுக்கு ஜனநாயக முறைப்படி வாக்கெடுப்பு வைப்பம். அதில வாற பெரும்பான்மைப்படி செய்வம்.' என்றார்.
ஹரி அப்பொழுது எழுந்தான்.

'சுமன் சொன்னமாதிரி இலங்கைக்குக் காசு அனுப்பிறதெண்டா ஒரு பொதுவமைப்பு மூலம் அனுப்போணும். எங்கட அமைப்புக்கள் நிறைய இருக்கலாம். உண்மையாகவே அவர்கள் உதவி செய்யலாம். எது எப்பிடி இருந்தாலும் ஏற்கனவே அவர்களுக்கு அரசியற் சாயம் பூசப்பட்டிருக்கிறது. எனவே பொதுப் பணத்தை எடுத்து நீங்கள் அவர்களிடம் கொடுப்பதை எல்லோராலும் ஏற்றுக்கொள்ள முடியாது. இந்த நாட்டைச் சார்ந்த அரசியல் சாயம் பூசப்படாத நிறைய அமைப்புக்கள் இலங்கையில வேலை செய்கின்றன. அந்த அமைப்புக்களில் ஏதாவது ஒரு அமைப்பிடம் அந்தப் பணத்தைக் கொடுக்கலாம். அப்பிடி செய்தால் அதற்கு எவரும் மறுப்புக்கூற முடியாது. அது ஒரு பிரச்சனையாகவும் இருக்காது.' என்றான்.

'ஹரி சொல்லுறதும் நியாயம்தான். நாங்களும் அப்பிடிப் பொதுவான அமைப்பு ஒன்றிற்கு வழங்கலாம் என்று யோசிச்சம். ஆனா இவர்கள் நிர்வாகத்திற்கே முப்பது நாற்பது வீதமான பணத்தைச் செலவழிச்சுப் போடுவாங்களாம். மிகுதி எவ்வளவு எங்கட மக்களுக்குப் போய்ச்சேரும்? அதுதான் நாங்கள் எங்கட அமைப்பிட்ட கொடுக்கிறதா முடிவு செய்திருக்கிறம்.' என்றார் தலைவர்.

'இங்கு நிர்வாகத்துக்கு அநியாயமாகச் செலவு செய்கிறார்கள் என்று நினைத்தால் இலங்கையில் நேரடியாக நின்று உதவி செய்கின்ற அமைப்பைக் கண்டுபிடித்து, அவர்களுக்கு அங்கே கொடுப்பதாக அந்தப் பணத்தை அனுப்பலாம். இல்லாவிட்டால் ஏதாவது அனாதை இல்லம் போன்ற அமைப்புக்கு நேரடியாக உதவிசெய்யலாம். அதில யாருக்கும் ஆட்சேபனை இருக்க முடியாது.' என்றான் ஹரி.

'அதெல்லாம் நடைமுறையில நிறையச் சிக்கலைக் கொண்டுவரும். பெடியளின்ர இடத்துக்குள்ள போய் உதவி செய்யிறத்துக்கு எங்கடை அமைப்பால மட்டும்தான் முடியும். இல்லாட்டி இழுபாடாகத்தான் இருக்கும்.' என்று பிடியைக் கொடுத்தார் தலைவர்.

'இப்ப நீங்கள் கதைக்கிறது எனக்கு விளங்கேல்லை. நாங்கள் யுத்தத்தால கஸ்ரப்படும் தமிழருக்குத்தானே உதவி செய்யப் போகிறம்? அவர்கள் எங்கு இருந்தால் என்ன?

நிறையப்பேர் புலிகளின் கட்டுப்பாட்டுப் பகுதிக்கு வெளியே இருக்கிறார்கள். அவர்களுக்கு முதலில் உதவி செய்யலாம் தானே? இல்லை என்றாலும் புலிகளின் பகுதிக்குள் இருக்கிறவர்களுக்கு நாங்கள் நேரடியாக உதவி செய்வதை அவர்கள் ஏன் தடுக்க வேண்டும்? எனக்கு அது விளங்கவில்லை. மக்களுக்காகத்தானே இந்தப் போராட்டம்? அதே மக்களுக்கு நாங்கள் உதவப் போகின்றோம். அதுக்கேன் அவர்கள் குறுக்கே நிற்கப் போகின்றார்கள்? நீங்கள் பகிடியா விடுறீங்கள்? இல்லாட்டிச் சிலவேளை போராட்டம் எண்டா என்ன எண்டு எனக்கு விளங்கேல்லையோ... என்னவோ?' என்றான் ஹரி.

இடையில் குகன் புகுந்தான்.

'இதென்ன அண்ண தேவையில்லாத விளக்கெண்ணெய் விளக்கங்கள் கேட்டுக் கொண்டு இருக்கவேண்டி இருக்குது? பேசாமல் வாக்கெடுப்பை வைச்சிட்டு, எங்கட அலுவலைப் பார்க்கப் போவமே? சும்மா இவைக்கு மினக்கெட்டு விளக்கமும் சொல்லி, அதுக்குப் பதிலாகப் பிரசங்கமும் கேட்கிறம். நீங்கள் சட்டுப்புட்டெண்டு வாக்கெடுப்பை வையுங்க அண்ண.' என்றான்.

'வாக்கெடுப்பை வைச்சுக் காசு அனுப்பிப் போடுவியளே? அது நடக்கிறதையும் பாப்பம்.' எனச் சுமன் எழுந்து நின்று கத்தினான்.

'நீ ஜனநாயக விரோதமாக கதைக்கிறா. காசு அனுப்பினாக் கிழிச்சுப் போடுவியே? நாலுபேர் இருந்து என்ன செய்வியள் எண்டு பார்ப்பம்? நீங்கள் எல்லாம் தமிழரையே காட்டிக்குடுக்கிற இனத்துரோகிகள்.' என்றான் குகன்.

'ஓ நீங்கள் பெரிய தியாகிகள் எண்ட நினைப்பு. பெரிய ஒரு ஜனநாயகப் பாதுகாவலருக்குக் காசு அனுப்பப் போறியள். ம்... உழைப்புக்காக அம்மாவையும் சகோதரியையும் நடுத்தெருவில விட்டிட்டு நக்க ஓடியந்த கூட்டம்தானேடா நீங்கள்? நக்க வந்த இடத்தில பெரிய தியாகிகள் எண்ட நினைப்பும்... கதையும். தியாகம் செய்யிறவன் ஊரில நின்றிருப்பான். மற்றவனைத் தடுத்திருக்க மாட்டான். தனக்குத் தனக்கு எண்ட சுயநலம் இருந்திருக்காது. அவன் உரிமைக்காக உயிரை விட்டிருப்பான். தாங்கள் மாத்திரமே போராடோணும், தான் மாத்திரமே ஏக தலைவனாக இருக்கோணும் எண்ட ஒரு பாசிச இயக்கத்தால தியாகம் செய்திருக்க முடியாது. வேணும் எண்டாப் தியாகம் செய்யிறதாப் பலிகுடுத்திருக்கலாம். அதுதான் நடந்தது. நடக்குது. அதுக்குப் பொதுசனத்தின்ர காசையே களவாக அனுப்பிறதுக்கு தப்பி ஓடியந்த ஒரு களவாணிக் கூட்டம் இங்க அலையுது. அவைக்கு ஒரு வாக்கெடுப்பு வேற... வாக்கெடுப்பு வையுங்கோ. காசு அனுப்பிப் பாருங்கோ. வார்டோவில என்ன நடக்குமெண்டு அப்ப உங்களுக்குத் தெரியும். து... மானம் கெட்டவங்களே...' எனச் சுமன் கோபமாகக் கத்தினான்.

‘இவனுக்கு அடிபோடுங்கடா.’ சங்கர் கத்த ‘ஓ இவனுக்கு அடிபோடுங்க, அடிபோடுங்க.’ எனப் பல குரல்கள் ஒலித்தாலும், ஒருவன் மட்டுமே எழுந்து வந்து சங்கரைப் பார்த்து ‘அடி போடுவமோ’ என்று கேட்டான்.

‘அப்ப நீங்க அடிபடுங்க நாங்கள் போறம்.’ என்று கூறிய தலைவர் மேடையால் இறங்கினார். அதைப் பார்த்த சங்கர் ‘பொறுங்கண்ண… பொறுங்க… நாங்கள் ஒண்டும் செய்யேல்ல. நீங்கள் கூட்டத்தைத் தொடர்ந்து நடத்துங்கோ.’ என்ற வண்ணம் இருக்கையில் அமர, குகனும் இருக்கையில் அமர்ந்தான். சபையின் சலசலப்புச் சிறிது நேரத்தின் பின்புதான் அடங்கியது.

சபை அமைதி அடைந்ததும் ஹரி எழுந்து,

‘இப்பிடிப் புடுங்குப்படுகிறதிலும் பார்க்க இந்தப் பிரச்சனையைத் தற்போதைக்குத் தள்ளி வைக்கலாம்தானே? பிறகு ஆறுதலாக மாற்று வழி இருக்குதாவென்று கண்டுபிடிக்கலாம். அதுக்குப் பிறகு ஒரு கூட்டத்தைக் கூட்டி முடிவெடுக்கலாம். இப்ப ஏன் தேவையில்லாமல் நிண்டு எல்லாரும் ஆராய்ச்சி செய்யிறதாகவும், கூப்பாடு போடுறதாகவும் இருக்கவேணும்? சனத்துக்கு உதவி செய்யோணும் எண்டதில யாருக்கும் மாற்றுக் கருத்து இருக்க முடியாது. அது தவறான பாதைக்குப் போகாமல் சனத்துக்கு ஒழுங்காகக் கிடைக்கோணும் எண்டதுதான் எல்லாருடைய ஆதங்கமும். நீங்கள் சரியான வழியிலதான் அனுப்பிறியள் எண்டு நிரூபணமானால் யாரும் எந்தக் கேள்வியும் கேட்க மாட்டினம்.’ என்றான்.

‘இதென்ன கூத்து. அங்க சனம் பட்டினி கிடந்து சாகுது. இஞ்ச இவர் சரியான வழி எது எண்டு நிரூபிக்கப் போறாராம். றோம் நகரம் எரியேக்க யாரோ பிடில் வாசிச்ச கதையாட்டம் இருக்குது இது. வாக்கெடுப்பில சனம் ஒத்துக் கொண்டால் பேசாமல் காசை அனுப்பி விடோணும். தேவையில்லாமல் நேரத்தை வீணடிக்க முடியாது.’ எனச் சங்கர் கூறி முடிக்கவும்,

‘கொஞ்ச நேரம் எல்லோரும் பொறுமையாக இருங்க. நாங்கள் முதல்ல ஒரு முடிவுக்கு வாறம். இப்பிடியே கதைச்சுக்கொண்டு இருந்தா இதுக்கு ஒரு முடிவும் வராது. தயவு செய்து அமைதியாக இருங்க.’ எனக் கூறிய தலைவர் ஒலிவாங்கியைப் பொத்திய வண்ணம் நிர்வாகக் குழுவோடு சிறிது நேரம் உரையாடினார். பின்பு அவர்கள் ஒரு முடிவுக்கு வந்திருப்பதை உரைக்கத் தொடங்கினார்.

‘இப்பிடி இங்கு சிலர் குதற்கப்படுவதில் அர்த்தம் இல்லை. இது ஒரு ஜனநாயக நாடு. இது ஒரு ஜனநாயக அமைப்பு. இங்கு ஒரு பிரச்சனை வந்தால் அதைத் தீர்த்துக் கொள்ள வாக்கெடுப்பு வைப்பதைவிடச் சாலச்சிறந்த மாற்று வழி ஏதும் இல்லை. நாங்கள் இந்தப் பிரச்சனையை வாக்கெடுப்பின் மூலம் தீர்த்துக் கொள்வோம்.’ என்றார்.

‘அப்ப வாக்கெடுப்பு வைச்சுப் புலிக்குக் காசு அனுப்பப்போறியள்? நாங்கள் உருவாக்கின தமிழ்ச்சங்கத்தில இருந்து, நாங்கள் சேர்த்து வைச்சிருந்ததையே எடுத்து,

இயக்கத்துக்கு ஆயுதம் வாங்க, மனிதாபிமான உதவியெண்ட பெயரில அனுப்பப் போறியள்? நாங்களும் ஜனநாயகத்துக்கு மதிப்பு குடுக்கிறமெண்டு வாயைப் பொத்திக்கொண்டு இருக்கோணும். இதுதானே உங்கடதிட்டம்?' எனச் சுமன் கத்த, 'அவனுக்கு அடிபோடுங்கோ.' என்ற வண்ணம் குகன் சுமனை நெருங்க, சங்கரும் அவனை நோக்கி ஓடிவர, அவனோடு இன்னும் சிலர் சேர்ந்து கொண்டார்கள். சுமன் அவ்வளவு பெயரைக் கண்டும் பயப்படாது 'வாடா வா…' என்ற வண்ணம் அதிலேயே நின்றான். ஹரியும் கணேசும் இன்னும் இருவரும் சுமனுக்கு முன்பு போய் நின்றார்கள். அப்பொழுது ராமு இரட்டை வீமனைப் போல எழுந்து வந்து இரு அணிக்கும் நடுவே நின்றான். அவனது உருவத்தைப் பார்த்துக் குழம்பிப் போன குகனும், சங்கரும் அப்படியே நின்றுவிட, ராமு அதைப் பயன்படுத்தி, 'வாக்கெடுப்பு நடத்திறதெண்டு முடிவு பண்ணியாச்சு. அதுக்கு மேல இதுக்க நிண்டு அடிபடுகிறது உங்களுக்கு அழகில்லை. நீங்க தயவு செய்து வெளியால வாங்க. மேற்கொண்டு என்ன செய்யலாம் எண்டுறதைக் கதைப்பம்.' எனக் ஹரியைப் பார்த்து கேட்டான். பின்பு குகனையும், சங்கரையும் பார்த்து 'நீங்கள் போய் உங்கட இடத்தில இருங்க. அப்பிடி இல்லையெண்டா முதல்ல என்னிட்ட வாங்க.' என்றான். அவர்கள் மெதுவாகத் தங்களது கதிரைகளை நோக்கிச் சென்றார்கள்.

ஹரிக்கு ராமு சொன்னது சரியாகப்பட்டது. சுமனை இழுத்துக் கொண்டு வெளியே சென்றான். அவர்களைத் தொடர்ந்து பன்னிரண்டு ஆட்கள் அந்த மண்டபத்தை விட்டு வெளியேறினார்கள். வெளியே வந்த சுமன் 'இவங்களைச் சும்மா விடக்கூடாது.' எனக் கத்தினான். குப்பைவாழியைக் கோபத்தில் ஓடிப்போய் எட்டிக் காலால் உதைத்தான். அது அவலச் சத்தத்தோடு உருண்டு போயிற்று. வரப்போகும் கேட்டிற்காக வருத்தத்தோடு இப்போதே அது அந்த நகரில் தனித்து ஓலமிட்டது.

## அத்தியாயம் 25 கைது

குலத்திற்கு நினைவு வந்தபோது இரண்டு பொலிசார் அவனுக்கு விலங்கு பூட்டி அந்தக் கித்தையில் (சிறு குடில்) இருந்து அழைத்துச் சென்றனர். இன்னும் வெறி முறியாத மயக்கம் தலையைப் பிடித்து பூமியை நோக்கி அழுத்தியது. தலைக் கனத்ததால் நடக்கும் போது காற்றில் பறப்பதாகக் கால்கள் நிலத்தைத் தொடாத உணர்வு இடையிடையே எட்டிப் பார்த்தது. 'யாரோ என்னை அடித்தான். கைகாலைக் கட்டிக் கார் டிக்கியில் அடைந்து இங்கு கொண்டு வந்தான். பின்பு வொட்காவை வலோக்கரமாய் பருக்கினான். இப்பொழுது பொலிஸ் என்னைக் கைது செய்து போகிறது. என்ன நடக்கிறது இங்கு?' என்பதாக எண்ணியவனுக்கு இருந்த தலையிடி இன்னும் பத்து மடங்காக உச்சமாகியது. தலைக்குக் கையைக் கொடுப்பதற்குக்கூடக் கையில்லாது, அவனது கையைப் பொலிஸார் பின்புறமாக விலங்கு பூட்டி இருந்தனர்.

அவர்களுக்குத் தனது கையின் மேல் என்ன வெறுப்பு என்பது அவனுக்குப் விளங்கவில்லை. அவனை அழைத்துச் சென்ற பொலிஸார் நீல ஒளி வீசிய பொலிஸ் காரிற்குள் அவதானமாக இருக்க வைத்துவிட்டு அதை ஓட்டிச் சென்றார்கள். ஒரு மணித்தியால பிரயாணத்தின் பின்பு சிறிய காவல் நிலையத்தின் முன்பு அந்தப் பொலிஸ் கார் நின்றது. குலத்தைக் காரில் இருந்து இறக்கிய அவர்கள், அங்கிருந்த ஒரு 'கிளாத்செல்லில்' (வழுவழுப்பாக இருக்கும் தற்காலிகச் சிறை அறை) அடைத்தார்கள். பின்பு கைவிலங்கை விலக்கினர். அவன் பல மணித்தியாலத்திற்குப் பின்பு கையை நிமிர்த்தி உடல் அலுப்பு முறித்தான். அவனுக்குக் குடிப்பதற்கு நீர் மட்டும் கொடுக்கப்பட்டது. என் சுதந்திரம் எதற்காகப் பறிபோனது? என்று நினைத்தவனுக்கு அந்தரமாய் இருந்தது. பின்பு அங்கு நிசப்தத்தைத் தவிர எதுவும் இல்லை என்பதான பேரமைதி உருவாகிற்று. காற்றோடு கதைபேசும் மன நிலை அவனிடம் இருக்கவில்லை. பிள்ளைகளையும் வீட்டையும் எண்ண அவனுக்குக் கவலை வந்தது.

இப்போது கைகளால் தலையைப் பிடித்த வண்ணம் அவன் சீமேந்தால் கட்டப்பட்ட கட்டிலின் மேல் போடப்பட்டிருந்த மெத்தையில் இருந்தான். அந்த அறையில் அதைவிட ஒரு கழிப்பிடம் இருந்தது. நிலம் சுவர் ஆகியவற்றிற்கு சீமேந்து போன்ற ஒரு வழுவழுப்பான பெயின்ற் பூசப்பட்டிருந்தது. அவனுக்குத் தலை தொடர்ந்தும் வெடிப்பதாய் இடித்தது. போதையும் மயக்கமும் அவனைத் தொடர்ந்தும் தள்ளி விழுத்தியது. அவன் திரும்பவும் நித்திரைகொண்டான்.

மீண்டும் அவனுக்கு விழிப்பு வந்தபோது விடிந்து விட்டது. சாப்பாடு கொண்டு வந்து கொடுத்தார்கள். இருந்த பசியில் அவன் அதை விரைவாகச் சாப்பிட்டு முடித்தான். அடுத்த பத்து நிமிடத்தில் அவன் இன்னொரு அறையில் இருக்க வைக்கப்பட்டான். இரண்டு கதிரைகளும் ஒரு மேசையும் அங்கு இருந்தன. சிறிது நேரத்தில் ஒரு பொலிஸ் அதிகாரி உள்ளே வந்தார். அவர் தன்னை அறிமுகம் செய்து கொள்ளவில்லை. அவர் பார்வையில் குரோதமும், கோபமும் இருப்பதாய்க் குலத்திற்குத் தோன்றியது. குலம் பயத்தில் பேசாது இருந்தான். அந்த அதிகாரி சிறிது நேரம் பேசாது இருந்துவிட்டு,

'உன்னுடைய பெயர் என்ன?' என்றார்.

'முருகேசு குலேந்திரன்' என்றான் குலம்.

'பர்சூன் நும்மர்?' (அடையாள எண்)

'**06087029384**'

'முகவரி'

'ஏர்லாண்ஸ்துவய்யன் **127,0876** ஒஸ்லோ'

‘எதுக்குச் சிவகரனைக் கொன்றாய்? அதுவும் அவ்வளவு கொடூரமாய் ஏன் அவனைக் கொலை செய்தாய்? உனக்கும் அவனுக்கும் இடையில் அப்பிடி என்ன பகையிருந்தது? எவ்வளவு காசு அவன் உனக்குத் தரவேண்டும்? எவ்வளவு பணம் நீ அவனிடம் இருந்து எடுத்தாய்?’ என அவன் திணறும் வகையில் கேள்விகளை அடுக்கினார் அந்த அதிகாரி.

‘நான் சிவகரனைக் கொல்லேல்ல. நான் சிவகரனைக் கொல்லேல்ல. நான் அட்வகேற் இல்லாமல் உங்களோட கதைக்கமாட்டன்.’ எனக் குலம் கத்தினான்.

‘ஓ உனக்கு அட்வகேற் தேவைப்படுகுதா? தராளமாய் நீ அட்வகேற் வந்தபிறகு கதைக்கலாம். ஆனா ஒண்டு... ஆதாரங்களை முன்னுக்கு வைக்கப் போறது நாங்கள். அப்பிடி அது நிரூபிக்கப்பட்டால் உன்னை நாடுகடத்திற அளவுக்கு எங்களால செய்யமுடியும். நான் யார் என்பதை இந்தா பார்த்துக்கொள்’ என்று கோபமாகக் கூறிய அவர் ஒரு அடையாள அட்டையைத் தூக்கி குலத்தின் முன்பு எறிந்தார்.

அதில் பெ.எஸ்.தே(பீ.ஸ்.ரீ) யைச் சார்தவர் என்பதையும், அவர் பெயர் ஸ்தைனார் கன்சன் என்பதையும் குலம் அறிந்தான். அதை அறிந்த குலத்திற்கு மிகையான நடுக்கம் ஏற்பட்டது. இவர்கள் ஏன் தன்னை விசாரிக்கிறார்கள் என்பதில் அவன் பெரிதும் குழம்பினான். பெ.எஸ்.தே பயங்கரவாதிகளைத், தீவிரவாதிகளை, உளவாளிகளை அல்லது பொலிஸாரை விசாரிப்பார்கள். அவர்கள் தன்னை எதற்காக விசாரிக்க வேண்டும் என்பது அவனுக்குப் விளங்கவில்லை. தன்னையும் பயங்கரவாதியென எண்ணி விட்டார்களோ என்பதாக நினைத்து அவன் குழம்பினான்.

‘எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. எதற்காக என்னை நீங்கள் விசாரிக்கிறீர்கள்? தயவுசெய்து அதைக் கூறமுடியுமா?’ என்றான் குலம்.

‘சொல்லலாம். அதற்கு முதல் நான் கேட்கும் கேள்விகளுக்கு நீ பதில் சொல்ல வேண்டும்’

‘நான் அட்வகேற் இல்லாமல் எந்த ஆதாரத்தை வைத்து உங்களோடு கதைக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறீர்கள்?’ என்றான் குலம்.

‘ஆதாரமா? இந்தாபார்’

அவர் தனது கையில் வைத்திருந்த அலைபேசியில் இருந்த ஒரு குறுஞ்செய்தியைக் காட்டினார். அதில் ‘நான் சிவகரனைப் பணப்பிரச்சனையில் கொன்றுவிட்டேன். அதற்காக வருத்தம் அடைவதோடு அதை ஒப்புக்கொள்கிறேன். அத்தோடு என்னை வந்து அவனது கித்தையிலேயே (சிறுகுடிலில்) கைது செய்யுமாறு கேட்டுக்கொள்கிறேன்’ என நொஸ்கில் எழுதப்பட்டிருந்தது.

குலம் அதை வாசித்து முடிந்ததும் அவன் அது எந்த எண்ணில் இருந்து வந்திருக்கிறது என்பதைக் காட்டினார். பின்பு இன்னுமொரு அலைபேசியை எடுத்தார். அது குலத்தின் அலைபேசி. அதில் அனுப்பப்பட்ட செய்தி, அதன் நேரம் என்பதைக் காட்டினார். குலத்திற்கு முதலில் ஒன்றும் விளங்கவில்லை. பின்பு மெதுவாக அது புரிந்தது. கடத்தி வந்த ஆசாமி தன்னை அழகாக மாட்டி வைப்பதற்கான வேலையை நுட்பமாகச் செய்துவிட்டுப் போயிருப்பது அவனுக்குப் புலப்பட்டது. எப்படி இதில் இருந்து தப்பிப்பது என்பது மட்டும் அவனுக்குப் விளங்கவில்லை.

'இப்ப என்ன சொல்லுறா? ஆதாரம் போதுமா? இதை நாங்கள் கோட்டில் கொடுத்தோம் என்றால் அவர்கள் முழுமையாக இதை ஏற்பார்கள். உனக்குக் குறைந்த பட்சம் கொலைக்காவது தண்டனை கிடைக்கும். அது முடிந்து வெளியே வரும்போது உன்னை நாடுகடத்த ஏற்பாடு நடக்கும்'. என்றார் அந்த அதிகாரி.

'கடவுளே… நான் கொலை செய்யேல்ல. எனக்கு அதைப்பற்றி ஒண்டும் தெரியாது.' என்று குலம் அரற்றினான்.

'அப்ப எதுக்கு அந்தக் கித்தைக்குப் போனாய்? அதுவும் உன்ர காரில போயிருக்கிறா. அங்க சோகத்தில வொட்கா குடிச்சிருக்கிறாய். பிறகு வெறியில குறுஞ்செய்தி அனுப்பி இருக்கிறாய். நீ என்ன பைத்தியமா? ஏன் இதையெல்லாம் செய்தாய்?'

'நல்ல கேள்வி. நான் என்ன பைத்தியமா? அதுதான் சொல்லுறன் நான் அதைச் செய்யேல்ல. செய்திருந்தா நீங்கள் சொல்லுறமாதிரி நான் பைத்தியமாய் இருந்திருப்பன்.'

'ம்… சொல்லு?'

'நான் அப்பிடி சிந்திக்காமல் செய்வனா? அல்லது யாராவது இப்பிடி முட்டாள்த்தனமாச் செய்வினமா?' என்றான் குலம். அந்த அதிகாரி யோசனையோடு,

'கொலை செய்தவன் யாரும் கொலையை ஒத்துக் கொள்ளுறேல்ல. அது தெரியுமா உனக்கு? இப்ப சொல்லு… ஏன் அவனைக் கொலை செய்தாய்?'

'நான் அவனைக் கொலை செய்யேல்ல.'

'அப்ப எதுக்கு ஒப்புக்கொண்டு குறுஞ்செய்தி அனுப்பினாய்?'

'நான் அதை அனுப்பேல்ல?'

'இப்ப என்ன சொல்ல வாறாய்?'

'நான் அற்வகேற் இல்லாமல் கதைக்கேலாது.'

'நீ அற்வகேற்ரோட கதைச்சாலும் இந்த ஆதாரத்தை மாத்தேலாது. இப்ப என்னோட கதைச்சா உனக்குச் சாதகமாக நான் ஏதும் செய்யலாமோ எண்டு பார்க்கலாம். தண்டனைக் காலத்தைக் குறைக்க சிபாரிசு செய்யலாம். இதெல்லாம் உன்ர நன்மைக்காகத்தான் நான் சொல்லுறன். இப்ப சொல்ல விருப்பம் எண்டா மட்டும் சொல்லு. இல்லாட்டி நான் போகவேணும். எனக்கு வேற வேலை இருக்குது.'

குலம் பேசாது சிறிது நேரம் சிந்தித்த வண்ணம் இருந்தான். ஸ்தைனார் கன்சன் கோபத்தோடு எழுந்தார். அவர் எழுந்த வேகத்தில் குலம் திடுக்கிட்டுப் போனான். அவரைப் போகாது தடுப்பது போலச் 'சொல்லுறன். எல்லாம் சொல்லுறன்' என்றான் குலம்.

'சரி உன்னைத் தயார் படுத்து. நான் இப்ப வாறன்' என்று கூறிய ஸ்தைனார் வெளியே சென்றார். வரும்போது இரு கப்களில் கோப்பி கொண்டு வந்தார். பின்பு அதில் ஒன்றைக் குலத்திற்குக் கொடுத்தார்.

'தக்'

'ஒகே இப்ப சொல்லு. எதுக்கு சிவகரனைக் கொன்றாய்?'

'நீங்க பிழையா விளங்கி வைச்சிருக்கிறீங்க. எனக்கும் சிவகரனின் கொலைக்கும் எந்தத் தொடர்பும் இல்லை.'

'ம்...'

'நான் நேற்றுப் பின்னேரம் வேலைக்குப் போனேன்' குலம் நடந்ததை ஒன்றும் விடாமல் கூறினான். அந்த அதிகாரியும் அவதானமாய் அவன் சொல்வதைச் செவிமடுத்தார்.

'அப்ப நீ உன்ர காரை ஓட்டிக்கொண்டு போகேல்ல?'

'இல்ல. அடிபட்ட பிறகு எனக்கு என்ன நடந்ததெண்டு தெரியாது. முதல் முதல் விழிப்பு வந்த போது கார்டிக்கிக்க கிடந்ததுதான் எனக்குத் தெரியும்' என்றான் குலம்.

'கித்தையில அவனைப் பார்த்தியா?'

'பார்த்தன். ஆனா அவன் முகத்திற்கு தொப்பி போன்ற முகமூடி அணிந்து இருந்தான். உடல் பூராகவும் கிறிப்போஸ் மாதிரி உடையணிந்திருந்தான். நல்ல உயரமும் உடம்புமாய் இருந்தான். கண்கள் தமிழரின் கண்கள் போலவே இருந்தன. அவன் மிகவும் கெட்டிக்காரன் போலத் தெரிகிறது. நிதானமாக, நுணக்கமாக, பதட்டமில்லாது அலுவல்களைச் செய்தான்'

'ம்... உனக்கு யாரிலையாவது சந்தேகமா?'

'இல்ல'

'பொய் சொல்லாத. நீயும் புலிக்குப் பணம் சேர்த்ததில ஒரு ஆள். நிறைய இடங்களில போஸ் பண்ணிப் பணம் வாங்கினதா எங்களிடம் தகவல் இருக்கிறது. சில இடங்களில பொலிசில முறைப்பாடே செய்து இருக்கினம். நீ ஒஸ்லோவில தாதா மாதிரிப் பணம் சேர்த்ததாக எங்களிட்ட தகவல் இருக்குது'

'ஆனா நான் பெரிசா ஒருத்தரோடையும் முண்டுப்படேல்ல. என்னை இவ்வளவுக்கு யார் மாட்டி விடுவாங்கள் எண்டு எனக்குத் தெரியேல்ல.'

'சரி நீ சொல்லுறது பொய்யா உண்மையா எண்டுறதை விரைவில கண்டு பிடிப்பம். நீ பொய் சொன்னா இதில இருக்கிற ஆதாரம் போதும்.' என அலைபேசியைக் காட்டியவர் அந்த அறையை விட்டுப் புயலாகப் புறப்பட்டுச் சென்றார்.

## அத்தியாயம் 26 ஹரியின் வீட்டில்

வார்டோவில் சில காலங்களுக்கு முன்பு...

அவமானம், கையாலாகாமை, தாங்கள் சேர்த்த பணத்தைக் கண்முன்னே அவர்கள் துஷ்பிரயோகம் செய்வதைத் தடுக்கமுடியாமை என்பனவற்றை எண்ணிக் ஹரி குமுறினான். துவண்டான். எப்படி வந்தார்கள்? என்ன செய்தார்கள்? என்பன கனவு போல வதைக்க, அதிகாரமும், கபடத்தனமும் சுற்றி வளைத்துச் சூறையாடியதான உணர்வில் துவண்டான். ஒருவரால் ஏற்க முடியாத காரியம் இன்னொருவரால் விரும்பும் காரியம் ஆகலாம். அது அவரவர் தளத்தையும் மனச்சாட்சியையும் இரையாக்கி உருவாகும் விம்பத்தைப் பொறுத்தது. அவரவர் மூளையின் கற்பிதம். எது எப்படி இருந்தாலும் பொது நியாயம் என்பதாக ஒன்று உண்டென அவன் நம்பினான். சேர்த்து வைத்திருந்த பணத்தைக் கபடமாகத் தட்டிப் பறித்து, தாங்கள் மனதால் சம்மதம் கொடுக்க முடியாத ஒரு காரியத்திற்கு அவர்கள் பயன்படுத்துவது மேலும் வேதனையைத் தந்தது. ஹரி அப்படியே சிறிது நேரம் திகைப்போடு நின்றான். சுமன் கோபத்தில் மேலும் குப்பை வாளியை ஓடியோடித் துரத்தித் துரத்தி உதைத்தான். பின்பும் நிலமையைச் சமாளிக்க வேண்டும் என்பதற்காகச் சுமனையும், கணேசையும் தனது காரில் ஏற்றிக்கொண்டு ஹரி சென்றான். அதைப் பார்த்த ராமுவும் அவர்கள் பின்னால் வந்தான். மற்றவர்கள் குளிரில் நிற்க விரும்பாதவராய் தமது வாகனங்களில் ஏறிப் புறப்பட்டார்கள்.

ஹரி தனது வீட்டிற்கு முன்பு காரை நிறுத்தினான். ராமுவும் தனது வாகனத்தை அங்கு கொண்டுவந்து நிறுத்தினான். பின்பு ஹரி எல்லோரையும் அழைத்துக் கொண்டு தனது வீட்டிற்குள் சென்றான். ஹரியிடம் ஆறு போத்தல் மக்வியர் இருந்தன. துறம்சோ என்னும் இடத்தில் தயாரிக்கப்படும் இந்த வியருக்குத்தான் வடநோர்வேயில் அதிக கிராக்கி உண்டு. அதிலும் ஒரு தேசிய விசுவாசம் அப்பகுதி மக்களிடம். தங்கள் பொருட்களே சிறந்தது என்கின்ற எங்களிடம் இல்லாத அசைக்க முடியாத நம்பிக்கை. நாங்கள் எங்களை நம்புவதில்லை. அந்த ஆறு வியர்ப் போத்தல்களும் போதாது என்பதைப் புரிந்திட்ட சுமன் 'அண்ண நான் கொஞ்ச வியர் எடுத்து வாறன். அப்பதான் கொஞ்சம் டீப்பா நாங்கள் என்ன செய்யோணும் எண்டதைக் கதைக்கலாம்.' என்று கூறிவிட்டுப் பதிலுக்குக் காத்திராது புறப்பட்டான். பின்பு போக்குவரத்தை நினைத்தவனாய் ராமுவைப் பார்க்க, ராமு அவனோடு புறப்பட்டுச் சென்றான்.

அவர்கள் போகவும் ஹரி பின்லாண்டில் வாங்கிவந்த கோழியை எடுத்து நீரில் ஊறப்போட்டான். பின்பு தேவையான அரிசியை அவியப் போட்டான். தனக்கும் கணேசுக்கும் ஒவ்வொரு வியரையும் எடுத்துத் திறந்து வைத்தான். அவன் சோறு சமைத்துக், கோழியிறைச்சிக் கறியும் வைத்து, முட்டையும் அவிப்பதற்குத் திட்டமிட்டான். இறைச்சிக்குள் மூன்று உருளைக்கிழங்கை நறுக்கிப் போட்டால் கறிக்குப் பஞ்சம் வராது என்பது அவன் எண்ணம். முட்டையைக் கொஞ்சம் தாராளமாய் அவித்தால், பியர் குடிப்பதற்குப் பயன்படுத்தலாமென அவன் நினைத்தான். அத்தோடு பொரித்த கச்சானும் தாராளமாய் இருப்பது அவனுக்குத் தெரியும். அவர்கள் சமையலில் மும்மரமாக இருக்கும் போது இரட்டை வீமன்கள் திரும்பி வந்தார்கள்.
‘பிறகு என்ன அவருக்கு நெளிப்புத் தானே?’என்ற வண்ணம் சுமன் உள்ளே வந்து சோபாவில் இருந்தான்.
ஹரிக்கு அந்தக் கதை சரியாக விளங்கவில்லை. சுமன் ஏதோ வப்பு வேலை செய்துவிட்டு வந்திருக்கிறான் என்பது மட்டும் புரிந்தது. உள்ளே வந்த சுமனிடம் வியரை வாங்கிய கணேஸ் அதைக் குளிர வைக்க முயன்றான். அப்போது ‘அது நான் கீற்றர் போடாத அறையில வைச்சிருந்த வியர்தான். இங்கையும் அப்பிடி வைச்சாக் கணக்காக இருக்கும்.’ என்றான் சுமன். பின்பு அதில் இரண்டைப் பிடுங்கித் திறக்க மீதியைக் கணேஸ் எடுத்துச் சென்று கீற்றர் போடாத அறைதேடும் அலுப்பில் குளிர்சாதனப் பெட்டியில் வைத்தான்.

கோழியை வெட்டி முடித்துவிட்டுக் ஹரி கோலுக்கு வந்தான். சற்றுப் பசித்த பின்பு கறியை வைத்துச் சோற்றைச் சாப்பிடலாம் என்பது அவன் எண்ணமாகிற்று. கோலுக்கு வந்ததும்,
‘ஏதோ சொல்லிக் கொண்டு வந்தீர்... என்ன நடந்தது சுமன்?’ என்றான் சுமனைப் பார்த்து.
‘அதா அண்ண? நாங்கள் வரேக்க எதிரில குகன் தன்ர காரில வந்தவன். அவன் தன்ரபாட்டில போய் இருக்கலாம். அந்த றோட்டில இரண்டு கார் விலகிறத்துக்கு இடமே இல்லை. நாங்கள் வாறது தெரிஞ்சும் அவர் நடப்புக் காட்ட எதிரே வந்தார். கொஞ்சம் இடிக்கிறமாதிரி றேஸ் பண்ணிக்கொண்டு நான் போகப் பயத்தில சிநோவுக்கு மேல ஏத்திப் போட்டான். எல்லாம் வாயளவிலதான் இவங்கள். நாங்கள் கொஞ்சம் தள்ளி வந்து எங்கட காரை நிப்பாட்டிப் போட்டுப் அவன்ர காரைப் பார்த்தம். நல்லாச் சினோவுக்கு மேல ஏத்திச் செசியில சிநோப் பொறுத்திட்டுது. அதை வெட்டி வெளியால எடுக்கலாம் எண்டு நான் நினைக்கேல்ல. ஆற்றையும் காரைக் கொண்டு வந்துதான் கட்டி இழுக்கோணும். நல்லாய் நிண்டு இழுக்கட்டும் எண்டிட்டு நாங்கள் வந்திட்டம். அவன் அடியாளாட்டம் இருக்கிற துணிவிலதான் அண்ண இவங்கள் இந்த ஆட்டம் ஆடுறாங்கள். உண்மையா இவனுக்கு முறையாக் குடுத்தா மற்றவங்கள் பேசாமல் இருப்பாங்கள்.’ என்று முடித்தான்.

‘அப்பிடி நாங்கள் அடிதடி எண்டு எல்லாம் போகக் கூடாது. அது இனிச் சகோதரங்களுக்க வேண்டாம் எண்டுதானே இங்க வந்திருக்கிறம். பிறகும் அதுதான் வேணும் எண்டு கோவணம் கட்டிக் கொண்டு நிண்டாப் பிரச்சனை எப்பிடித் தீரும்? பிறகு நாங்கள் நாட்டைவிட்டு ஓடியந்ததுக்கு என்ன நியாயம் இருக்கும்? நிம்மதி எப்பிடி வரும்? இந்த நாட்டில பிரச்சனைக்குத் தீர்வு காணுறது பேச்சுவார்த்தையால மட்டும்தான். திரும்பத் திரும்ப எத்தினைதரம் இதைக் கதைப்பம். பிளீஸ் இனித் தயவு செய்து இப்பிடிக் கதையாதேங்கோ.’ என்றான் ஹரி. அவனுக்கு அதை மீண்டும் மீண்டும் சொல்ல வேண்டி வந்ததில் விளக்கெண்ணெய் குடிக்கும் அவஸ்தை.

‘நீங்கள் ஒரு விஷயத்தை விளங்காமல் கதைக்கிறியள் அண்ண. எல்லோருக்கும் எல்லாப் பாசையும் விளங்காது. அவையவைக்கு விளங்குகிற பாசையாலதான் விளங்கப்படுத்த முடியும்.’ என்றான் சுமன் தன்னை நியாயப்படுத்தும் விதமாக.

‘எது எப்பிடி இருந்தாலும் நாங்கள் இங்கையும் வன்முறையைத் தொடர்வதாய் இருந்தால் தமிழரே இல்லாத இடத்திற்குப் போயிடவேணும் எண்டு நான் நினைக்கிறன். அது நடப்பில இருந்து தப்பி ஓடுறதாக்கூட இருக்கலாம். எனக்கு இந்த வன்முறையில எல்லாம் இப்ப அறவே நம்பிக்கை கிடையாது. வேணுமெண்டா இருந்து பாருங்க... அது அழிவைத் தவிர வேற ஒண்டையும் எங்களுக்குத் தரப் போறதில்லை.’ என்றான் ஹரி.

‘நாங்கள் வன்முறை மீது காதல் கொண்ட மனநோயாளர்கள் அல்ல என்கின்ற அவரின் வசனத்தை மறக்கேல்ல அண்ண. எண்டாலும் சும்மா இருக்க விடுறாங்களே இவங்கள்? எங்களை எதிரிகளே போராட வைத்தார்கள் எண்டமாதிரி இருக்குது இவங்கட வேலை. நாங்கள் எப்பிடித் துறவிகளா இருக்க நினைச்சாலும் துறவறுக்கும் துஸ்ட்டப் பெண்களாக வன்முறை என்னும் கவர்ச்சி காட்டி வந்து அவங்கள் நிக்கிறாங்களே?’ என்றான் சுமன்.

‘வசனம் நல்லாத்தான் இருக்குது. இருந்தும் அந்த இம்சைய வெல்லும் துறவியாத் தொடர்ந்தும் அமைதியா இருக்கவேணும். எது வந்தாலும் அதைக் கைவிடக் கூடாது. அதுதான் மனிதனுக்குள் தெய்வத்தை பொதியும் வித்தை. கீதை தரும் போதனை புரிந்தால் கடவுளாகாவிட்டாலும் மனிதனாய் ஆவது வாழலாம். நான் அதைத்தான் முயற்சிக்கிறேன்.’ என்றான் ஹரி.

‘நாங்கள் நீங்களாக முடியுமா? சரியண்ண அதை விடுவம். இப்ப தமிழ்ச்சங்கப் பிரச்சனைக்கு என்ன செய்யிறது எண்டு நினைக்கிறியள்? இவங்கள் நோர்வே அரசாங்கம் தந்த பணத்தை மறைமுகமாக இயக்கம் ஆயுதம் வாங்க அனுப்பப் போறாங்கள். அதை நாங்கள் தடுத்து நிறுத்தோணும். அதுக்கான ஜனநாயக வலு எங்களிட்ட இல்லை. அடி தடி யெண்டாலும் நீங்கள் வேண்டாம் எண்டுறியள். எங்களுக்கு எந்தத் தெரிவும் இருக்கிறமாதிரித் தெரியேல்ல. ஒரே ஒரு வழி மட்டும்

இருக்குது. அதைத்தான் நாங்கள் செய்யவேணும். நாளைக்கு நாங்கள் பொலிசுக்குப் போவம்.' என்றான் சுமன்.

'போய்?' என்றான் ஹரி.

'என்னண்ண இப்பிடிக் கேட்கிறியள்?' என்றான் சுமன்.

'அவங்கள் பெரிய கிரிமினல்கள். ஒவ்வரு விஷயத்தையும் நுட்பமாய் யோசிச்சுச் செய்வாங்கள். அப்பிடி அதைப்பற்றி இவங்கள் யோசிக்காட்டியும் ஒஸ்லோ யோசிக்கும். இப்ப சாதாரணமாகவே அவையின்ர அமைப்பு மூலம் பணம் அனுப்பிறமாதிரி அனுப்பிப், பிறகு அது ஆயுதத்திற்கும் போகும் எண்டுறது எல்லாருக்கும் தெரியும். ஆனா அதை நிரூபிக்க எங்களிட்ட என்ன ஆதாரம் இருக்குது? அவங்கள் இது மனிதாபிமான உதவிக்குத்தான் போகுதெண்டு எப்பவும் அடிச்சுச் சொல்லுவாங்கள். அதுவும் பெரும்பான்மை அங்கத்தவருடைய சம்மதத்தோட போகுதெண்டு சொல்லுவாங்கள். இதில என்ன தப்பிருக்கு எண்டுதான் எங்களைப் பார்த்துப் பொலிஸ் முதல்ல கேட்பாங்கள். பொலிஸ்சுக்கு இவங்கள் இங்க என்ன செய்யிறாங்கள் எண்டது கொஞ்சம் விளங்கும். எண்டாலும் இப்போதைக்கு அவங்கள் எதுவும் செய்யமாட்டாங்கள். அது நோர்வே அரசியல். அதைவிடுவம். இப்ப எங்களிட்ட ஏதாவது ஆதாரம் இருக்குதா? அவங்கட அமைப்பு மூலம் ஆயுதக் கொள்வனவுக்குப் பணம் போனதாய் ஆதாரம் இருந்தால் போய்ப் புகார் செய்யிறதில பிரயோசனம் இருக்கும். அதில்லாமல் பொலிஸிட்டப் போனா நாங்கள்தான் முக்கயீனப் படவேணும். வழமையாகச் செய்யிறமாதிரி, கொஞ்ச நாள்ச் செல்ல, ஆதாரங்கள் இல்லாததால கேசை இழுத்து மூடியாச்செண்டு பதில் வரும். சும்மா அலையுறதுதான் மிச்சமா இருக்கும்.' என்றான் ஹரி.

'அப்ப என்னதான் செய்யலாம் எண்டுறியள்?' என்றான் சுமன்.

'அந்தச் தமிழ்ச்சங்கம், அதில இருக்கிற காசு பற்றியெல்லாம் மறக்க வேண்டியதுதான். இனி அந்தச் சங்கத்துக்க எங்களால எதுவும் செய்ய முடியாது. உந்தக் காசையும் அனுப்பிப் போட்டினம் எண்டா எங்களைப் பற்றி அவங்கள் கவலைப்படப் போறேதில்லை. அதுக்கு அவங்களுக்குத் தேவையும் இல்லை. ஆனா நாங்கள் எங்கட அங்கத்தவர் விண்ணப்ப பத்திரத்தை மீளப் பெறும்வரைக்கும் அரசாங்கம் கொடுக்கிற பணத்தை எங்களைச்சாட்டி எடுப்பாங்கள். அதை வேற தங்கட விருப்பத்திற்குச் செலவழிப்பாங்கள். அதுக்கு அவங்கள விடக்கூடாது. எங்களைச் சாட்டிப் பணம் எடுத்து அதைவைச்சு வன்முறையைத் தொடர்கதையாக்கிறதோட, ஊரை ஏமாத்திறமாதிரி, எங்களையும் ஏமாத்த விடக்கூடாது.' என்றான் ஹரி.

'நீங்கள் என்ன சொல்ல வாறியள்?' எனக் கணேஸ் கேட்டான்.

'இல்லக் கணேஸ். இப்ப இந்தத் தமிழ்ச்சங்கத்தில இருந்து எவ்வளவு பேர் அதிர்ச்சியால பிரிஞ்சு வெளியேறி இருக்கிறம்? ஒரு பேப்பரும் பேனையும் எடுத்தா. அந்த அறைக்க இருக்கிற மேசையில இருக்கும் லிஸ்ற் போட்டுப் பாப்பம். முதல்ல

ஒரு கணக்குத் தெரியோணும். எங்கட பக்கம் ஒரு அளவு சனம் இருக்குது. அவையின்ர காசைக் கண்டதுக்கும் அனுப்பாமல் உருப்படியானதுகளுக்கு அனுப்போணும். அதுக்கு எங்கட கட்டுப்பாட்டில அந்தக் காசு இருக்கோணும். அந்த நிதியைப் பெறுகிறத்துக்கும், அதைக் கட்டுப்பாட்டில வைச்சிருக்கிறதுக்கும் எங்களுக்கு ஒரு தமிழ்ச்சங்கம் வேணும். நாங்கள் கையெழுத்து வைச்சுக் குடுத்த அங்கத்தவர் பத்திரத்தை மீளப் பெறவேணும். அதைவிட முக்கியமாக அவை இப்பவே தமிழ் படிப்பிக்கிறதைப் பற்றிக் கதைக்கினம். அவை தமிழ் படிப்பிச்சா எப்பிடி இருக்கும் தெரியும்தானே? அப்ப அதுக்கையும் எங்கட பிள்ளையள விடமுடியாது. விட்டால் மூளைச் சலவைதான் நடக்கும். அதுக்கு இப்பிடி ஒரு சங்கம் இருந்தால்தான் அதன் மூலம் தமிழ் வகுப்பும் நடத்த முடியும்.' என்றான் ஹரி.

'தமிழ்ச்சங்கம் இருக்குதோ இல்லையோ அண்ண இவங்கள் தமிழ் படிப்பிச்சா நாங்கள் அதுக்குப் பிள்ளையள விடமுடியுமே? பிள்ளைகளின்ர மூளையையும் கழுவி, உள்ள தமிழையும் இல்லாமல் செய்து போடுவாங்கள். இதுதான் விஷயம் எண்டா அதைச் செய்ய வேண்டியதுதான். நான் வேணுமெண்டா வாற சனிக்கிழமையே ஒரு கூட்டத்துக்கு ஒழுங்கு செய்யிறன்.' என்றான் சுமன்.

'அவசரப்படாத சுமன். இன்னும் கொஞ்சப்பேரோட முதல்ல கதைக்கோணும். அதுக்குப் பிறகு கொமீன்லும் கதைச்சுப்போட்டுச் சங்கத்தைத் தொடங்குவம். இரண்டு சங்கம் இருக்கிறதும் நல்லதுதானே? தமிழ் இன்னும் நல்லா வளரும் எல்லே?' என்றான் ஹரி.

'அதெண்டா உண்மையண்ண. ஆனா அவங்கள் தமிழே வளர்க்கிறாங்கள்? கறக்கிறதைக் கறந்துகொண்டு தலைவர் கீதம் எல்லே படிக்கிறாங்கள். தலைவர் துவக்கச் சங்ககாலத்து வாள்மாதிரி அனுப்பாட்டித் தலைவருக்கும் ஒரு நாளைக்கு ஆப்பு வைப்பாங்கள் இவங்கள் அண்ணை.' என்றான் சுமன்.

சுமனுக்கு சாதுவாய் ஏறிவிட்டதைக் ஹரி ஊகித்துக் கொண்டான். அவன் தாமதியாது சமையல் அறையை நோக்கிச் சென்றான். தமிழை வளர்ப்பதற்கான அவர்களின் பிரயத்தனத்தைக் கொச்சைப்படுத்தியது ஹரிக்குப் பிடிக்கவில்லை. அதற்காகப் பொருளாதார அக்கறையே இல்லாமல் அலுவல்கள் நடப்பதாக அவன் நம்பத் தயாராகவும் இல்லை.

கறியை வைத்து மீதம் இருக்கும் முட்டைகளையும் உடைத்துவிட்டாற் சாப்பிட விரும்புபவர்கள் சாப்பிடலாம். பின்பு இங்கேயே படுக்கலாம். நாளைக் காலையில் வெறி முறிந்த பின்பு, அவரவர் தங்களது இடங்களுக்கு ஆறுதலாகச் செல்லலாமென எண்ணினான். சமையல் அறையை நோக்கிப் போக முதல் சுமனுக்கு அதற்குமேல் வியர் கொடுக்க வேண்டாமென ராமுவுக்குச் சைகைகாட்டிவிட்டுச் சென்றான்.
சிறிது நேரத்தில் எல்லோரும் சாப்பிட்ட பின்பு படுக்கப் போனார்கள்.

*

காலை ஹரி நித்திரையால் எழுந்து கோலுக்கு வந்த போது ராமு கோல், சமையலறை ஆகியவற்றைத் துப்பரவு செய்துவிட்டு, எல்லோருக்கும் தேநீர் தயாரித்தான். ஹரிக்கு அறிமுகமாகிய அடுத்த நாளே அவனைப் பிடித்துக்கொண்டது. ராமு அதிகம் பிரச்சனையை ஏற்படுத்தாது அதைச் சமாளிப்பதில் கவனம் செலுத்துவது மேலும் அவன்மேல் ஒருவித மதிப்பை உண்டுபண்ணியது. பிரச்சனைகளை ஊக்குவிக்காமல் அதைச் சமாளித்து, மற்றவர்களையும் அணைத்துச் செல்வது இலகுவான காரியம் இல்லை. ராமு அந்தக் காரியத்தைச் செய்வதற்கு முயற்சி எடுப்பது அவனுக்கு நம்பிக்கையைத் தந்தது. சுமன் இதற்கு எதிர்மாறாய் நடப்பவன். என்றாலும் அவனின் கோபத்திலும் நியாயம் இருப்பதைக் ஹரி அறிவான்.

இரவு இவர்கள் படுத்த பின்பு, பனி மணம் இல்லாத மில்லிகைப் பூவாய்க் வானத்தில் மலர்ந்து, பூமியில் மலர்த்திற்று. பனியின் பால் வெண்மை அதன் மீது விழும் ஆதவனின் கதிர்களை கண்ணாடி போலத் தெறிக்க வைக்க அவை வெள்ளி ஊசிகளாய் கண்களைக் குருடாக்கும் ஆக்ரோஷத்தோடு பாய்ந்து கண்களைத் துளைத்தன. பனி கொட்டினால் சிலருக்குச் சந்தோஷமாயும், பலருக்குச் சங்கடமாயும் இருக்கும். வாகனம் வைத்திருப்பவர்களுக்கு அன்று சங்கடம்தான். பனிவெட்டும் இயந்திரங்கள் பனியை அள்ளி தெருவோரம் நிற்கும் வாகனங்களோடு அணைத்துவிட்டுச் செல்லும். அதில் இருந்து வாகனத்தை விடுவிப்பதற்குக் கடுமையான உழைப்பைச் செலவிட வேண்டும். எட்டி வெளியே பார்த்த சுமன் இறங்க மனம் இல்லாதவனாய்ச் சோபாவில் வந்து காலை மடக்கிக்கொண்டு இருந்தான். பின்பு,

'அண்ண ஏதாவது சாப்பாடு இருக்கே? சாப்பிட்டிட்டுப் போனாத்தான் சினோ வெட்டலாம்.' என்றான்.

'ஓ அதுக்கென்ன? பாண் இருக்குது. அதோட ஜாமும் மற்றப் போலேக்கும் (பாணுக்கு வைத்துச் சாப்பிடும் துணையுணவுகள்.) இருக்குது. தாராளமாய்ச் சாப்பிடலாம்.' என்று கூறிய ஹரி காலைச் சாப்பாட்டிற்கான அலுவலைப் பார்த்தான். ராமு முட்டைகள் இருப்பதைப் பார்த்துவிட்டு வெங்காயம் வெட்டிச் செத்தல் மிளகாயும் சேர்த்து வதக்கி, மிளகாய்த்தூளும் இட்டு முட்டை பொரித்தான். முட்டைப் பொரியலின் வாசம் வயிற்றில் அமிலத்தைச் சுரக்க எல்லோரும் கூடியிருந்து காலைச் சாப்பாட்டைச் சாப்பிட்டனர். அதன் பின்பு சூடாகத் தேநீர் அருந்தினர். பின்பு சிறிது நேரத்தில் வெளியே சென்று பனி வெட்டத் தொடங்கினார்கள். ஹரி சிறிது தாமதமாகத் தனது உடைகளை மாட்டிக்கொண்டு வெளியே வந்தான்.

ராமுவும், சுமனும் ராமுவின் காரையும், ஹரியின் காரையும் சுற்றியிருந்த பனியை வெட்டினர். கணேஸ் பாதையில் இருந்த பனியை வெட்டினான். ராமுவின் காரின் பின்புறம் உள்ள பனி அகற்றப்பட்டது. சுமன் காரின் ரயர் வழக்கத்துக்கு மாறாகப் பதிந்து இருப்பதை முதலிற் கண்டான். பின்பு அவசர அவசரமாக ரயரைச் சுற்றி இருந்த பனியை அகற்றிவிட்டு அதைப் பார்த்தான். அவனால் முதலில் அதை நம்பமுடியவில்லை. பின்பு மீண்டும் ஒரு முறை நிதானமாகப் பார்த்தான். நிச்சயமாக இது தற்செயலாக நடந்த காரியமாக அவனுக்குப் படவில்லை. ரயரை மீண்டும் அவதானமாய்க் கவனித்தான். அது கத்தியால் குற்றிக் கிழிக்கப்பட்டிருப்பது தெரிந்தது. அதை நன்கு உறுதி செய்துவிட்டு,

'இந்த அநியாயத்தை இங்க வந்து பாருங்கோ அண்ண.' என்று கூப்பாடு போட்டான். அவன் என்ன சொல்கிறான் என்பது புரியாத ஹரி, கணேஸ், ராமு ஆகியோர் அவன் காட்டிய இடத்தைச் சென்று பார்த்தார்கள். எல்லோருக்கும் திகைப்பாகிற்று. சுமன் கத்தியால் குற்றி இருக்கும் இடத்தைக் கிளப்பிக் காட்டினான். பின்பு எல்லோரும் விறு விறுவென மற்றைய ரயர்களையும் துப்பரவு செய்து பார்த்தார்கள். எல்லாமே குற்றிக் கிழிக்கப்பட்டிருந்தன. ஹரியின் காரைத் துப்பரவு செய்தார்கள். அதிலும் தங்கள் கைவண்ணத்தை அவர்கள் ஆக்ரோஷமாய் பதிந்திருப்பது புலனாயிற்று.

'சில நொஸ்குகளுக்கு நிறவெறி எண்டா எங்கடையள் பலதுக்கும் கண்கெட்ட இயக்கவெறியும், கடுமையான தேசிய வெறியும் பிடிச்சுப் போச்சுது பார்த்தியளே?' என்றான் சுமன். பின்பு தொடர்ந்தும்,

'இப்ப என்ன சொல்லுறியள் ஹரியண்ணை?' என்றான்.

'இப்ப பொலிசுக்குப் போகத்தான் வேணும். இன்சூரன்ஸ்சுக்குப் போகமுதல் பொலிசில முறைப்பாடு குடுத்ததோ எண்டுதானே கேட்பாங்கள். நாங்களாப் போகேல்ல அவங்களாப் போகவைச்சா நாங்கள் என்ன செய்யிறது?' என்றான் ஹரி.

## அத்தியாயம் 27 வில்லுக்கத்தி

ஐந்து நாட்கள் ஓடி அலைந்து வேலை செய்யும் அலுப்பை இரையாக்கும் வேள்வி சனிக்கிழமை என்னும் நாளில் அவசரம் இல்லாது படுக்கையில் புரண்டு புரண்டு படுப்பதால் பலருக்கு ஈடேறும். நீண்ட நேரம் மெத்தையில் புரண்டு புரண்டு படுக்கும்படி சோம்பல் எழுந்திருக்க விடாது அடம் பிடிக்கும். சங்கர் அந்தத் தவுனத்திற்கு இப்போது விதிவிலக்கு அழித்தான். உடலிச்சை துறந்த ஞானியாக அல்ல, அவன் உளவேதனை நிறைந்த மனிதனாகத் துடித்தான். அவனுக்கு அதிகரித்து இருக்கும் வருத்தத்தால் இப்போது அவன் வேலைக்குப் போவதில்லை. வனிதாவின் காயங்கள் ஆறிய பின்பு அவள் வேலைக்குப் போகிறாள். அவள் இப்பொழுது ஆழ்ந்த நித்திரையில். நித்திரை இல்லாது புரண்ட சங்கர் படுக்கையை விட்டு இயந்திர மனிதன் போல் எழுந்தான். அவனது மூளைக்குள் இப்போது மீண்டும் அந்தக் குரல் வீரியமாக அலறத்

தொடங்கியது. கொல்… கொல்… என்கின்ற அந்தக் குரல் அவன் நிம்மதியைக் கொன்று இரத்தமும் சதையுமாகத் தின்றது. சங்கர் மீண்டும் வனிதாவைப் பார்த்தான். அவள் ஆழமாக மூச்சை இழுத்துவிட்டாள். சங்கர் மெதுவாக எழுந்து சென்று பல்லைத் துலக்கி முகத்தைக் கழுவினான். தலைக்குள் கடுமையாக வலித்தது. வீட்டிற்குள் இருப்பது அந்தரமாகிற்று. கொல்… கொல்… என்கின்ற குரல் மீண்டும் மீண்டும் பெரிதாக அவன் மூளைக்குள் அலறியது. விறுவிறுவென உடுப்புக்களை மாட்டினான். வெளியே புறப்பட்டான். கதவை மெதுவாகப் பூட்டிவிட்டுத் தெருவில் இறங்கியவன் எந்தத் திசையில் ஓடுகிறேன் என்பது புரியாது ஓடினான். திசைகள் எல்லாம் ஒன்றாக, உலகம் மனிதப் பேய்களின் இருப்பிடமாகப் பயமுறுத்த அவன் திசை அறியாது ஓடினான்.

சிறிது நேரத்தில் களைத்துப் போய்விட்ட அவன் பின்பு நடந்தான். மீண்டும் ஆத்திரம் பொங்க ஓடினான். அவனது தலைக்குள் அந்த ஒலி கடுமையாகியது. வனிதா எழுந்திருந்தால் மருந்து கொடுத்திருப்பாள். அவள் எழவில்லை. அவன் மருந்தும் சாப்பிடவில்லை. அவன் இப்பொழுது களைப்போடு வேகமாக நடந்தான்.

சங்கருக்குக் கோபம் வந்தது. ‘என்னைப் பைத்தியம் ஆக்கி விட்டார்கள். பின்பும் விடவில்லை. என்னை அழித்தது போதாதென்று வனிதாவையும் தாக்குகிறார்கள். அதுவும் இவன் குகனிடம் சண்டை பிடித்த பின்புதான் எல்லாம் நடக்கிறது. அவன்தான் இதைச் செய்திருக்க வேண்டும். திட்டமிட்டு ஆட்களை வைத்துச் செய்திருக்க வேண்டும். ஒரு பெண்ணென்றும் பாராது காயப்படுத்திக் குற்றுயிராகத் துடிக்கவிட்ட மிருகங்கள். மனிதர்களைக் கொல்வது பாவம். மிருகங்களைக் கொல்வது வேட்டை. நான் வேட்டையாட வேண்டும். நாட்டில் மனிதர்களாய் வேஷமிட்டு நடமாடும் மிருகங்களை நான் வேட்டையாட வேண்டும். எங்கே காணுகிறேனோ அங்கேயே வேட்டையாட வேண்டும். வேட்டையாடு. வேட்டையாடு. மிருகத்தை வேட்டையாடு. மனுநீதியைக் காப்பதற்காக அந்த மிருகங்களை வேட்டையாடு. மிருகத்தைக் கொன்றால் அதற்கு மறுபிறவி. முக்திக்கான வழியைத் திறந்து வைத்துப் பிறப்பறுக்கும் புண்ணிய காரியம். நான் அவர்களுக்கு வானுலகைத் திறந்து வைக்க வேண்டும். இந்த மிருகங்களுக்குப் புவி வாழ்வில் இருந்து முக்தி கொடுக்க வேண்டும்.’ என்பதாக எண்ணிய வண்ணம் நடக்கும் போதே அந்தக் குரல் அவனைச் சவாரிக் குதிரையில் இருந்து அதையே சவுக்கால் அடித்துக் கலைப்பது போல சுளீரென்று அடித்தது. அவனை ஓடும்படி கலைத்தது. சங்கர் திடீரென வெகமெடுத்து ஓடினான். பின்பு மூச்சிறைக்கப் பேருந்துத் தரிப்பு ஒன்றில் போய் இருந்தான். அவனுக்கு வியர்த்தது. கோபம் வந்தது.

தமிழ்ப் பாடசாலைக்குப் பிள்ளைகளை அழைத்துக் கொண்டு செல்லும் பெற்றோரைப் பார்த்த வண்ணம் சங்கர் இருந்தான். சங்கரின் மகனும் அந்தப் பாடசாலையில் தமிழ்ப் படித்தான். அவர்கள் தமிழ் மாத்திரம் தான் படிப்பித்ததாகக் கூறுகிறார்கள். எட்டாம்

வகுப்புப் படிக்கப் போகும் போது 'தமிழீழம் சென்று நான் ஏன் போராடக்கூடாது?' என்று சங்கரின் மகன் ஒருநாள் அவனைக் கேட்டான். இளம் கன்று பயமறியாது. என்பிள்ளை என்கின்ற தவிப்பு சங்கரிடம். அத்தோடு சங்கர் அவனுக்குத் தமிழ் போதுமென்று தமிழ்ப் பாடசாலைக்குப் போவதை நிறுத்தினான். இங்கு வாழும் ஒரு பிள்ளை தமிழீழத்திற்குப் போராடப் போவது என்பதை அவனால் அப்போது நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை. அதுவும் தன்பிள்ளை என்கின்ற நினைப்புக்கே அவனிடம் இடம் இருக்கவில்லை. 'வேண்டும் என்றால் நாங்கள் பணத்தைக் கொடுக்கலாம். வன்னியிலும், மட்டக்களப்பிலும் நிறையச் சிறுவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் தமிழீழத்திற்காய்ப் போராடட்டும். அதுதான் சரி.' என்று அவன் அப்போது எண்ணினான். 'இன்னும் அதிக பணம் கொடுக்கலாம். பதிலாக எங்கள் பிள்ளைகளை அங்கே போராடுவதற்கு அனுப்ப முடியாது. அங்குதானே நிறையப் பிள்ளைகள் சாப்பாட்டிற்கே வழியில்லாது இருக்கிறார்கள். அவர்கள் ஈழத்திற்காய் உயிர் கொடுத்தால் அவர்களுக்கும் நாட்டிற்கும் பெருமையல்லவா? அவர்களின் வீரத்தை விளைவாக்க ஆயுதமும், பணமும் வேண்டும். அதற்கு மட்டும் நாங்கள் உதவி செய்யலாம். தாராளமாய் அள்ளிக் கொடுக்கலாம்.' என்பதாக வக்கிரமாகச் சுயநலத்தோடு அப்போது எண்ணியதை இப்போது நினைத்தான். சங்கருக்கு ஓவென்று கத்தி அழ வேண்டும் என்கின்ற அந்தரம் உருவானது. புத்திர பாசம் மனிதத்தை எப்படிக் காலில் போட்டு மிதிக்கும் என்னும் உண்மை புரிந்தபோது வேதனை நெஞ்சைப் பிளந்தது. அவன் வலியால் துடித்தான்.

மகனை இந்தப் பாடசாலைக்குத் தொடர்ந்து அனுப்பாது விட்டது நல்லது என்பது அவனுக்கு இப்போது புரிந்தது. இதில் படித்த சிலர் மாயமாக மறைந்து வன்னியில் தோன்றியது சங்கருக்குப் பின்பு தெரியும். தனது மகனும் தொடர்ந்து படித்திருந்தால் அதுதான் நடந்திருக்கும் என்பதில் அவனுக்கு ஐயம் இல்லை.

சங்கர் தலையில் கை வைத்த வண்ணம் சிறிது நேரம் அப்படியே பேருந்துத் தரிப்பில் இருந்தான். கார்கள் அவனைக் கடந்து வேகமாகச் சென்றன. மதிப்பில்லாத மனித ஜென்மம் என்கின்ற பச்சாதாப உணர்வு அவனை வாட்டியது.

'ஆ குகனின் கார்.' சங்கர் துள்ளி எழுந்தான். 'ம்... தமிழ்ப் பாடசாலைக்குச் செல்கிறான். விடக்கூடாது. இன்று அவனை விடக்கூடாது.' 'ஓடு... ஓடு... அவனைக் கொலை செய். ஓடு... ஓடு...' தலைக்குள் அந்தச் சத்தம் மீண்டும் சவுக்கடி கொடுத்தது. அது அதிரக் கர்ச்சித்தது. சங்கர் ஓடத் தொடங்கினான். வெறியோடு ஓடினான். 'இன்று கொன்றுவிட வேண்டும். தலைக்குள் இருக்கும் குரல் இன்றோடாவது மறையவேண்டும்.' சங்கருக்கு மூச்சு வாங்கியது. மனது நினைத்தாலும் உடல்

இப்போது விட்டுக்கொடுப்பதற்கு மறுத்து அடம்பிடிக்கிறது. முதுமையைக் காலம் சொல்லாமற் கொள்ளாமல் மெல்ல உடலில் ஏற்றிவிட்டுப் போகிறது. இருப்பது தெரியாது இருந்த அங்கங்கள் இப்போது வம்புக்குத் தகராறு செய்கின்றன. என்றாலும் சங்கருக்குள் இருந்த ஆவேசம் அடங்கவில்லை. குரல் தணியவில்லை. அவன் இயன்ற மட்டும் விறுவிறுவென நடந்தான். 'எங்கே போய்விடுவான். இன்று முடிக்க வேண்டும்.' என மனதில் கறுவினான்.

குகன் பிள்ளைகளை வாகனத்தால் இறக்கித் தமிழ்ப் பாடசாலைக்குள் அனுப்பிவிட்டுத், தான் மாத்திரம் வெளியே நின்றான். வெளியே சிலர் கூடி நின்று இலங்கைப் புதினங்கள் கதைத்தார்கள். இது வழமையான நோர்வேத் தமிழரின் காரியங்களில் ஒன்றாகிவிட்டது. இவர்கள் பணத்தை அனுப்பிவிட்டு அவர்கள் அங்கு படும் இரணத்தை இங்கிருந்து வேடிக்கை பார்த்து இரசித்த கூட்டம். அந்த இரசனைக்குக் கடும் தேசியம் பூசி, விடுதலை என்கின்ற மகுடம் சூட்டினர். இப்போது யுத்தத்திற்குப் பின்பான சுடலைஞானத்தை அலசும் மேதாவிகள்.

அதில் ஒருவன்...

'இன்னும் கொஞ்ச நாளைக்குத்தான் இந்தப் பள்ளிக்கூடங்கள் நடக்கும். பிறகு எல்லாத்துக்கும் எங்கட பிள்ளையள் மூடுவிழாப் போட்டிடுவாங்கள்.' என்றான்.
'நீர் என்ன இப்பிடிக் கதைக்கிறீர்? தலைவர் இன்னும் உயிரோட பாதுகாப்பாகத்தான் இருக்கிறார். இன்னும் சில காலத்தில அவர் போராடத் தொடங்குவார். அப்ப இதைவிடப் பெரிசா இந்தப் பள்ளிக்கூடங்கள் நடக்கும். எங்கட போராட்டம், இந்தப் பள்ளிக்கூடம் எல்லாம் சும்மா ஊதிவிட்டோண்ண போற விஷயமே? இருந்து பாருங்கோ... இன்னும் கொஞ்ச நாளில எப்பிடி எல்லாம் மாறுமெண்டு...' என்றார். அதில் நின்றவர்களில் சிலர் இதைக்கேட்டு நமட்டுச் சிரிப்புச் சிரித்தனர். இப்படியும் சிந்திக்க வலுவின்றி, குருட்டு நம்பிக்கையில் மட்டும் வாழும் ஏமாளிகளைப் பார்க்க அவர்களுக்குப் பரிதாபமாகவும், நகைப்பாகவும், எக்காளமாகவும் இருந்தது. இதை இவனிடம் கூறினால் பெரும் வாக்குவாதம் உருவாகும் என்பதை அறிந்து, மேற்கொண்டு எப்படிக் கதை நகருகிறது என்பதைப் பார்க்கும் ஆவலில் ஐஸ்பழம் வாங்கும் குழந்தைகளாக நின்றனர். இது காசு கொடுக்காத கலை நிகழ்வாக அவர்களுக்கு.

சிலர் இன்னும் தலைவர் உயிரோடு இருக்கிறார் என்பதை நம்பத்தான் வேண்டும் என்பதாய் மனதில் எண்ணினர்.

குகன் தலைவர் இருக்கிறார் அல்லது இல்லை என்று இப்போது கூறுவதில்லை. 'பலரும் தலைவர் இருக்கிறார் என்று கூறுகிறார்கள். உண்மையாகவே தலைவர் இருந்துவிட்டால்? அதைப் புரியாது நாங்கள் ஏதாவது அவமதிப்புச் செய்தால்? எதற்கும் நாங்கள் தலைவர் இருக்கிறார் என்று நம்புவதுதான் எமக்கும், எங்கள் உறவினருக்கும் வருங்காலத்தில் பாதுகாப்பாய் இருக்கும்.' என்பது அவன் எண்ணம்.

'இந்தமுறை மாவீரர் உரைக்கே தலைவர் வரேல்ல. இனி எப்ப குகன் வருவார் எண்டுறாய்?' ஒருவன் அசட்டுத்தனமாய்க் கேட்பவன் போற் குகனிடம் கேட்டான். 'அதெல்லாம் இராணுவ இரகசியம்தானே. வருவார்… திடீரென்டு வந்து எல்லாரையும் கதிகலங்கவைப்பார்.' என்றான் குகன். அவன் ஏதற்காகவோ திடீரெனத் தலைவர் இருப்பது போலவே கதைத்தான்.

'ஓமடா வருவார். வாங்கின காசையும் திருப்பித் தருவார். இன்னுமா பூச்சுத்துறியள்? மனிசரைப் பைத்தியக்காரர் ஆக்கினியள். அதுவும் காணாது எண்டு இப்ப வீடு புகுந்து அட்டகாசம் செய்யிறா நீ… என்னடா?' கோபத்தோடு குகனின் நெஞ்சில் கைவைத்து ஓங்கித் தள்ளினான் சங்கர். குகன் சரளைக் குறுணி கொட்டிக்கிடந்த தரையில் மல்லார்ந்து பிடரி அடிபட விழுந்தான்.

இதைப் பார்த்த, அங்கு நின்ற பெண்களில் ஒருத்தி தனது அலைபேசியை எடுத்துப் பொலிசுக்குப் போன் செய்தாள். அதையெல்லாம் கவனிக்காது சங்கர் பாய்ந்து மல்லார்ந்து கிடந்த குகன் மேல் ஏறியிருந்து, அவனது கன்னத்தில் மாறி மாறி அறைந்தான். குகன் ஒருவாறு நிலைமையைப் புரிந்து சங்கரின் கையைப் பிடிப்பதற்குப் போராடினான். மற்றவர்கள் நின்று வேடிக்கை பார்த்தார்கள். குகனை எழும்ப விடாது சங்கர் அவன் மேல் இருந்தான். குகன் எழுவதற்குக் கடுமையாகப் போராடினான். பின்பு ஒருகையால் போராடும் குகனின் கைகளைப் பிடித்துக் கொண்டு, அவனது கன்னத்தில் சங்கர் அறைய முயற்சி செய்தான். குகன் இப்போது தனது இரு கைகளாலும் சங்கரின் கைகளைப் பிடித்தான். சங்கர் மீண்டும் தனது வலக்கையை விடுவித்தான். அந்தக் கையைப் பொக்கேற்றுக்குள் விட்டு, வில்லுக்கத்தி ஒன்றை வெளியே எடுத்தான். இதைப் பார்த்த பக்கத்தில் நின்ற ஒருவன்,

'டே இது கொலைக்கேசா முடியப் போகுது. சங்கர்ற்ற வலது கையைப் பிடியுங்கோ.' என்ற வண்ணம் அவன் வலது கையைப் பாய்ந்து பிடிக்க, இருவர் அவனது கையில் இருந்த வில்லுக்கத்தியைப் பிடுங்கினர். சங்கர் கத்தியைப் பறிகொடுத்தாலும் மூர்க்கம் குறையாது குகனைத் தாக்கினான்.

'கொலை செய்யிறது எண்டா ஒழுங்கான கத்தியோட வரவேணும். வில்லுக்கத்தியோட என்ன புடுங்க வந்தவர்?' வேடிக்கை பார்த்தவனில் ஒருவன் நக்கலாகச் சொன்னான். கத்தியைக் கையில் வைத்திருந்தவன் திடீரென எட்டிப் பாய்ந்து அவனது ஜக்கெற்றைப்

பிடித்து கத்தியை கழுத்தை நோக்கி ஓங்கினான். அவன் பயந்து விறுவிறுத்து தன்னையே கட்டுப்படுத்த முடியாது, வெம்மையாய்ச் சிறுநீர் பாச்சி நின்றான்.
'இப்ப தெரியுதே வில்லுக்கத்திகூட என்ன செய்யும் எண்டு?' என்றான் உறுக்கியவன்.
'ஓ... ஓ... நான் உந்த விளையாட்டுக்கு வரேல்ல... என்ன விட்டாப் போதும்.' என்ற வண்ணம் அவன் அங்கிருந்து அவமானத்தோடு அகன்றான். இதற்கிடையில் அங்கே சனம் கூடிவிட்டது. அகன்று சென்றவனைப் பார்த்துச் சிறுபிள்ளைகள் 'திஸ்சா பண்ணிப்போட்டார்...' எனக் கத்த அவன் அவமானத்தோடு அந்த இடத்தை விட்டு வேகமாக ஓடிப்போய்த் தனது காரிற்குள் ஏறிக் கதவைச் சாத்தினான். சங்கரும் குகனும் தொடர்ந்தும் நிலத்திற் கிடந்து புரண்டார்கள். பெண்கள் அருகே வரவில்லை. தாய்மாரின் குரலைக்கூடப் பொருட்படுத்தாது பல பிள்ளைகள் வந்து சுற்றி நின்று வேடிக்கை பார்த்தார்கள். ஆண்கள் எல்லோரும் ஆரவாரத்தோடு அங்கு நின்றார்கள். அப்போது பேரனைப் பாடசாலைக்குக் கூட்டிவந்த வயதான பெரியவர் ஒருவர் கோபத்தோடு அங்கு வந்தார்.

'அட அறுதலி மக்களே! ஏனடா எல்லாரும் மரம்மாதிரி நிக்கிறியள்? அவங்கள் அடிபடுகிறாங்கள் எண்டா, அதை விலக்கிவிடுவம் எண்ட நினைப்பு இல்லையே? வெட்கம் இல்லாமல் நிண்டு எல்லாரும் கூத்துப் பாக்கிறியளே? நாளைக்குப் பேப்பரில குகனும் சங்கரும் எண்டு எழுத மாட்டாங்கள். தமிழர் எண்டு எழுதுவாங்கள். இதெல்லாம் எங்களுக்கு வேணுமே?' என்றார் கோபம் கனன்ற சிவந்த கண்களை உருட்டியபடி. அவர் குரல் சிம்மக்குரலாய் அனைவரையும் அதிர வைத்தது. அவர் சொல்லிக்கொண்டு நிற்கும் போதே பொலிஸ் வேகமாக வந்தது. வில்லுக்கத்தியை வைத்திருந்தவன் பக்கத்தில் நின்ற சிறுவன் ஒருவனின் பையில் அவன் அறியாத வண்ணம் அதைப் போட்டான்.

பொலிஸ் இருவரையும் கைது செய்து அழைத்துச் சென்றது.

## அத்தியாயம் 28 மாற்றம்

வார்டோவில் சில காலங்களுக்கு முன்பு...

'கற்பனைக்கும் எட்டாத பிரபஞ்சத்தின் ஆயுளோடு ஒப்பிடும்போது கோடி கோடியால் பிரித்த ஒரு நொடிக்கும் பெறுமானம் இல்லாதது மனித வாழ்வின் ஆயுள். அதற்குள் அவர்களின் அவசர ஆட்டம். ஆயுள் நழுவி மூப்பு ஏறுவது கண்டு ஆறாக் கலக்கம். எங்கு இருந்து வந்தோம் என்கின்ற மூலம் புரியாத இந்த மானிடருக்கு எப்போதும் இவ்வுலகில் இருக்க வேண்டும் என்கின்ற அடங்காப் பேரவா. அந்தப் பேரவாவில்

இந்தக் கணங்கள்தான் நிஜம் என்பதைக் கோட்டைவிடும் அவலம். கற்பனையான நாளையை எண்ணி நிஜமான இந்தக் கணங்களைத் தொலைக்கும் கோடியில் நானும் ஒன்றாய்? என்பதாய் ஹரியின் மூளையில் சில ஞானக் கீற்றுக்கள் மின்னி மறைந்தன. மின்னலாகப் போன நாட்களின் ஓட்டத்தில் சந்தோஷமாய் வந்து இறங்கிய பூமணிக்கு இங்கு வசிப்பது சங்கடமாயிற்று. கருத்து முரண்பாட்டைச் சொந்தக் காழ்ப்புணர்பாய் எடுத்துத், தலையைத் திருப்பி செல்லும் மனிதர்களைக் காண ஹரிக்கும் மனது வெந்தது.

வித்தியாசங்களை மறந்து, ஈழத்தமிழர் என்கின்ற ஒரு அணியில் இணைந்து, அன்னிய தேசத்தின் அடித்தொங்கல்வரை பயணித்துத் துருவத்து நகரிலே வதியும் போது, கூறுபோடும் அரசியலை யாரோ குதர்க்கமாகப் புகுத்தியதாய், அவன் துடித்தான். மறுபக்கம் தலையைத் திருப்பிப் போகும் மனிதர்களைப் பார்க்க மறைந்திருக்கும் அநாகரிகங்களை இவர்களே மீட்டு வந்துவிடுவார்களோ என்பதாகக் ஹரிக்குப் பயமாகிற்று. புலம் பெயர்ந்தால் மட்டும் எங்கள் சமுதாயப் பிளவுகளை மறந்ததாக எடுத்துக்கொள்ள முடியாது. கனடா போய்வந்த போது அல்லது லண்டன் போய்வந்த போது அவனுக்குக் கிடைத்த அனுபவங்கள் ஈழத்தைப் போன்று மோசமானதாய் இருந்தது. அங்கு அவர்கள் குட்டி யாழ்பாணங்களாய், ஒரே ஊர், ஒரே சாதி, சொந்த உறவுகள் என்பதோடு வரம்பிட்டுப் பழகும் முறை தொடர்கிறது. இயக்க ஊர்வலங்கள் மட்டுமே அதற்கு விதிவிலக்காய் அமைந்து விடுகிறது. அது தேசிய வெறியின் மயக்கத்திலான ஒற்றுமை. தற்காலிக மின்னல் சமதர்மம். ஊர்வலம் அல்லது கூட்டம் முடிய அதுவும் மறைந்து விடுகிறது.

அந்தப் பாகுபாடுகளை இல்லாதொழித்த பெருமை இங்கு வந்தவர்களுக்கு உண்டு. அது ஒரு காலத்தில் மகிழ்வு தந்தாலும் பின்பு யார் பிரச்சனையைத் தொலைக்க வேண்டுமோ, அவர்களே அதைத் தேடிப்பிடித்து மார்பு தட்டிய மகா விந்தை இங்கு நடந்தது. அது அவர்களின் அறிவீனமாகக் ஹரியின் மனதில் படலாயிற்று. ‘தலைவர் எங்கட ஆட்கள்தானே? என்று கூறியதைக் கேட்கும் போது அவனுக்கு மனம் இரணமாக வெந்தது. இங்கும் கீரைக் கடைக்கு எதிர்க்கடை இல்லாது இருந்ததில்லை. மாற்றுச் சாதிக்காரனோடு பழகுகிறாளே என்பதற்காய் மகளை அல்லது மகனை வேற்று நாட்டுக்கு அனுப்பிய மேதாவிகளும் உண்டு. அங்கேதான் குட்டி யாழ்பாணங்கள் இருக்கின்றனவே, அவை சாதியைக் காப்பாற்றிக் கொள்ளும் என்கின்ற நம்பிக்கை அவர்களுக்கு. அனைத்துப் பிளவுகளும் துருவம் வந்து சேர்ந்த பின்பும் பதுங்கிய எரிமலைகளாக, சிலர் சுயநலத்திற்காய், தற்காலிகமாய் மறைக்கப்பட்டு இருப்பதாய் அவனுக்குத் தோன்றியது. இப்படியாக யோசித்த வண்ணம் நிற்கும் போது ஹரிக்குப் பின்னால் வந்து பூமணி நிற்பதை அவன் கவனிக்கவில்லை. அவள் அவனை ஆசையோடு பின்புறமாகத் தழுவினாள்.

‘என்ன கடுமையான யோசினை? என்றாள் காதிற்குள்.

‘இல்ல இந்தச் சனத்தைப் பற்றித்தான்.

‘ம்… உங்கட இயக்க அரசியல் புடுங்குப்பாட்டைவிட இன்னும் ஒரு பிரச்சனையும் இங்க இருக்குது. என்றாள்.

‘என்னது?

‘உங்க சனங்களப்பா இவை கலியாணம் கட்டி இவ்வளவு நாள்… அவை கலியாணம் கட்டி அவ்வளவு நாள் எண்ட கணக்கோட… இவைக்கு எத்தின பிள்ளை… அவைக்கு எத்தின பிள்ளையெண்டும் ஆராய்ச்சி செய்யினம். இதை வைச்சே எங்களத் தாக்கிற மாதிரி கதைய என்ர காதுபடச் சில சனங்கள் கதைக்குதப்பா. கேட்கச் சங்கடமாய் இருக்குது. அதுகள் மாதிரி மடிச்சுக் கட்டிக்கொண்டு என்னால சண்டைக்குப் போகேலாது. என்றாள் பூமணி.

‘ஓ இப்பிடியும் ஒரு பிரச்சனை இருக்குதா?

‘ஓமப்பா. ஆம்பிளையள் ஒரு மாதிரிக் கதைப்பினம். பொம்பிளையள் இன்னொரு மாதிரிக் கதைப்பினம். இப்ப சில ஆம்பிளையளே வெட்கமில்லாமல் பொம்பிளையளாட்டம் கதை கேட்டுக்கொண்டு திரிகினம். என்றாள் பூமணி தொடர்ந்து.

‘உதுக்கெல்லாம் என்ன செய்ய முடியும் பூமணி?

‘ஏனப்பா இந்தக் குளிருக்க இருக்கோணும் எண்டு கேட்கிறன்? அதுவும் மூஞ்சைய நீட்டிற சனத்தோட இருந்து ஏன் நாங்கள் கஸ்ரப்பட வேணும்? அதிலும் பார்க்கப் பேசாமல் ஒஸ்லோவுக்குப் போயிட்டா கொஞ்சம் நிம்மதியா இருக்கும்? என்று தன் ஆலோசனையோடு கூடிய விருப்பத்தைச் சொன்னாள்.

‘ஒஸ்லோவுக்குப் போனா நிம்மதியாகிடுமா? பிரச்சனையைக் கண்டு பயந்து ஓடுறமாதிரி இருக்காதா?

‘அப்பிடி ஏன் நீங்கள் நினைக்கிறியள்? பயந்து ஓடேல்ல, தேவையில்லாமல் ஏன் மடியிக்க தூக்கி வைப்பான். ஒஸ்லோவில நாங்கள் தலையை நீட்டாட்டி ஏனப்பா அங்க பிரச்சனை வருகுது? அது என்ன இப்பிடி சின்ன ரவுணே? என்றாள் பூமணி.

‘தேவை எண்டாலும் தலையை நீட்டாட்டிப் பிரச்சனை இல்லை எண்டுறியா?

‘ஏனப்பா இடுக்காக் கதைக்கிறியள்? நாங்களும் எங்கடபாடும் எண்டு இருப்பம் அப்பா. கனகாலத்துக்கே அப்பா இப்பிடி ஆடப்போகினம்? ஆடும்வரையும் அவை ஆடட்டும். எங்களுக்கு உந்தச் சில்லெடுப்பு ஒண்டும் வேண்டாமே? என்றாள் கெஞ்சுவது போல.

‘அநியாயம் நடக்கேக்க பேசாமல் இருக்கச் சொல்லுறியா?

‘நீங்கள் என்ன சிவனோ? விஸ்ணுவோ? பேசாமல் வாங்க அப்பா. நாங்கள் ஒஸ்லோவுக்குப் போவம். என்றாள் சினத்தை அடக்கிய வண்ணம்.

‘சரி… சரி… யோசிப்பம். ஹரி அந்தக் கதைக்கு முடிவுகட்ட எண்ணினான்.

‘என்ர மனசையும் விளங்கிக் கொள்ளுங்கோ அப்பா. என்று தனது பிரம்ம அஸ்திரத்தைப் பூமணி மெதுவாகக் ஹரி மீது பாவித்தாள். பெண்ணின் பிரம்ம அஸ்திரம், மன்மதனின் மலர்க்கணை இவற்றில் இருந்து ஆணுக்கு எங்கே பாவ விமோசனம்?

‘சரி மூவபண்ணுறது எண்டாலும் லேசான விஷயம் இல்லை. நான் விசாரிச்சுப் பார்க்கிறன். என்றான் ஹரி.

காலம் செல்லச் செல்ல வேலை குறைவாக இருந்தது. கிழமையில் ஒரு நாள் அல்லது இரண்டு நாட்கள் மட்டுமே வேலை செய்துவிட்டு, மீதத்திற்கு அரச உதவிப் பணத்தில் வாழவேண்டியதாகிற்று. அதைப் பயன்படுத்தி ஒஸ்லோவில் வேலை தேடுவதற்கு ஹரி வந்தான். அவனுக்கு அதிஸ்ரமாக ஒரு வேலை கிடைத்தது. பின்பு அவன் பூமணியையும் இங்கு அழைத்து வந்தான். பூமணியும் வந்த சிலகாலத்தில் வேலை செய்யத் தொடங்கினாள். அப்போது வீட்டு விலை மிகவும் குறைவாக இருந்தது. பொருளாதார இறக்கம் அதற்குத் துணை போயிற்று. அந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி வாங்கிய வீடே இது.

ஹரியைத் தொடர்ந்து ராமு ஒஸ்லோவிற்கு வந்தான். மற்றவர்களும் ஒவ்வொருவராக வந்து சேர்ந்தார்கள். சிலர் வேறு இடங்களுக்குச் சென்றார்கள்.

## அத்தியாயம் 29 மறுமுகம்

புதன்கிழமை பிற்பகல் வேலையால் வந்து சாப்பிட்ட பின்பு ஹரி சோபாவில் இருந்தான். அப்போது அந்தப் பொலிஸ் வாகனம் வந்து வீட்டின் முன் நின்றது. ஹரி எழுந்து சென்று கதவைத் திறந்தான். இன்று வந்தவர்கள் புதிய பொலிஸார். அவர்கள் வழமை போல அறிமுகம் செய்த பின்பு உள்ளே வந்து சோபாவில் அமர்ந்தார்கள். பூமணிக்கு எதுவுமே விளங்கவில்லை. எது எப்படி இருந்தாலும் அவர்களிடம் சென்று, அவர்களுக்குக் கோப்பியா அல்லது தேநீரா வேண்டும் என்று கேட்டாள். அவர்கள் கோப்பி என்றார்கள். பூமணி உள்ளே சென்று பில்ரர் கோப்பி தயாரிக்கத் தொடங்கினாள்.

வந்த ஆண் அதிகாரிக்கு ‘றய்டார் கன்சன் என்பது பெயர். மற்றவருக்கு ‘கெலேனா றொபேர்ற். இருவரும் சகசமாகப் புன்னகைத்துவிட்டு வீடு எப்படி உள்ளது என்பதைப் பார்ப்பது போலக் ஹரிக்கு யார் யார் நண்பர்களாய் இருக்கிறார்கள் என்பதை நோட்டம் விட்டனர். ஹரியின் கோலில் அப்படியான புகைப்படங்களை அவர்களால் அதிகம் காணமுடியவில்லை. அது அவர்களுக்கு ஏமாற்றத்தைத் தந்தது.

‘வெளியால வெயில் எறிக்கிறது. என்றார் றய்டார். இது சம்பாஷனையைத் தொடக்கும் ஒரு உத்தி என்பது ஹரிக்குப் புரியும். அவனும் அதை ஆமோதிப்பது போல,

‘ஓ நல்ல வெயில்தான். ஆனா வெளியால போனாச் சாதுவாகக் குளிரும். என்றான்.

‘அதெண்டா உண்மை. உங்கட நாடுமாதிரி இல்ல இங்க. என்றாள் கெலேனா.

‘சிறீலங்காவுக்குப் போயிருக்கிறீங்களா? என்று ஹரி கேட்டான்.

‘ஒரு முறை போயிருக்கிறன். பாதுகாப்புக் கெடுபிடி இல்லாட்டி நல்ல நாடு. ஒரு சுவர்க்கம் மாதிரி. என்றாள் அவள்.

‘எங்களுக்கு ஒரு உதவி வேண்டும். என்றார் றய்டார்.

‘என்ன அது? என்றான் ஹரி.

‘ராமு உங்களுக்கு நெருங்கிய நண்பர் இல்லையா? என்றார் அவர்.

‘அப்பிடிப் பெரிசா குளோஸ் எண்டில்ல. சும்மா பழக்கம்.

‘உங்களுக்கு அவர் நல்ல பிறண்ட் எண்டு குகன் சொல்லி இருக்கிறார்?
பூமணி கோப்பியைக் கொடுக்க அதை வாங்கியவர்கள் ஒருமுறை உறிஞ்சிவிட்டு சம்பாஷனையைத் தொடர்ந்தார்கள்.

‘அதுக்கு என்ன சொல்லுறியள்? என மீண்டும் ஹரியைப் பார்த்து அந்த அதிகாரி வினாவினார்.

‘அவருக்கு அப்பிடித் தெரிஞ்சிருக்கலாம். ஆனா நாங்கள் அப்பிடிப் பெரிய குளோஸ் பிறண்ஸ் கிடையாது. சும்மா நண்பர்கள். அவ்வளவுதான். என்றான் ஹரி.

‘நீங்கள் வார்டோவில இருந்தியள் இல்லையா? என்றார் அந்த அதிகாரி.

‘அதாலதான் அவர் பிறண்டே. இல்லாட்டி அவர் பிறண்டாகவே இருந்திருக்க முடியாது. என்றான் ஹரி.

‘இப்ப அவர் எங்க இருக்கிறார்? என்றார் அந்த அதிகாரி.

‘அவற்ற வீட்டிலதான் இருப்பார். ஹரி அவனது முகவரியைச் சொன்னான். அவனுக்குத் தலை அம்முவது போல இருந்தது.

‘அவர் அங்க இல்ல. எங்க போயிட்டார் என்று உங்களுக்குத் தெரியுமா?

‘தெரியாது. எனக்கு அவர் சொல்லேல்ல.

‘சரி உங்களிட்ட வந்தாலோ, உங்களோட தொடர்பு கொண்டாலோ எங்களுக்கு அறியத்தரமுடியுமா?

‘ஓ தாராளமா.
அவர்கள் தங்கள் விசிற்றிங்காட்டைக் கொடுக்க, அதைக் ஹரி வாங்கி வைத்துக்கொண்டான்.
அதன் பின்பு அவர்கள் பொதுவாகச் சில விடயங்கள் கதைத்தார்கள். பின்பு திடீரென,

‘இப்போதும் பணம் கேட்கிறார்களா? என்றார் றய்டார்.

‘யாரைக் கேட்கிறீர்கள்? என்று ஹரி திருப்பிக் கேட்டான்.
அவர் முதலில் சிரித்தார். பின்பு,

‘உங்களுக்குத் தெரியும். என்றாலும் சொல்கிறேன். எல்.ரி.ரி பற்றித்தான் கேட்கிறேன். எங்கள் நாட்டில் இருந்த முக்கியமானவர்கள் சிலர் இப்பொழுது உள்ளே இருக்கிறார்கள். என்றார் அந்த அதிகாரி சிரித்தவண்ணம்.

‘குற்றம் செய்தவர்கள் உள்ளே இருக்கத்தானே வேண்டும். ஆனால் அவர்கள் என்றும் என்னிடம் பணத்திற்கு வருவதில்லை. என்றான் ஹரி.

‘குற்றம் செய்தவர்கள் தப்பியும் ஓடுவார்கள்? என்றார் அந்த அதிகாரி.

‘அல்லது சரணடைய வேண்டும். என்று முடித்தான் ஹரி.

‘ராமுவிற்கு எது வசதி? என்றார் அந்த அதிகாரி. மீண்டும் அவர் சிரித்துக் கொண்டார்.

‘தெரியவில்லை. அவரிடம்தான் நீங்கள் இதைக் கேட்கவேண்டும். என்றான் ஹரி.

‘காத.

‘காத.

அவர்கள் புறப்பட்டுச் சென்றுவிட்டார்கள். ஹரியின் மனதை என்றும் இல்லாத குற்ற உணர்வும், சோகமும் இன்று அழுத்திப் பிழிந்தது.

*

ஒரு கிழமைக்கு முன்பு அன்று ராமு வியர்க்க விறுவிறுக்க ஹரியின் வீட்டிற்கு வந்தான். அவனின் அந்தக் கோலத்தைக் கண்ட ஹரிக்கு அதிர்ச்சியாகிற்று.

‘என்ன ராமு? என்ன கோலமிது? ஏன் இவ்வளவு அந்தரப்படுகிறாய்? எனக் ஹரி அக்கறையோடு வினாவினான்.

‘அண்ண என்னைப் பிடிக்க அலையுறாங்கள். நான் நோர்வையவிட்டுப் போகவேண்டிய காலம் வந்திட்டுது. என்றான் திடீரென.

‘என்ன சொல்லுறா ராமு? உனக்கு என்ன பைத்தியமே? எனக் ஹரி கவலையோடு அவனைக் கேட்டான். ஹரியால் அவன் கூறியதைத் துளியும் நம்ப முடியவில்லை.

‘இல்லையண்ண உண்மையாத்தான் என்னப் பிடிக்கத் திரியுறாங்கள். இண்டைக்கு நான் வீட்டில இருந்து வெளிய வரேக்க கவனிச்சன். ஒரு வாகனத்தில் இரண்டு சிவில் பொலிஸ் என்னை நோட்டம் பாக்கிறாங்கள். எனக்கு அவங்களைப் பார்த்த பிறகு உடம்பெல்லாம் வேர்த்து விறுவிறுத்துப் போச்சுது. என்ன செய்யிறதெண்டும் விளங்கேல்ல. பிறகு மோத்ன்ஸ்றுட்டில காரை விட்டிட்டு தேவாணில இங்க வந்தன். இங்க வந்தாலும் வந்திடுவாங்கள். அது உங்களுக்கும் பிரச்சனையாகிடும். நான் கெதியாப் போகோணும் அண்ண. என்ற வண்ணம் அவதிப்பட்டான்.

'நீ என்னடா கதைக்கிறாய்? நீ கதைக்கிறது எல்லாம் எனக்கு இப்ப மர்மமாக் கிடக்குது. உன்னை ஏன்ரா பொலிஸ்சு துரத்தோணும்? நீ ஒரு அப்பாவியடா. என்றான் ஹரி.

'ஹரியண்ண நீங்கள்தான் அப்பாவி. மின்னுகிறது எல்லாம் பொன்னெண்டு நினைச்சிட்டியள். உங்களுக்கு என்னுடைய ஒரு பக்கம்தான் தெரியும். என்னுடைய மறுபக்கம் தெரியாது. அது ஒரு கொடூரமான பக்கம் அண்ண. அது என்ர மனதையே மனைஞ்சு சிதல்கட்டி இருந்திச்சுது. இப்பதான் அதில இருந்த சிதல் வெளியேறி இருக்குது. என்றான் ராமு.

'இப்ப என்ன சொல்ல வாறா? அதிர்ச்சியோடு பொறுமை இழந்தவனாய் இரைந்தான் ஹரி.

'சொல்லுறன். நான் துறம்சோவில ஒரு இடத்தில இருந்தன். அங்க மொத்தமாக நாலு தமிழ் குடும்பமும், ஏழு பெடியளும் இருந்தம். வார்டோவில பிந்தித் தொடங்கின பிரச்சனை அங்க அப்பவே தொடங்கீட்டுது. என்னைப் பொறுத்தவரையும் அரசியல் தொலைநோக்கு அற்ற, அரசியல் சாணக்கியம் விளங்காத, வல்லரசுகளின் பலம் புரியாத, தங்கள் பலவீனம் உறைக்காத, உலக மாற்றத்தை உள்வாங்காத, அதனால் போராட்டங்களில் ஏற்படும் அழுத்தங்களில் அக்கறை கொள்ளாத, அதற்கேற்ப இசைவாக்கம் அடையும் தன்மை அற்ற, எதற்கும் கொலையே பதில் என்கின்ற நிலையை மட்டுமே நம்புகின்ற, ஒரு தனிமனிதனைச் சுற்றி அமைக்கப்பட்ட அமைப்பும், அதன் இராணுவமும், சில நிலப்பரப்பைக் குறிப்பிட்ட காலத்திற்குத் தக்க வைத்திருக்கும் தந்திரத்தைப் பயின்றாலும், மக்களுக்கு எந்தவித நிரந்தர விடுதலையை அல்லது சுதந்திரத்தை பெற்றுத்தர முடியாது என்பதில் தெளிவாக இருந்தன். கிட்லரின் எனது போராட்டத்தில் மூழ்கிய போது அவனது தத்துவங்களில் சிலதை எமது போராட்டத்தில் கற்றுக்கொள்ள முடிந்தது. அது என்னை அதிர வைத்தது. தொலைநோக்கு அரசியல் இல்லாத சுயநலப் போராட்டத்தால் யாருக்கும் எந்த நன்மையும் வராது என்பது எனக்குத் திடமாகப் புரிந்திற்று. இவர்களின் நில ஆக்கிரமிப்புகள் மன்னர் காலத்து நில ஆக்கிரமிப்பைவிட மாறுபட்டதாய் எனக்குத் தெரியேல்ல. அம்புக்கும் வில்லுக்கும் பதிலாக பல்குழலும், றொக்கற் லோஞ்சரும், பீரேங்கிகளும் மாறியிருந்தன.

அவர்கள் வார்த்தைகளில்... செய்கைகளில்... இது மண்ணுக்கான போராட்டம் எண்டு மட்டுமே தொடர்ந்தும் ஒலிச்சுது. இது மக்களுக்கான போராட்டம், உரிமைக்கான போராட்டம் எண்டுறது ஒருநாளும் மூர்க்கமான நம்பிக்கையோடு முன்னுக்குக் கொண்டுவரப்படேல்லை. என்னால் இதை ஒரு மக்கள் போராட்டமாய் ஒப்புக்கொள்ள முடியயேல்லை. அதால எனது சிந்தனைக்கு ஏற்ப என்னால் இவர்களுக்கு ஆதரவு கொடுக்க விருப்பம் இல்லை. அப்படி இருக்கும் போது வில்லங்கத்திற்குப் பணம்

தரவேண்டும், பொதுப்பணங்களை ஆயுதம் வாங்க அனுப்ப வேண்டும் என்பதாக அழுத்தம் தந்தது எனக்கு அறவே பிடிக்கவில்லை.

ஒரு நாள் காசு சேர்ப்பதற்கு எனது அறைக்கு அவர்கள் வந்தார்கள். நான் பணம் தரமுடியாது என்று மறுத்து விட்டேன். அத்தோடு ஏன் தரமுடியாது என்பது பற்றியும் விளக்கம் கொடுத்தேன். அங்கு வாதப்பிரதி வாதங்கள் சூடு பறந்தன. அதில் எதிர்த்து வாதிட முடியாதவர்கள்… ஒற்றைக்கு ஒற்றையாக நிற்க முடியாதவர்கள்… அப்பொழுது போய்விட்டார்கள்.

இரவு யாரோ வந்து கதவைத் தட்டினார்கள். நான் அப்போது அங்கு மனிதர்கள்மேல் நிலவிய நம்பிக்கையில் கதவை யோசிக்காது திறந்தேன். நான் நிதானிக்க முதல் என் தலையில் திடீரென விழுந்த ஒரு அடியில் நான் தடுமாறி நிலத்தில் விழுந்துவிட்டேன். அது ஏதோ ஒரு உலோகத்தால் அடித்தது போன்ற உணர்வு. எனக்குச் சிறிது நினைவு இருந்தது. என்னை நான்குபேர் சேர்ந்து சப்பாத்துக் காலால் உதைத்தார்கள். முகத்தை மறைத்து இருந்த அவர்கள் தமிழில் கதைத்ததும் எனக்குத் தெரியும். புலிக்கு எதிராகக் கதைத்தால் இதுதான் தண்டனை என்று கூறிக்கூறிக் கோழைத்தனமாக மீண்டும் மீண்டும் உதைத்தார்கள். நான் சிறிது நேரத்தில் மயங்கிப் போய்விட்டேன்.
நான் மீண்டும் விழித்த போது துறம்சோ ஆஸ்பத்திரியில் இருந்தேன். எனக்கு அவர்கள் ஆறுமாதம் பயிற்சி தந்தார்கள். அதன் பின்பு நான் வார்டோவுக்கு வந்தேன். அங்கும் அதே நிலையைப் பார்த்தபோது மனதிற்குள் சினம் சினமாய் பொங்கியது. என் மனதை இயலுமானவரை கட்டுப்படுத்தி வைத்திருந்தேன். இதனால் இலங்கையில் இருக்கும் எனது உறவுகளின் உயிருக்கு ஏதாவது ஆபத்து வந்துவிடக்கூடாது என்கின்ற எச்சரிக்கை என் பின் மூளையில் எப்போதும் அபாய விளக்காக எரிந்துகொண்டே இருந்தது.

ஊரிலே இருந்த தாதாக்கள் போல, இங்கு வலம்வந்த தாதாக்களைக் காணும் போதெல்லாம் என் சினம் பொங்கும். கொல்ல வேண்டும் என்கின்ற வெறி மேலோங்கி நிற்கும். காலம், சூழ்நிலை காரணமாக அதை அடக்க முடியாது அடக்கி வைத்திருந்தேன்.

இறுதி யுத்தம் புஸ்வாணமாக முடிந்த பின்புதான் தாதாக்களின் மேல் எனக்கு இழைக்கப்பட்ட அநீதிக்கான தண்டனையை வழங்கும் சந்தர்ப்பம் ஏற்பட்டது. முதலில் என்னிடம் அகப்பட்டவன் சிவகரன். இவனும் என்னை அடித்தவனில் முக்கியமான ஒருவன் என்பது எனக்குத் தெரியும். அந்தத் திட்டத்தை உருவாக்கித் தலைமை தாங்கிச் செயற்படுத்தியதும் அவன் என்பதும் எனக்குப் பின்பு தெரிய வந்தது. அதில் இருந்து நான் அவனைக் கண்காணித்து வந்தேன். அவருக்கான காலம் அவர் வேண்டிய கித்தையிலேயே முடிவதாயிற்று.

அதன் பிறகு பாலனுக்கும் கிட்டத்தட்ட சிவகரனைப் போல முடிவு கொடுக்க வேண்டும் என்று திட்டம் தீட்டிச் செயற்பட்டேன். ஆனால் அவனது நல்ல காலம் யாரோ உலாப் போனவர்கள் இடையில் வந்து காப்பாற்றி விட்டார்கள்.

அதன் பின்பு சங்கரின் வீட்டிற்குத் தீவைத்தது நான்தான். அவனும் குகனும் நன்றாகக் கொளுவிக் கொண்டு வெட்டுப்படட்டும் என்பதே அதன் நோக்கம். அவர்கள் வீட்டை முழுதாக எரிப்பதோ அல்லது அவர்களைக் கொலை செய்வதோ எனது நோக்கம் அல்ல. சங்கரும், குகனும் வார்டோவில் ஆடிய ஆட்டம் எனக்கு இன்றும் பசுமையாக மனதில் நினைவு இருக்கிறது. ஒருவகையில் சங்கரைப் பார்க்க இப்போது பாவமாய் இருந்தாலும், இவர்களின் கைங்கரியத்தால் இப்படி எத்தனை ஆயிரம் மக்களின் வாழ்க்கை சீரழிந்திருக்கும்? அதற்கு இவர்கள் பதில் சொல்லவேண்டியது கட்டாயம். கடமையைச் செய் பலனை எதிர்பாராதே என்பது போல் நான் என்பணி செய்ததாகவே எண்ணுகிறேன்.

பின்பு குலத்தை மாட்டி வைத்ததும் நானே. குலத்தைப் பிடித்த போது எனக்கு இருந்த கோபம் செத்துப்போய்விட்டது. மனதில் மனைந்திருந்த காயத்தின் சிதல் வடிந்துவிட்டது. அவனைத் துன்புறுத்தாமல் சிக்கவைக்க வேண்டும் என்பதே எனது நோக்கமாகிற்று. அதன்படி செய்தேன்.

என்னைப் பொறுத்தவரையிலும் தமிழரின் இருப்பைப் போராட்டம் என்கின்ற பெயரில் இலங்கையில் நிலைகுலையச் செய்த அனைவரும் எமது இனத்தின், எமது மொழியின் எதிரிகள் அல்லது அறிவிலிகள். அவர்கள் பாசையில் துரோகிகள். நான் உயிரோடு இருக்கும் மட்டும் அந்த எண்ணம் என்னிடம் இருந்து அகலாது. எதனால் எம்மினம் அழிந்தது என்று எதிர்கால வரலாறு சொல்லும். போராட்டம் என்கின்ற பெயரில் நாமே நம் இனத்தை அழித்ததை யாரும் மறுக்க முடியாது. அவன் செய்ய நினைத்ததை நாங்கள் செய்து முடித்தோம் என்பது காலத்தால் மாறாத அவமானம். அறிவீனம். என்னால் அதை மன்னிக்க முடியாது.

இப்பொழுது எனது காரின் நம்பர் பொலிசிற்குக் கிடைத்து விட்டது என்பது எனது ஊகம். என்னை அவர்கள் எப்போதும் கைது செய்யலாம். நான் இனி மேற்கொண்டும் இங்கு இருப்பது பாதுகாப்பில்லை என்பதால் நாட்டை விட்டு வெளியேறுகிறேன். நீங்கள்கூட எப்படி வெளியேறுகிறேன், எங்கே வெளியேறுகிறேன் என்று என்னைக் கேட்டு விடாதீர்கள். பொலிசிடம் என்னைப் போட்டுக்கொடுத்து விடாதீர்கள். உங்களிடம் மட்டும் ஏதோ பாவமன்னிப்புப் போல இதைச் சொல்லவேண்டும் போல் இருந்தது. சொல்லிவிட்டேன். இயலுமாயின் சில வருடங்களின் பின் உங்களுடன் நான் தொடர்பு கொள்கிறேன். என்று முடித்தான் அவன்.

‘அப்படி என்றால் வனிதா அக்காவுக்கு அடித்தது?

‘நான் செய்யவில்லை அண்ணா. நான் அப்படியான கோழையும் அல்ல. பெண்ணை அடிக்கும் பேடியோ அல்லது மனநோயாளியோ இல்லை.
பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்கின்ற வன்மம்கூட இப்போது அறவே செத்துப் போய்விட்டது. அர்ச்சுனன் கீதையைக் கேட்டுக் காண்டீபத்தைக் கையில் மீண்டும் எடுத்தான். நான் வன்முறையைக் கையில் எடுத்ததிற்காய் இப்போது கவலைப்படுகிறேன். தூங்கிய மிருகம் விழித்தது. அது மீண்டும் தூங்கப் போய்விட்டது. இப்போது அதைக் கொன்றிருக்க வேண்டும் என்கின்ற உண்மை புரிகிறது. இந்த ஞானம் எனக்கு வருவதற்கு முக்கிய காரணம் நீங்கள்தான் அண்ணா. உங்களோடு இருந்தும் நான் இப்படி நடந்து கொண்டதிற்காய் என்னை மன்னிக்க வேண்டும்.
இங்கு இருந்து போகும் போதும் மீண்டும் நாடில்லாத அகதியாகப் போகிறேனே என்பது என் நெஞ்சைப் பிழிகிறது. எங்கள் நாடாக எங்களால் உணரக்கூடிய ஒரு தேசம் இல்லையே அண்ணா? எங்களுக்கு மட்டும் என்று உரிமை பாராட்டக்கூடிய ஒரு நாடு இல்லையா அண்ணா? இருக்கட்டும். ஒன்றை நன்கு நினைவு வைத்திருங்கள். மற்றவர்களுக்கும் எடுத்துச் சொல்லுங்கள்.

எங்கள் ஆயுதப் போராட்டம் நிச்சயமாக முடிந்துவிட்டது. அது நிரந்தரமாக மௌனித்துவிட்டது. அது அப்படியே தொடர்ந்தும் மௌனிக்க வேண்டும். ஆனால் எங்கள் உரிமைப் போராட்டம் அதை வென்றெடுக்கும் வரை தொடரும். அது ஈழத்தில் பிறந்த எங்கள் ஆத்மாக்களோடு நிரந்தரமாக ஒட்டிக்கொண்டவை. போராட்டத்திற்கு விடிவில்லாது ஒரு முடிவில்லை. ஆத்மாக்களுக்கு முடிவே இல்லை.
என்று அவன் கூறிக்கொண்டு நிற்கும் போது திடீரெனப் பொலிஸ் வாகனம் ஒன்று தெருவால் சென்றது. ராமு தன்னைக் கட்டுப்படுத்த முடியாது பின்வளவை நோக்கி ஓடினான். அவன் ஓட்டம் நிற்கவில்லை. பொலிஸ் வேறு எங்கோ சென்றது. ராமு பின்வளவால் ஓடியதைக் ஹரியால் சகித்துக்கொள்ள முடியவில்லை. என்றாலும் வன்முறை அற்ற உரிமைப் போரை மேற்கொள்ளும் ஒவ்வொரு ஆத்மாக்களுக்கும் பலம் சேர்க்க வேண்டும் என்று ஹரிக்குத் தோன்றியது.

யாவும் கற்பிதமே.

–முற்றும்–